வெளியீடு எண் 123.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# முருகன்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தோன்றாவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகள்**
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது.




திருவாவடுதுறை ஆதீனம்
1958

உ
சிவமயம்

வளநிலவு குலஅமரர் பதியாய் நீல
　　மயிலேறி வரும்ஈசன் அருள்ஞான மதலை
அளவில்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
　　அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்விற லெண்ணு
உளமருவு சூரனுரம் எமதிடும்பை ஓங்கல்
　　ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வேல் உகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த
　　கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம்.

— ஸ்ரீ உமாபதி சிவாசாரியார்.

உ

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின்
ஜன்மநக்ஷத்திர நன்னாளில் நல்லாசியுடன்
இந்நூல் வழங்கப்பெறுகிறது.

10—4—59

உ

## கொடைமங்கலம்



இப்பிர பஞ்சத்தே எல்லோரும் ஈடேறச்
சுப்பிர மண்யராந் தோன்றலவர் – திப்பியமாம்
இம்முருகன் என்னுநூல் எல்லாரும் பேருவகை
விம்ம அளித்தார் விரைந்து.

முருகாவென்(று) உள்ளம் உருகு மனத்தார்
திருகாமல் ஓங்கிச் செழிக்க – ஒருமுகமா
ஓர்ந்துய்யத் தக்க ஒருநூல் உதவினர்
தேர்ந்திடு சுப்ரமண்யத் தே.

கலியுகத் தெய்வமாங் கந்தன் உருவம்
மலிதலுறும் இந்த மகிழ்நூல் – விலையின்றி
வேண்டி மிகக்கற்று வேண்டியவா வாழ்ந்திடுக
ஈண்ட அருள்பலவும் ஏற்று.



திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

21-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்

# முகவுரை

முருகன், அன்பர்கள் விரும்பியவண்ணம் அச்சுவாகனம் ஏறி, இப்போது உலா வருகிருர். செந்தமிழ்நாட்டில் செவ்வேள் பெருமையை அறியாத மக்கள் இல்லை. செந்தமிழ்மக்கள் திருவுள்ளம் ஒவ்வொன்றுமே முருகன்கோயில். அன்பர்கள் எத்தகைய பரிபாகநிலையிலிருந்து அவனை நினைக்கின்ருர்களோ அவர்கள்நிலைக்கு ஏற்ப முருகன் திருமேனிதாங்கி வந்து அருள் வழங்குகின்ருர். கண்ணுக்கெதிரே மலைபோலத்தோன்றும் பொருள்களையும் மறுத்துரைக்கும் மதிசிறந்த இக்காலத்தும் முருகன் கண்கண்டதெய்வமாகக் காட்சி வழங்குகின்றதைப் பல அன்பர்களின் அனுபவத்தைக்கொண்டும், அவர்கள் வாழ்க்கை தெய்வ வாழ்க்கையாகத் திகழ்வதைக்கொண்டும் துணியலாம்.

இத்தகைய முருகப்பெருமானைப்பற்றிய முழுவரலாறுகளையும் சுருக்கமாகவேனும் ஒவ்வொரு தமிழ்மகனும் உணரவேண்டியது மிக இன்றியமையாதது. அதற்கு ஓரளவு உபகாரமாக இந்த ஆராய்ச்சி நூல், பலநூல்களின் துணைக்கொண்டு இருபதுக்கு மேற்பட்ட தலைப்புக் களில், திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்தொன்ருவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகளவர்கள் திருவருளாணைவண்ணம் எழுதப்பெற்று வெளிவருகின்றது. உயர்ந்த கருத்துக்களை எளியநடையிலே சொன்னல் எல்லோரும் இன்புறுவார் களே என்ற எதிர்நோக்குடன் பெரும்பாலும் உலகவழக்குச் சொற்களைக் கொண்டு, சமயவரம்பும் இலக்கணவரம்பும் கூடியவரை தவருது இந்த நூலின்நடை இயங்குவதாயிற்று. நூல் ஆராய்ச்சி, வரலாறு, தத்துவம், ஆகமம், உபாசனை என்ற ஐந்து பெரும்பிரிவுகளாக எழுதப்பெற்றது.

**கண்கண்ட தெய்வம்:** கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாகத் திகழும் செவ்வேள், சொல்லிலே இன்பந்தரும் தூய கற்கண்டாக, இன்பவடிவாக, உயர்ந்தப்பண்புகளெல்லாம் ஒருங்கமைந்த உயர்தனிச் செம்பொருளாக விளங்குவதை இப்பகுதி விளக்கிக்காட்டுகிறது.

**செந்தமிழ்த் தெய்வம் :** இப்பகுதி, செந்தமிழ்க்கும், செவ்வேட் பெருமானுக்குமுள்ள தொன்மையுறவுகளை எடுத்துச்சொல்லி, எச்சமயத் தவராலும் எந்தெய்வம் எந்தெய்வம் என முருகன் போற்றப்படுகிறார்; இயற்கைகளைப் படைத்து நமக்கெல்லாம் இன்பமூட்டி நினைப்பவர் மனம் கோயிலாகக்கொண்டு, பிள்ளைமைப் பருவத்தும், இடைநிலைப் பருவத்தும், கிழப்பருவத்தும் மக்களனைவராலும் போற்றப்படும் உயர் தனிக் கடவுளாய், அநாதி நித்தமாய், முதற்கடவுளாய் விளங்குகிறார் என்பவற்றை விளக்குகிறது.

**விழாவும் பூசையும் :** கற்றறிந்தவர்கள் செய்கின்ற விதிமுறைப் பூசையும், பொதுமக்கள் செய்கின்ற அன்புநெறிப்பூசையும் இந்தப் பகுதியில் அறிவிக்கப்பெறுகின்றன.

**அன்பும் ஆடலும் :** இப்பகுதி, அச்சத்தால் விளையும் அச்சத்தைக் காட்டிலும் அன்பால் விளையும் அச்சமே மக்கட்கு உண்மை ஒழுக்கத் தையும் உயர்வுகளையும் தரவல்லது ஆதலின், மக்கள் முருகனிடத்து அளவுகடந்த அன்பு செய்கின்றனர்; தங்கள் திருமணக்காலத்துச் சபதம் செய்யும் தெய்வமாகக் கொள்கின்றனர்; எஞ்ஞான்றும் இடையூறு வாராமல் காப்பவன் முருகனே என்ற எதிர்நோக்கு மக்களிடம் குடிகொண்டிருக்கிறது ஆதலால் அவர்கள் பலவகைக் கூத்துக்களை ஆடி முருகனை மகிழ்விக்கின்றனர் என்ற உண்மைகளை உணர்த்துகிறது.

**தமிழ்நூல்களில் முருகன் :** இத்தலைப்பு தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், திருமுறைகள் ஆகிய இவைகளில் முருகன் விளங்குமிடங்களை விரித்து விளக்குகிறது.

**வேதாகமங்களில் முருகன் :** இருக்வேதம், சாந்தோக்யம், சுப்பிர பேதம், உத்தரகாமிகம், குமாரதந்திரம் முதலான வடமொழித் தொன் னூல்களின் துணைக்கொண்டு முருகன்தொன்மை துணியப்பெறுகிறது. மேலும் வான்மீகம், பாரதம், பாத்மபுராணம் போன்றவற்றில் முருகன் வரலாறுகள் காணப்படுகின்றன. ஆனாலும் அவற்றுள் சிலவற்றில் முருகன் பெருமைக்கும், தகைமைக்கும், தத்துவ அமைதிக்கும் தகாத

பலநிகழ்ச்சிகள் குறிப்பிடப்படுவதை எடுத்துக்காட்டி, அவை புறச்சமயப் பற்றுடையார் புகுத்திய புதுமை வரலாறுகள் என்பதும் இப்பகுதியில் விளக்கப்பெறுகின்றன.

**பெயர்களும் காரணமும்:** இப்பகுதி, இலக்கியவுலகில் வழங்கும் முருகப்பெருமானுக்கு உள்ள மறுபெயர்களை, அவ்வவற்றிற்கு உரிய காரணத்தோடு வரலாறும் தோன்ற உரைக்கிறது.

**திருவுருவ அமைப்பு:** இப்பகுதி, திருமுருகாற்றுப்படையிலே கூறப்பெற்றவண்ணம் முருகப்பெருமானது ஆறு திருமுகங்களும், அவ்வவற்றிற்கு உரிய திருக்கரங்களும், அவ்வவற்றின் தொழில்களும் தியானத்திற்கு ஏற்பச் சித்திரிக்கப்பெற்றுள்ளதைத் தெரிவிக்கிறது.

**திருவுருவ வகைகள்:** பல ஆகமங்களிலும் புராணங்களிலும் கூறப்பெற்றுள்ள தியான சுலோகங்களின்வண்ணம் முருகப்பெருமானுடைய பதினாறுவகையான திருவுருவங்களின் இயல்புகளை இந்தப் பகுதி தெரிவிக்கிறது. மேலும், சிற்பசாஸ்திரவகையாக வேறாக உள்ள பதினெட்டு வகைகளின் திருவுருவ அமைப்பும் உரைக்கப்படுகிறது.

**கந்தபுராண வரலாறு:** கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் அருளிச் செய்த கந்தபுராண வரலாறு முழுவதும் இப்பகுதியில் தொகுத்துத் தரப்பட்டிருக்கிறது.

**கந்தபுராண தத்துவம்:** இப்பகுதி, புராணவரலாறுகள் நமது சைவசித்தாந்த சாஸ்திர அமைதியுடையன; தத்துவ அடிப்படையிலே அமைந்தன; கடவுளர் அவதார வரலாறுகள் அனைத்துமே தத்துவ சாஸ்திர விளக்கங்கள் என்ற முடிவை வலியுறுத்துகிறது.

**பிற வரலாறுகள்:** இதில் பலவேறு தலபுராணங்களிலும் பிற புராணங்களிலும் காணப்படும் முருகப்பெருமானுடைய வரலாறுகள் தொகுத்துத் தரப்பெறுகின்றன.

**சில வழக்காறுகள்:** முருகன் திருட்டுக்கு நூல் செய்தமையும், பாம்பு வழிபாடும் முருகன் வழிபாடும் ஒன்றாகக் கருதப்பெறுவதன் அடிப்படைக் காரணமும் இதில் அறிவிக்கப்பெறுகின்றன.

**முருகன் விரதங்கள்:** இந்தப்பகுதியில் வெள்ளிக்கிழமைவிரதம், கார்த்திகைவிரதம், சஷ்டிவிரதம் முதலியனவும் அவற்றை அனுஷ்டிக்கும் முறைகளும் பயனும் மொழியப்படுகின்றன.

**முருகன் தலங்கள்:** ஆறு திருப்படைவீட்டைப்பற்றிய குறிப்புக்கள் சங்ககாலத்தில் எந்த எந்த நூல்களில் கூறப்பெற்றுள்ளன என்பதும், அவ்வத்தலங்களிலுள்ள சிறப்புக்குறிப்புக்களும், பிறவும் இப்பகுதியில் விளக்கப்பெறுகின்றன.

**முருகன் ஆயுதங்கள்:** இப்பகுதி, பலவேறு திருவுருவங்கள் கொண்ட முருகன் திருக்கரத்து விளங்குகின்ற ஆயுதங்களைப்பற்றிய குறிப்புக்களை, சிற்பநூல் முறைப்படித் தெரிவிக்கின்றது.

**கௌமாரமதம்:** முருகப்பெருமானையே முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபடவேண்டும் என்பதும், முத்தியை முருகப்பெருமானுடைய திருவடிப்பேறு எய்துதலே என்பதும் அதன்முடிபு என்பதைச் சுருக்கிக் கூறுகின்றது இப்பகுதி.

**பரிவாரங்கள்:** இந்தத்தலைப்பில் வெள்ளானை, மயில், வீரவாகு முதலிய நவவீரர்கள், துவாரபாலகர், சுமித்திரசண்டர் முதலிய பரிவாரங்களின் இயல்பும், அவரவர்களுக்குரிய கோயிலை அமைக்கும் இடமும், அளவும், அமைப்புமுறையும் அறிவிக்கப்பெறுகின்றன.

**வழிபாட்டுமுறை:** இப்பகுதியில் சிவாகமவிதிப்படி அன்றாடம் பூசைசெய்யும் முறை விரிவாகக் கூறப்பெற்றுள்ளது. திருவிழாக்களாக மாசோத்ஸம், பக்தோத்ஸவம், பிரமோத்ஸவம் இவற்றின் முறைகள் மிகச்சுருக்கிக் கூறப்பெறுகின்றன.

**அருள்பெற்றோர்:** இப்பகுதியில், அகத்தியர் முதலாக, தண்டபாணிசுவாமிகள் ஈறாகப் பல அன்பர்களுடைய வரலாறுகள் சுருக்கித் தரப்பெற்றுள்ளன.

**உபாசனை:** இவ்வண்ணம் முருகன் பெருமையை உணர்ந்த மக்கள் வழிப்பட்டு உய்ய மந்திரங்களும், யந்திரங்களும், முறைகளும் தொகுத்து இப்பகுதியில் எழுதப்பெற்றுள்ளன.

தொகுப்புரையில் எல்லாக்கருத்துக்களும் மிகச் சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளன. இவ்வண்ணம் இந்த நூல் இனிது முடிகிறது.

இத்துணைச்சிறப்புடன் இந்நூல் இனிது எழுத ஆராய்ச்சிக்குப் பல நூல்கள் தேவையாக இருந்தன. இதன்பொருட்டு அடியேனுக்கு எழுந்த அறிவுத்தாகத்தைப் பெரிதும் தணித்த கற்பகப்பூங்கா திருவாவடுதுறை ஆதீனத்திலுள்ள சரஸ்வதிமகால் புத்தகசாலையாகும். மகாவித்துவான் பிள்ளையவர்கள், மகாமகோபாத்தியாய ஐயரவர்கள், சேற்றூர்ச் சுப்பிரமணியக்கவிராயர், கந்தசாமிக்கவிராயர், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர், சபாபதி நாவலர், சுவாமிநாத பண்டிதர், பொ. முத்தையாப் பிள்ளை, திருஞானசம்பந்தம்பிள்ளை என்ற தீட்சா நாமம் பெற்ற இராமசாமிப்பிள்ளை முதலான பல பேரறிஞர்களுடைய ஞானதாகத்தைத் தணித்த இடம் இதுவே. இங்கே அடியேனுடைய ஆராய்ச்சிக்குவேண்டிய பல ஆகம நூல்களும், பிற வடமொழி நூல்களும், தமிழ் நூல்களும் கிடைத்தன. அவற்றின்துணை இல்லையேல் இந்நூல் இத்துணை அழகோடு முடிந்திராது என்பது உறுதி. மேலும் தேவைப்பட்டபோது சில நூல்களை, பழநி, சித்தாந்தசரபம், மகாமகோபாத்தியாய சிவஸ்ரீ ஈசான சிவாசாரியசுவாமிகள்போன்ற சிறந்த அறிஞர்கள் தந்துதவினுர்கள்.

சில சக்கர அமைப்புக்களையும், மந்திர சாஸ்திர நுணுக்கங்களையும் அறிய உதவியாயிருந்தது, தஞ்சை சரஸ்வதிமகால் நூல்நிலையம். அதன் கௌரவச்செயலாளர் திரு. S. கோபால ஐயர் B. A., B. L. அவர்கட்கும், சகலகலா விற்பன்னர் திரு. R. வாசுதேவ சாஸ்திரிகள் அவர்கட்கும் என் நன்றி. சிறந்த மந்திரக்குறிப்புக்களைத் தந்துதவிய என் நண்பர் வித்துவான் திரு. ந. சிவப்பிரகாசதேசிகர் அவர்கட்கும் என் நன்றி. மற்றும், ஈழத்தன்பர்கள் பலர் பத்திரிகைக் கட்டுரைகளையும், வரலாற்றுக் குறிப்புக்களையும் தந்துதவினர். இவ்வண்ணம் முருகன் திருவருளும், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் குருவருளும், பல அன்பர்களின் உதவியும்சேர்ந்து இந்நூல் இவ்வண்ணம் உருப்பெற்றது.

இந்த நூல் சிற்பத்திறஞ்செறிந்த சித்திரங்களுடன் திருவுலா வந்தால் கணபதியைப்போல் கருத்தைக்கவருவதாம். ஆகவே அதற்கான

பெரும் பொருட்செலவில் தியானசுலோகங்களில் கூறப்பட்ட நிறம் முதலிய எல்லாம் நிறையத் தீட்டும்வண்ணம் திருவருள்புரிந்த வள்ளல் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆவார்கள். அவர்கள் எந்தக் காரியமும் சிவதருமமாகவும் தம்மை நாளும் ஆட்கொண்டருளுகின்ற ஸ்ரீ நமசிவாயமூர்த்தியின் பாராட்டுதலுக்கும் பேரருளுக்கும் உரியதாக வும் இருக்கவேண்டும் என்ற ஒரேநோக்கம் கொண்டவர்கள் ஆதலின் உலகப்புகழ் ஒன்றையும் நாடாத அருள்நோக்கு இவர்களிடம் அமைவ தாயிற்று. அதனால் நிறையருட்கருவூலங்களாகப் பல ஞானநூல்கள் ஆதீன ஸ்ரீ நமசிவாயப்பதிப்பகத்து வெளிவந்து இலவசமாக எல்லோர் கையிலும் கண்ணிலும் கருத்திலும் உலாப்போந்தன. அவ்வண்ணமே இந்நூலும் இப்போது வெளிவருகிறது.

இங்ஙனம் இந்நூலை எழுதுங்காலத்து உடனிருந்து பிரதிசெய்து கொடுக்கவும் கைப்படி எழுதவும் தக்க எழுத்தாளர் ஒருவரை நியமித் தருளியும், எந்தவிதத்திலும் இன்னல் புகாமல் வேண்டிய வசதிகள் செய்துதந்தும், அருளார் அமுதம் அளித்தும், வாழ்வால் மயங்கினும் தாழ்வால் தயங்கினும் வைத்தகருணையை எக்காரணம் பற்றியும் மாற்றாத பெருங்கருணைக்கடலாகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிக் கமலங்களை முப்போதும் எப்போதும் முக்கரணங்களாலும் வந்தித்து வாழ்த்துகின்றேன்.

இந்நூலின்கண் விளங்குகின்ற படங்களை எழுதிக்கொடுத்தவர் சிதம்பரம் ஓவியக்கலைஞர் திரு. இராமச்சந்திரன் அவர்கள். அவர் சிறந்த ஓவியக்குடும்பத்தைச் சார்ந்தவர் ஆதலின் அடியேன் கொடுத்த கருத்துக் களைக் கைவண்ணத்தால் புனைந்து கண்கவரத் தந்தார். அவருக்கும் ஸ்ரீ நமசிவாயமூர்த்திகள் நல்லருள் மிகப்பெருகுவதாக.

புகைப்படங்கள் பலவற்றை அங்கங்கே சென்று எடுக்கத் துணை புரிந்த பேரன்பர்கட்கும், திருவிடைக்கழி முருகன், திருச்சாய்க்காட்டு வேலன் முதலிய புகைப்படங்களை அடியேன் கேட்டவுடனே தாமத மின்றித் தாமே எடுத்து அனுப்பித்தந்த நிறைசெல்வர்கள் திருக்கடவூர் பிச்சக்கட்டளை எஸ்டேட் திரு. K. கனகசபைப்பிள்ளை அவர்கட்கும்,

திருச்சாய்க்காடு டிரஸ்டி பெரும்பள்ளம் திரு. சம்பந்தம் பிள்ளை அவர்கட்கும் என் நன்றி உரியதாகுக.

அழகுறத் திருத்தமாகப் பல வர்ணப்படங்களுடன் அச்சிட்ட ஸ்ரீ நமசிவாயப்பதிப்பகத்தார் ஒத்துழைப்பிற்கும், படிகளை நன்கு திருத்தி யுதவிய வித்துவான் திரு. M. ஆறுமுகதேசிகர் அவர்கட்கும், தியான சுலோகங்களைப் பார்த்துத் திருத்தியுதவிய ஆதீனத்து ஆகம வித்துவான் சிவஸ்ரீ சாமிநாதசிவாசாரியார் அவர்கட்கும், மற்றும் இதில் பங்குபற்றிய அன்பர்கள் அனைவருக்கும் அடியேனுடைய வணக்கமும் நன்றியும் உரியனவாகுக.

இவ்வண்ணம் அடியேனைப் பாராட்டிப் பணிகொள்ளுகின்ற ஸ்ரீ நமசிவாயமூர்த்திகளின் திருவருளுக்கும், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் குருவருளுக்கும் ஏழேழ் பிறவிக்கும் கடமைப்பட்டுள்ளேன். முருகனைப் போலவே அடுத்து, கூத்தப்பெருமான் குதித்தாடிவர இருக்கிறார்; அதற்கும் திருவருள் துணைபுரிய இருக்கிறது என்பதையும் சைவநல்லுலகிற்கு விண்ணப்பித்துக்கொள்ளுகிறேன்.

திருவாவடுதுறையாதீனமாகிய செந்தமிழ்ப்பண்ணையின் சிவ போகமாக முருகன் வெளிவருவதால் செந்தமிழ்ச் சைவப்பெருமக்கள் ஏற்றுக் குற்றங்களை அடியேற்கு அறிவிப்பார்களாயின் மிக மிக நன்றி யுடையவனாக இருப்பேன் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான்,

**ச. தண்டபாணிதேசிகர்,**

தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

திருவாவடுதுறை.
19—10—58.

# எடுத்தாண்ட நூல்கள்

## தமிழ் நூல்கள் :

| | |
|---|---|
| அகநானூறு | திருச்செந்தூர்முருகன் பிள்ளைத்தமிழ் |
| ஆத்திசூடி | திருஞானசம்பந்தர்தேவாரம் |
| இலங்கைச்சரித்திரம் | திருநாவுக்கரசர்தேவாரம் |
| உபதேசகாண்டம் | திருப்போரூர்புராணம் |
| ஐங்குறுநூறு | திருமந்திரம் |
| கதிர்காமமான்மியம் | திருமுருகாற்றுப்படை |
| கந்தபுராணம் | திருவருட்பா |
| கந்தரலங்காரம் | திருவாசகம் |
| கந்தரனுபூதி | திருவிளையாடல் (பரஞ்சோதி) |
| கந்தர்கலிவெண்பா | திவாகரம் |
| கலித்தொகை | தொல்காப்பியம் |
| குறிஞ்சிப்பாட்டு | நல்லைக்கலித்துறை |
| குறுந்தொகை | நாமதீபநிகண்டு |
| சிதம்பரம் | பதிற்றுப்பத்து |
| சிலப்பதிகாரம் | பதினொராந்திருமுறை |
| சிவஞானசித்தியார் | பரிபாடல் |
| சிவதருமோத்தரம் | பழமொழிகள் |
| சிறுபாணாற்றுப்படை | பழனித்தலபுராணம் |
| சீகாளத்திபுராணம் (சிவப்பிரகாசர்) | பிங்கலந்தை |
| சீவகசிந்தாமணி | பிரமோத்தரகாண்டம் |
| சுந்தரர்தேவாரம் | புள்ளிருக்குவேளூர்த்தலபுராணம் |
| சுப்பிரமணியதத்துவம் | புறநானூறு |
| சுப்பிரமணியர்பராக்ரமம் | புறப்பொருள்வெண்பாமாலை |
| தணிகைப்புராணம் | பெரியபுராணம் |
| தமிழ்நாவலர்சரிதை | மகாவம்சம் |
| தனிப்பாடல்திரட்டு | முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் |
| தாயுமானவர்பாடல் | யோகதரிசனம் |
| திருச்செந்தூர்த்தலபுராணம் | வீரசோழியம் |

## வடமொழி நூல்கள் :

அதர்வசிரசு
அம்சுமத்பேதம்
இருக்வேதம்
காமிகம்
காரணம்
குமாரசம்பவம்
குமாரதந்திரம்
சாந்தோக்யம்
சில்பரத்னம்
சுப்ரபேதம்
சுவேதாசுவதரம்
சைவபுராணம்
ஞானஸம்ஹிதை
பத்மபுராணம்
பிருஹத்ஸம்ஹிதை
மகாபாரதம்
மகாஸ்காந்தம்
வால்மீகிராமாயணம்
விஷ்ணுதர்மோத்தரம்
ஸ்ரீதத்துவநிதி
ஸ்தேயசாஸ்திரம்

## ஆங்கில நூல்கள் :

Indian Iconography
Kathirgama
South Indian Images

## பத்திரிகைகள் :

ஆனந்தவிகடன்
இந்து
ஈழகேசரி
கல்கி
சித்தாந்தம் (பழைய இதழ்)
சுதேசமித்திரன் வாரஇதழ்
செந்தமிழ்ச்செல்வி
தமிழ்ப்பொழில்
தினமணி - சுடர்

உ
சிவமயம்

# கண்கண்ட தெய்வம்

செந்தமிழுலகில் கற்றோர்முதல் மற்றோர்வரை அனைவரும் எதற்கெடுத்தாலும் முருகா முருகா என்று சொல்லுவதைக் காண்கிறோம். தனிவழி நடந்தால் முருகா; தலைவலித்தால் முருகா; பாம்பைக்கண்டால் முருகா; பயங்கண்ட இடத்திலெல்லாம் முருகா என்கிறார்கள். விளையாடப்போகிற பையனும் விளையாட்டு வெற்றிக்காக முருகனை வேண்டிக்கொள்கிறான். வழக்குவெல்ல - போர் வெல்ல - பேச்சுச்சிறக்க - காசுதிரட்டச் செல்கின்றவர்களும் செவ்வேள் திருவடித்துணையைப் பற்றியே செல்கின்றார்கள். 'தனிவழிக்குத் துணை செங்கோடன் வடிவேலும் மயூரமுமே' என்று நமக்கு வழிகாட்டியிருக்கின்றார்கள் நம் முன்னோர்கள். நோயாலும், பேயாலும் நொந்தவர்களுக்கு உறுதுணையாக இருப்பவன் முருகன்.

கலியுகம் என்பது தீமைகளுக்கு ஆக்கம் அளிக்கும் யுகம். உறுதியைக்குலைத்து, உண்மையை மறைத்து, தன்னறிவுக்கு மதிப்புக்கொடுத்து, பழமைகள் யாவும் கிழவர்களுக்கே உரியவை என்று ஒதுக்குங்காலம். இத்தகையகாலத்தில் இறையுணர்ச்சி குன்றாவண்ணம் எல்லாரிடத்தும் - எல்லாவகையிலும் பாதுகாத்துவருபவன் முருகன். கடவுள்உணர்ச்சியில் கருத்தூன்றாதவனும் காவடி எடுத்து ஆடுகிறான்; காவடியெடுத்தவர்களைக் கண்டால் கசிந்து கண்ணீர் சிந்துகிறான்; உடலெல்லாம் வேல் குத்தி, நேர்த்தி செய்வதாகக்கூறி, நீங்காத பிணியிலிருந்து விடுதலை அடைகிறான். பழனிமலையில் முருகன் திருமுடியில் சாத்திய சந்தனம் குன்மநோய்க்கு மருந்தாகிறது. வேளூரில் (வைத்தீசுவரன்கோயிலில்) சித்தாமிர்த தீர்த்தத்தில் வெல்லங்கரைத்தால், உடலிலுள்ள கட்டி கரைகிறது; மண் உருண்டை மருந்தாகிறது; சந்தனக்குழம்பு அமுதமாய் எல்லா இன்பங்களையும் கொடுக்கிறது. செந்தூர்ப்பெருமான் முன்பு சென்றால் பிராரத்த கன்மங்கள் தம்வலிகுன்றித் 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு' என்ற பழமொழிக்கிணங்க விலகுகின்றன. இவ்வண்ணம் முருகன் கலியுகத்திலும்

கண்கண்ட தெய்வமாக விளங்குகின்ருன். வேளூர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், "வேண்டிய வரங்கொடுப்பான் மெய்கண்டதெய்வம் இத்தெய்வமல்லால் புவியில் வேறு இல்லை" என்று குமரகுருபரர் கூறி யருளுகிருர்.

**சொல்லிலே இன்பம் :**

வாழைப்பழம் என்றவுடனே அழுகின்றபிள்ளை வாய்மூடுகிறது; கற்கண்டு என்ருல் களிப்புறுகிறது. அதுபோல முருகன் என்றவுடனே நமக்கெல்லாம் ஓர் இன்ப உணர்ச்சி எழுகிறது. இவ்வுணர்ச்சியை எழுப்பும் ஆற்றல் அச்சொல்லுக்கே இருக்கிறது. அறிவுப்பொருளாய் இருக்கிற இறைவனுகிய முருகனை நேரிற்கண்டால் எப்படியிருக்கும் என்பதைக் கற்பனை செய்துபார்க்கலாம்! முருகனைப் பார்த்தாலும் கேட்டாலும் கடித் தாலும் கட்டியணைத்தாலும் இத்தனைக்கும் தித்திக்கின்ற இனித்த சுவைக் கரும்பாக அனுபவித்தார்கள் நமது முன்னேர்கள். ஆகவே நமக்கும் அத்தகைய அனுபவம் வரவேண்டாமா ?

**இன்பவடிவு :**

அன்புள்ள இடத்திலே இன்பம் உண்டு. இன்பமும் அன்பும் காரண காரியத் தொடர்புடையன. உலகில் காரணப்பொருள் காரிய அனுபவத்தில் கைவிடப்படுவதான வேற்றுமையுடையது. காரணம் காரியம் ஆகிய இரண்டுமாய் என்றும் இணைந்திருக்கும் பொருள் இறைவனே. நமது பெரியோர்கள் இந்த உண்மையை விளக்கவே இறைவனை 'இன்பமே! என்னுடை அன்பே!' என்றும், 'சோதியே! சுடரே! சூழொளி விளக்கே!' என்றும், 'பூவண்ணம் பூவின்மணம்போல' என்றும், 'தீயும் நீ தீயினுள் தெறலும் நீ' என்றும் இணைத்தே காட்டி, இறைவன் இன்ப அன்பு வடிவன் என்பதை நமக்கு அறிவுறுத்தியிருக்கிருர்கள். அன்பு ஒன்றே அவனை அடையும் நெறி என்றும் சொல்லிவைத்திருக்கிருர்கள்.

உலகத்திலே ஒவ்வொருபொருளிடத்து ஒவ்வொரு நலம் இருக் கின்றது. அது ஒவ்வொருகாலத்துத் தோன்றுகின்றது. வேனிற்காலத்து மாலைப்பொழுதிலே முல்லையும், மல்லிகையும் பூக்கின்றன. இளந்தென்றல் அவற்றின் மணத்தை அள்ளிக்கொண்டுவந்து நம்மேற்சொரிந்து இன்பூட்டு கிறது. கார்காலத்துக் காயாவும் கொன்றையும் நம்கண்ணிற்கும் மூக்கிற் கும் களிப்பைத் தருகின்றன. முதுவேனிற்பருவத்திலே மாவும், பலாவும்,

வாழையும் ஆகிய முப்பழங்களும் தேனெழுகக் கனிந்து நாவிற்கு நலம் பயக்கின்றன. இந்த நுகர்ச்சிகள் என்றும் எக்காலத்தும் உண்டாவதில்லை. இன்பநுகர்ச்சிக்காகப் பிறந்த மனிதனே, எல்லாநலங்களையும் எப்போதும் எய்தவிரும்புகிறான். கிடைத்தநலம் மாறாமல் மடியாமல் இருக்கவேண்டும் என்பதே அவனது எதிர்நோக்கு. ஆனால் அவன் எண்ணப்படி மலர்ந்த மல்லிகை வாடாமல் இருக்குமா? கனிகள் அழுகாமல் இருக்குமா? தளிர்கள் பச்சென்றிருக்குமா? இல்லை; ஆதலால் என்றும் எங்கும் நலம் குன்றாத பொருள் எது? என்று நாடும் உள்ளம் அவனுக்கு உண்டாகிறது; இராப்பகலாக எங்கெங்கோ தேடுகிறது. தேடிக்கண்ட பொருள்கள், யாவும் நிறைந்தனவாக இல்லை. புறம்பே தேடிக்காணாத அவன் தனக்குள்ளேயும் தேடுகிறான். ஒருபொருள் உள்ளும் புறம்பும் ஒத்துவிளங்குவதை உயிராவணமிருந்து உற்றுநோக்கிக்காண்கிறான். அப்பொருளிடத்தில் கண்ணிற்கு - காதிற்கு – மூக்கிற்கு - நாக்கிற்கு – உடலுக்கு - உள்ளத்திற்கு – உயிருக்கு நலம்பயக்கும் ஆற்றல் ஒருசேர அமைந்திருக்கிறது. அது ஒரு இன்ப மலை; கற்கண்டுப்பதுமை; வெல்லப்பிள்ளையார். அத்தனைப் பண்பும் நிறைந்த அதனை மனிதன் அறிந்து அறிந்து அனுபவிக்கின்றான். அதுவேதானாய் ஏகனாய் இருக்கிறான். அனுபவமுதிர்ச்சி, அறிவதைப் பலகால் சொல்லியும் அனுபவிக்கவேண்டும் என்ற ஆசையைத் தூண்டுகிறது. முருகு, முருகன் என்ற பெயர்களைப் பரம்பொருளுக்கு அளிக்கிறான்; சொல்லிச்சொல்லி இன்புறுகின்றான். இப்படி ஒருநாமம் இல்லாத அப்பொருளுக்கு ஆயிரம் திருநாமங்கள் வந்தமைகின்றன.

### முருகும் - முருகனும் :

முருகு என்பது ஒரு பண்பு. உயர்ந்த பண்புகள் யாவும் முருகு என்ற ஒரு பொதுச்சொல்லால் வழங்கப்பெறும். முருகன் அப்பண்புகள் பலவற்றையும் உடைய பரம்பொருள். பண்புக்கும் பண்பிக்கும் உள்ள ஒற்றுமையால் பண்பின்பெயர் பண்பிக்கும், பண்பியின்பெயர் பண்புக்கும் அமையலாமல்லவா? இறை தலைமை; அது பண்பு. அதனையுடையவன் இறைவன். இறையும் இறைவனும் ஒருபொருளைத்தானே உணர்த்துகின்றன; அதுபோல முருகனே முருகு; முருகே முருகன்.

சுருங்கக்கூறின், கண்ணுக்கு அழகாக, காதிற்கு நாதமாக, நாவிற்கு அமுதமாக, மூக்கிற்கு மணமாக, உடலுக்கு இனிய பரிசமாக, கருத்திற்கு விருந்தாக, உயிருக்கு உணர்வாக இப்படி எல்லாமாக இருப்பவன் முருகன்.

முருகு என்றவுடனே "முருகமர் பூ முரண்கிடக்கை" "மோட்டிள முல்லை மொய்மலர்க்கான முருகுவந் தெதிர்கொள நடந்தான்" "முருகு மெய்ப்பட்ட புலத்திபோல" "முருகயர்ந்து வந்த முதுவாய் வேலன்" "படையோர்க்கு முருகயர" "முருகேர் பாணியும்" "முருகு பொறை யுயிர்க்கும் மொய்பூங்காவில்" "முருகு வாய்மடுத்துண்டளி மூசும்" முதலான இலக்கிய முருகுகள் நம்முன்னேவந்து மணம், தெய்வத்தன்மை, வெறிக் கூத்து, வேள்வி, விழா, தேன் முதலிய பண்புகளையும் பண்பையுடைய பொருள்களையும் நினைவூட்டிநிற்கும்.

இவையன்றித் திவாகரம் பிங்கலந்தை நாமதீபநிகண்டு முதலியவை களைப் புரட்டினுல் அழகு, பூந்தட்டு, கள், எலுமிச்சை, எழுச்சி, அகில், முருகு என்னும் வாத்தியம் என்ற பொருளும் காணப்படும். இவ்வண்ணம் பலபொருள்களை உணர்த்தும் ஆற்றல் முருகு என்ற ஒருசொல்லுக்கு உளதாதல்போல அழகு முதலிய பண்புகளனைத்தையும் ஒருசேரத்தாங்கி, எப்பொழுதும் மக்கள்மனத்தைப் பிணித்து, சாவா மூவாப் பேரின்ப வடிவாய் நிற்பதொரு பேரருட்சக்தி இருப்பது நன்கு புலனுகும். அப் பொருளே முருகன்.

பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல்
காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை மெய்யன்பினுல்
மெல்லமெல்ல உள்ள
அரும்பும் தனிப்பர மானந்தம்
தித்தித்து அறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச் செந்தேனும்
புளித்துஅறக் கைத்ததுவே.

— கந்தரலங்காரம்.




ஸ்ரீ சக்திதரர்

# செந்தமிழ்த்தெய்வம்

மொழி உடல்; கொள்கை உயிர். தமிழ்மொழியாகிய உடலில் தோன்றுதொட்டு அமைந்து அழகுசெய்கின்ற உயிர் முருகன். தமிழ் என்றைக்கு உண்டோ அன்றே முருகன் உளன். எங்கெல்லாம் தமிழ் இருக்கிறதோ அங்கெல்லாம் முருகன் இருக்கிறன். தமிழில் வைதாரையும் வாழவைக்குமளவு தமிழிடத்து அவனுக்கு அன்பு வளர்ந்திருக்கிறது.

அகத்தியருக்குத் தமிழறிவித்த பெருமை முருகனுக்கே உரியது. செந்தமிழ்ப்பரமாசாரியன் முருகன். தலைச்சங்கத்திருந்து தமிழாராய்ந்தவன் முருகன். தமிழைச் சுவைத்து உரைநலங்க்ண்டுள்ளம்களித்தவன் முருகன். தெய்வமாக இருந்து ஆட்கொள்வதுமட்டும்போதாது என்று உக்கிர குமாரபாண்டியனுக உதித்துச் செந்தமிழ்நாட்டை ஆண்டவன் முருகன். 'கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப்பாடேன்' என்ற வசைமொழியையும் பொருட்படுத்தாது முட்டைப்பேரைத்தாங்கிச் செந்தமிழ்க் கவிதையைக் கேட்டுக் களித்தவன் முருகன். இவ்வண்ணம் செந்தமிழ்க்கும், செவ்வேளுக்கும் என்றென்றுமே நீங்காத தொடர்பு உண்டு.

**முருகன் எச்சமயக் கடவுள் ?**

அழகு முதலிய பண்புகள் யாருக்குச் சொந்தமானவை? அனைவருக்கும் பொது. அங்ஙனமே நற்பண்புகள் அனைத்துக்கும் உறைவிடமான முருகனும் அனைவருக்கும் பொதுவானவன். இந்துவுக்கும் தெய்வம் இஸ்லாமானவர்க்கும் தெய்வம் என்பதைப் பழனி பகரும். சிங்களவர்களும் கதிர்காமத்தெய்யோவை வணங்குகின்றர்களே! ஆகவே, அழகுக்கு அழகுசெய்யும் பரம்பொருள் யாருக்கு வேண்டாதது? அது அனைவருக்கும் பொது.

மணிமாலையுள் ஒன்றுபடுத்தி ஊடுருவிநிற்பது நூல். அதுபோல முருகு என்ற சொல் உணர்த்தும் பல்வகைப் பண்புகளிலும் ஊடுருவி நிற்கும் பொதுப்பண்பு அழகு. கண்வழியாகக் கருத்துள் பதிவதுமட்டும்

அழகாகாது. புலன்கள்வழியாகப் புந்தியுட்புகுந்து மனிதனை உயர்த்துவன யாவும் அழகே. மனத்தைப் பிணித்து மாட்சியளிப்பன யாவும் அழகே. என்றும் மாரு இன்பநிலையில் இருத்துவன எல்லாம் அழகே. அழகைக் கண்டவர்கள் முருகனைக் கண்டவர்களே.

"என்றும் இளையாய் அழகியாய்" "மணங்கமழ் தெய்வத்து இள நலம் காட்டி" எனப் போற்றுகின்றனர் புலவர்பெருமக்கள். 'முருகா! ஆயிரங்கோடி மன்மதர்களுடைய அழகையெல்லாம் உருட்டித்திரட்டி ஒருவடிவமாகச் செய்தாலும் உன்னுடைய திருவடிஅழகிற்குச் சிறிதும் ஒவ்வாது; அப்படியிருக்க உனது திருமேனியின் அழகுக்கு உவமை தேடுவது எங்கே?' என்று கருத்தழிந்து பேசுகிருர் ஒரு கவிஞர்.

**இயற்கையும் - இறைவனும் :**

இயற்கைகள் யாவும் செயற்கையே. தேவர்களை அமரர்கள் என்று அழைக்கிருேம்; அமரர் மரணமில்லாதவர். தேவர்களுக்கு மரணமில்லையா? அவர்களுக்கு அமரர் என்பது உபசாரப்பெயர். அதுபோலக் காடு, கடல், மலை, வயல் முதலானவை மாயையின் காரியமாகிய செயற்கைப் பொருள் களே. இவற்றை இயற்கை என்பது உபசாரம். ஆனுலும் உலகத்தை ஒட்டி நாமும் வழங்குவோம். இயற்கை, கண் காது மூக்கு மனம் புத்தி முதலிய கரணங்கள்வாயிலாகக் களிப்புத்தருகின்றது. இறைவன் முருகனே கருவிகரணங்களைக் கடந்துநின்றும் இன்பளிப்பவன். இயற்கைகள்வாயி லாக நாம் எய்தும் இன்பம் சிற்றின்பம். இறைவனிடமிருந்து பெறுவது பேரின்பம். இயற்கை, இறைவனது உண்மையை உணர்த்தும் சாதனம். இயற்கைகளின் எழிலிலிருந்து இறைவன் உண்மையை அனுமானிக்கிருேம். இயற்கைகள் 'நாங்கள் இறைவனல் படைக்கப்பட்டு உங்களுடைய போகத்திற்காக அமைந்துள்ளோம்' என்பதை அறிவிக்கின்றன; இறை வனே எல்லாக்காரியத்திற்கும் பரமகாரணன் என்பதைக் காட்டுகின்றன. ஆதலால் இயற்கை, இறைவனுகாது; இயற்கை, அறிவற்ற சடப்பொருள். இறைவன் சித்துப்பொருள். ஆதலால் இயற்கையைப் படைத்த இறைவன் அதைவிட எவ்வளவு மேலானவன் என்பதை எண்ணவேண்டும்.

**உபதேசத்தாற்கிடைக்கும் உண்மை :**

இயற்கையை நாம் நேரில் அறிகின்ருேம். முருகனை அறியமுடிவ தில்லையே? ஆதலால் இறைவனை, இல்லாதபொருள் எனக் கூறிவிடலாமே?

காற்று, கண்ணுக்குத் தெரிவது இல்லைதான்; அது இல்லாத பொருளா? ஊறுணர்ச்சியைக்கொண்டு உள்ளபொருளாக உணர்கின்றோம் அல்லவா! ஆகாயம் காணப்படாத ஒன்றுதான். கண்ணுக்கும் காதுக்கும் மூக்குக்கும் நாக்குக்கும் புலனாகக்கூடிய மண்ணும் நீரும் காற்றும் கனலும் எங்கே இருக்கின்றன? வளர்கின்றன? என்று எண்ணிப்பார்த்தோமானால் இவற்றிற்கெல்லாம் இடந்தந்து நிற்கின்ற ஒன்று ஆகாயம் என்றுதானே உணருவோம்; அதுபோல் கருவிகரணங்களால் அறியமுடியாமைபற்றி இறைவன் இல்லை என்று சொல்லிவிட முடியாது. 'சித்தத்துள் தித்தித்தல்' 'எண்ணிய எண்ணியாங்கு எய்துவித்தல்' 'இடையூறு நீக்கல்' 'என்றும் மாறாத இன்பத்தில் இருத்துதல்' முதலான பயன்களைக்கொண்டு, அப்பயன்களைத் தரவல்ல பரம்பொருளுண்மையை அறியத்தானேவேண்டும்? அங்ஙனம் அறியாதவன் அறியாதவனே! அங்ஙனம் அறிந்துகொண்டே இருந்தால் முருகன் கருத்துப் பொருளாக நம்முடன் என்றும் கலந்திருப்பதையும், வழிகாட்டுவதையும், நாம் உணருவோம். இந்த உணர்ச்சியே தியானம். இதுவே 'உள்ளக் கிழியில் உருவெழுதும்' முறை. 'நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்' என்ற உபதேசவாக்கியமும் இந்த உண்மையைத்தான் நமக்குத் தெரிவிக்கிறது.

### ஐந்திலும் - ஐம்பதிலும் :

'அறஞ்செய விரும்பு' 'ஆறுவது சினம்' என்பனபோன்ற அறிவியல் தொடர்மொழிகளைப் பதவுரை, பொழிப்புரை தெரிந்து ஆசிரியரின் தொல்லைக்காக ஐந்தாவது வயதில் படித்திருக்கிறோம். ஐம்பதாவது வயதில் அனுபவப்பொருளை அறிந்து அறிந்து ஆனந்திக்கின்றோம். அதுபோலவே இளமையில் முருகன் உணர்ச்சி நம் மனத்தில் பதிய நம் மூதாதையர்கள் 'சுக்குக்குமிஞ்சிய மருந்தில்லை சுப்பிரமணியருக்கு மிஞ்சிய தெய்வமில்லை' 'சிந்தை நொந்தவனுக்குக் கந்தனே துணை' 'வழிக்குத் துணை வடிவேல்' 'கலிக்கும் கிலிக்கும் கந்தனை எண்ணு' 'கேளற்றவர்க்கு வேள்' என்பன போன்ற பழமொழிகளால் முருகனை நினைவூட்டிவந்தனர்; வருகின்றனர். அந்தப் பண்பு முதலில் பாராயணமாகத் தொடங்கி, தியானமாக வளர்ந்து, நம்மிடையே நிலவிவருகிறது. ஆதலால் 'உன்னையொழிய ஒருவரையும் நம்புகிலேன், பின்னை ஒருவரை யான் பின்செல்லேன்' 'திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலுவாலே ஒருத்தரை மதிப்பதில்லை உன்றன் அருளாலே' 'நாளென்செயும்? கோளென்செயும்? நாடிவந்த வினைதான் என்செயும்?

நமன் என் செயும்? என்ற உறுதிகள் உண்டாகி வளர்ந்தன. இவ்வண்ணம் ஐந்தில் அறிந்ததொன்று ஐம்பதில் அனுபவத்திற்கு வருகிறது.

**என்று நீ அன்று நான் :**

அறிபவன் என்றைக்கு உண்டானுனே அன்றைக்கே அறியப்படும் பொருளும் இருந்துதான் ஆகவேண்டும். அதனாலேயே அறிவும், அறியப் படும் பொருளுமாய் இருக்கின்ற பரம்பொருளை 'முன்னைப் பழம்பொருட் கும் முன்னைப் பழம்பொருளே' என்று அழைக்கின்றார் அறிவாற் சிவனே யான மாணிக்கவாசகசுவாமிகள். அவ்வண்ணம் பழமைக்குப் பழமையாய பெருமான் புதுமைக்கும் புதுமையாய் இருத்தலையும் அவரே உணர்த்து கிறார். ஆதலால் உயிர் தோன்றுகின்ற காலத்திலேயே உடன் இருந்து உடம்போடு கூட்டி, உணர்வையளித்து, ஆட்கொள்ளுகின்ற இறைவன் தொன்மையை எங்ஙனம் ஆராய்வது ?

**தொன்மையும் - முதன்மையும் :**

தொன்மையைப்பற்றி நாம் எண்ணும்போதே 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முற்றோன்றி மூத்தகுடி' என்ற பழம்பாடல் நினைவுக்கு வருகின்றது. தண்ணீரே முதற்படைப்பு; அதிலிருந்து மலை; அதனைச் சார மண்; மண்ணில் மற்றவையெல்லாம் விளைந்தன என்பது உலகத் தோற்றத்தை அறிவிக்கவந்த ஒரு புராணக்கருத்து. இம்மேற்கோள்கள் முதன்முதல் மக்கள் பிறந்த இடமும், வாழ்வு தொடங்கிய இடமும் மலையகம் என்பதைத் தெரிவிக்கின்றன. உணவுக்கும் உடைக்குமாகத் தோன்றிய உழைப்பு வாழ்வாகப் பரிணமிக்கிறது. துன்ப இன்பங்களை மாறி மாறித் துய்க்கவைக்கிறது. துன்பங்கலவாத இன்பவாழ்வை எதிர்நோக்கிக் கடவுட்கொள்கையில் அமைக்கிறது. ஆகவே, மனிதவாழ்வின் முதிர்ந்த அறிவுநிலை கடவுட்கொள்கை. கடவுட்கொள்கையில் முதற்றோன்றியது முருகவழிபாடு. மலைத்தெய்வம் முதற்றெய்வம்.

# விழாவும் பூசையும்

மருதக்கலியுள் "ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக் கால்கோள் என்று ஊக்கி" (பாடல் 18: 14, 15) எனவரும் பகுதி, முருக னுக்காக விழாக்கொண்டாடும் சிறப்பும் அவ்விழாவிற்குக் கால்கொள்ளும் சிறப்பும் தெரிவிக்கிறது.

பூசை கடவுளின் மனத்தைக் கனியவைக்கும் செயல். பூசையுள் பயன் கருதிச் செய்வதும், பயன் கருதாது செய்வதும் என இருவகை யுண்டு. அவற்றுள், தொல்காப்பியத்தும், சங்க இலக்கியங்களிலும் வரும் வெறியாடற்பூசை பெண்ணுக்குப் பிடித்த பேய்நீங்கச் செய்யப்பெற்றது. திருமுருகாற்றுப்படையிலும் பரிபாடலிலும் ஒரு பயனுமே கருதாது இயற்றப்படும் பூசையும் சொல்லப்பெறுகின்றது. பூசையுள் அன்பால் செய்யப்படும் பூசையும், ஆகமவிதிப்படிச் செய்யும் பூசையும் என இரு வகையுண்டு. அவற்றுள் அன்பாற் செய்யப்படும் பூசைமுறை திருமுரு காற்றுப்படையுள் மிக அழகாகக் குறிக்கப்பெற்றுள்ளது.

குறவர்கள் பூசைபோடும்நகரத்தில் ஆங்காங்கு கோழிக்கொடிகளை நட்டு அலங்கரிப்பார்கள். பூசையில்லின்புறத்தே பிற வருத்துந்தெய்வங்கள் வந்து நுழையாதபடி வெண்கடுகையும் நெய்யையும் அப்புவார்கள். மலர் களைத் தூவுவார்கள். நீராடித் தோய்த்துலர்ந்த இரு ஆடைகளை உடுத்திக் கொள்வார்கள். சிவந்த நூலாலே கையிற் காப்புக்கட்டிக் கொள்வார்கள். பொரியைத்தூவி, உதிர அரிசியைப்பரப்பிப் பலியிடுவார்கள். பூசைக்குரிய இடத்தில், பச்சைமஞ்சளையும் சந்தனத்தையும் கரைத்து மெழுகுவார்கள். அலரிமாலைகளையும் நறுமணமுள்ள மாலைகளையும், அடுக்கடுக்காகத் தொங்கவிடுவார்கள். தூபதீபம் கொடுப்பார்கள். உதிரங்கலந்த தினையைப் பரப்புவார்கள். துடிகொட்டி மணியடித்து முருகனை வரவழைப்பார்கள். குறிஞ்சிப்பண்ணைப்பாடி வழிபடுவார்கள். இது விதியொடுபடாத குறவர் கள் செய்யும் அன்புப்பூசை. சித்திரத்தில் எழுதினாற்போன்ற அழகானவீட் டிலே, பூசைக்கு இடம் ஒழித்துப் பந்தலிட்டு, வேலன் கடப்பம்பூ மாலை யைச் சூடிக்கொண்டு, முருகன்புகழைத் தோத்திரிப்பான்; முருகன் வெளிப் பட்டு அருள் வழங்குவார் என்று குறிஞ்சிக்கலி கூறுகிறது.

மலைச்சாரலிலே கருங்குவளை பூத்துக் கவின்செய்கின்ற சுனையோடு கூடிய ஊர்ப்பொதும்பிலே வேலன் புதுமணல் பரப்பித் தோரணங்களாலும் தொங்கல்களாலும் அழகுசெய்து கழங்கு பார்த்து வெறியாடுகிறான் என்று ஐங்குறுநூற்றில் வரும் பூசையும் விதியொடுபடாத அன்புப் பூசையே. அப்படிப் பூசை செய்கின்ற வேலன், சூர்மாத்தடிந்த சுடர்வேலோய்! கிரவுஞ்சமலையைத் துளைத்த பெருவீர! அறுமுகக் கடவுளே! பன்னிருகை வேல! இளஞ்சூரியனை ஒத்த நிறமுடையவனே! என்று தோத்திரிக்கின்றான்; முருகன் வெளிப்பட்டு வேண்டிய வரங்களைத் தருகின்றார் என்று பரிபாடல் பகர்கிறது.

திருமுருகாற்றுப்படையிலே நக்கீரர், இமயமலையின் நீலச்சுனையிலே அக்கினி ஏற்றுக்கொள்ள கார்த்திகை மாதரிடம் பிறந்தவனே! ஆலமர் செல்வர்க்குச் செல்வனே! மலைமகள் மகனே! கொற்றவை சிறுவனே! பெரும்பெயர் முருகனே! குறிஞ்சிக் கிழவனே! என்றெல்லாம் போற்றுக; பின்னர், 'உன்னை அளந்தறியமாட்டாமையால் ஏதோ தெரிந்தவரை தோத்திரித்தேன்' என்று பணிமொழி கூறுக என்று இறைவனைப் புகழும் முறையைத் தெரிவிக்கின்றார்.

திருஏரகத்தில் அறுதொழில் அந்தணர்கள், கற்பன கற்று அடங்கிய நல்லொழுக்கங்குன்றாத முனிவர்கள், நாற்பத்தெட்டு ஆண்டுகள் பிரமசரியம் காத்த பெரியோர்கள், நித்தியாக்கினி செய்யும் நியதியை உடையோர்கள் காலமறிந்து மூலமந்திரங்களையும் வேதமந்திரங்களையும் சொல்லிக்கொண்டே விதிப்படி வழிபடுகின்றார்கள் என்று விதிமுறைப் பூசையின் இயல்பும் விளக்கப்படுகின்றது.

திருவாவிநன்குடி என வழங்கும் பழனியில் "முனிவர்கள் மரவுரியையும் மான்தோலையும் உடுத்திக்கொண்டு வழிபடவருகிறார்கள்; பல நாள் பட்டினி கிடந்தமையால் அவர்களுக்குத் தசைநார்வற்றி நரம்பும் எலும்பும் நன்கு தெரிகின்றன. அவர்களுக்கு விருப்பு வெறுப்பு இல்லை; கரைகண்ட படிப்பாளிகள்; கோபதாபம் இல்லாதவர்கள்; துன்பமே அறியாதவர்கள்; இத்தகையவர்கள் முருகன் வழிபாட்டுக்குச் செல்கின்றார்கள்" என்று, உபவாசமிருந்து, உடலெலாமிளைத்து, உள்ளத்தூய்மையுடன் ஒழுக்கம் குன்றாமல் செல்லவேண்டுமென்ற விதிமுறைவழிபாடு வகுக்கப்படுகிறது.

# அன்பும் ஆடலும்

**அன்பால் விளைந்த அச்சம் :**

விலங்கினங்களையும் கொலைகாரனையும் கொள்ளைக்காரனையும் பார்த்த இடத்தும் அச்சம் உண்டாகிறது. அதே அச்சம் தாயையும் தந்தையையும் தமையன்மார்களையும் குருவையும் கடவுளையும் கண்ட இடத்தும் உண்டா கிறது. இவ்விரண்டும் ஒன்ரு? இல்லை. முன்னது வன்பு காரணமாகப் பிறந்தது. பின்னது அன்பு காரணமாகப் பிறந்தது. நமக்கு அளவற்ற உதவி செய்வாரிடத்து அன்பு உண்டாகிறது. அவ் அன்பு அச்சமாகமாறி, அவர்களிடம் அடங்கி ஒடுங்கி நடக்கச்செய்கிறது. முருகன் தடையற்ற கருணையையுடையவர். கருணையைப் பெறுகின்ற நமக்கு அவரிடத்தும் அன்பு உண்டாகின்றது. அன்புகலந்த அச்சமும் விளைகிறது.

நாம், ஏதாவது ஒன்றை உண்மை என்று சாதிக்கவேண்டுமானுல் 'கடவுள்மேல் ஆணை' என்போம். அதுபோலச் சங்ககாலத்தில் தமிழர்கள் தங்களுக்குள் உண்டாகின்ற சிறு குடும்பச் சண்டைகளுக்காக முருகன் மேல் ஆணையிடுவார்கள். வேலின்மேல், மயிலின்மேல், கோழியின்மேல், கோயிலின்மேல், குன்றின்மேல் ஆணையிடுவதும் உண்டு. அதைக்கண்டு அஞ்சிய அவனுக்கு வேண்டியவர்கள் 'இப்படி முருகன்மேல் ஆணை யிடாதே; அவனேடு தொடர்புடைய பொருள்கள்மீது ஆணையிடாதே' என்று வேண்டிக்கொள்வதும் வழக்கம். இதனுல் தெரியும் உண்மை என்ன ? தங்களால் அன்புசெய்யப்படும் பொருள்களிற் சிறந்தவர் முருகன்; முருகன்மேல் பொய்யாணையிட்டால் தமக்குப் பெருந்தீங்குவிளையும் என்ற எதிர்நோக்கு எல்லாருக்கும் இருந்தது என்பதுதானே.

**அன்பின் எல்லை :**

மலைவாழ் மக்கள் முருகனிடம் அளவுகடந்த அன்புடையவர்கள். பரிபாடலிலே, மருத்துவன் நல்லச்சுதனர் ஒரு குடும்பக்கலகத்தைக் குறிப் பிடுகிருர். ஆண்மகன் ஒருவன் காலையில்போனவன் மாலையிலே வீடு திரும்புகிருன்; வேற்றுமகளை விழைந்துவந்ததாக ஊடுகிருள் அவனது

மனைவி; அவள் மனத்தைத் தெளிவிக்க அவன், திருப்பரங்குன்றின்மேல் ஆணை, வேலின்மேல் ஆணை, மயில்மேல் ஆணை, எனக்குப் புறத்தொழுக்கம் இல்லை என்று பொய்ச்சத்தியம் செய்கிறான்; தலைவி, பதைபதைத்துப்போய் தலைவனுக்கும் தனக்கும் தீங்குவராதபடி நேர்த்திக்கடன்களைச் செய்து நிவர்த்திசெய்து கொள்கின்றாள் என்று ஒரு நிகழ்ச்சி அதில் சொல்லப் பெறுகிறது. இதனால் முருகன்மீது அனைவருக்கும் எத்துணை அச்சங்கலந்த அன்பு இருந்திருக்கிறது என்பது புலனாகின்றதல்லவா !

ஒருவன் ஒருத்தியை மணக்க விரும்புகிறான்; மனக்கருத்தை வெளி யிடுகிறான். அவள் 'இவன் கடைசிவரையில் காப்பாற்றுவானோ' என்று மயங்குகிறாள். அப்போது அவன் அவளைத்தேற்ற, மலைத் தெய்வமாகிய முருகனைப் போற்றுகிறான். முருகன்முன்னின்று தலைவியைப் பார்த்து 'உன்னை என்றும் பிரியேன்; பிரியின் அறனல்லது செய்தேனாவேன்' என்று சூளுரைக்கின்றான்; மலைத்தண்ணீரை அள்ளி, சூளின் அங்கமாக ஒருகை குடிக்கிறான்; அதனால் அவளதுமனம் மகிழ்ந்தது; மலையில் இருவரும் மணந்தனர் என்று குறிஞ்சிப்பாட்டு (வரி. 208 - 210) குறிப்பிடுகிறது. இதனால் மணவினைக்காலத்துச் சூளுறுந்தெய்வம் - சாட்சியாக நிற்கும் தெய்வம் முருகன் என்பது வெளி.

**எதிர்நோக்கு :**

பயனின்றி உழைப்பில்லை. உழைப்புக்கும் ஊதியம் வேண்டும். வெறும்வினை செய்வார் யார்? முருகனை வழிபட்டால் அதற்கு ஒரு குறிக்கோள் இருக்கத்தானே வேண்டும்! தமிழ்மக்கள் முருகனை வழிபடுவது எந்தப் பயனைக்கருதி என்பதும் தெரியவேண்டாமா?

செந்தமிழ்க்கற்பரசியாகிய கண்ணகி கணவன் ஆணையின்வண்ணம் அவன் கொலையுண்ட பதினான்காம்நாள் திருச்செங்குன்றூரையடைகிறாள். வேங்கைமரத்தடியிலே விமானமேறிக் கணவனோடு செல்கிறாள். இதனை உற்பாதம் என்று கருதுகிறார்கள் வேடர்கள். உலகத்துக்கும் வீட்டுக்கும் வரக்கூடிய இன்னல்களை முன்னறிவிப்பது உற்பாதம். உற்பாதத்தால் பின்வருந்தீங்கை உணர்ந்தமக்கள் அத்தீங்கினின்றும் நீங்கச்செய்யப்படுவது சாந்தி. சாந்தியாகக் குறப்பெண்கள் குரவையாடினார்கள் என்று கூறுகிறது சிலம்பு. இதனால் குறவர்கள் குரவையாடித் தமக்கு வரஇருக்கும் தீங்கை விலக்கிக்கொண்டனர் என்ற எதிர்நோக்கு எடுத்துக்காட்டப்பெறுகிறது.

மேலும் மக்களுக்கு அணங்கு தீண்டினுல் வெறியாடி அணங்கை நீக்கிக்கொள்ளுகிற வழக்கமும் உண்டு என்பதைக் குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலிய இலக்கியங்கள் இயம்புகின்றன.

முருகன் காப்பதாலேயே உலகம் இன்பப்பொழுதாக இயங்கிக் கொண்டிருக்கிறது என்று பேசுகிறது குறுந்தொகைக் கடவுள்வாழ்த்து. திருமுருகாற்றுப்படை, முருகனைப்போற்றினுல் உறுதியாக முருகன் வெளிப்படுவார்; நம்முடைய கருவிகரணங்களால் அனுபவிக்கக்கூடிய அளவு காட்சி வழங்குவார்; அஞ்சாதே! என அபயமளிப்பார்; வேறு எங்கும் யாரிடத்தும் பெறமுடியாத பரிசுகளை வழங்குவார் என்று அறிவிக்கிறது.

முருகா! உன்னிடத்து நாங்கள் பொன்னையும் பொருளையும் போகத்தையும் விரும்பவில்லை; இறவாத இன்ப அன்பு வேண்டுகிரேம்; அறம் வேண்டுகிரேம்; அருள் வேண்டுகிரேம்; இவ்வளவுதான் உம்மிடம் நாங்கள் வேண்டுவது (பரிபாடல் 5 - 78 - 80) என்றும், நினது திரு அடிக்கீழ் என்றும் இருத்தலாகிய வரமேவேண்டும் (பரிபாடல் 9 - 84 - 85) என்றும் எதிர்நோக்கல்லாத எதிர்நோக்கை வேண்டுகிறது. மற்ருெரு செய்யுளில் உன்னுடைய பரங்குன்று வளம்மாருது என்றென்றும் வாழ்க என்று போற்றி வாழ்த்தப்பெறுகிறது. மலைவாழ்ந்தால் உலகம் இடர்நீங்கி வாழும்; உலகம் வாழ்ந்தால் நாம் வாழ்வோம் என்ற பொதுநோக்கிலிருந்து உண்டான சிறப்புநோக்கு இதில் விளங்குவதைக் காணலாம்.

நாங்களும் எங்கள் சுற்றமும் பிறவாப்பெருநெறியை வேண்டுகின்றேம்; என்றும் பிரியாத இணையடிக்கீழ் இன்பமமார்ந்து இருக்க எண்ணுகிரேம்; நீ என்றும் இப்பரங்குன்றத்திலே கடம்பமர் செல்வனுக வாழ்க என்று வாழ்த்துமுகத்தால் தங்களுடைய எதிர்நோக்கு வீட்டின்பமே என்று விளக்கப்பெறுகிறது மற்ருெருபாடலில்.

**கூத்து :**

மட்டற்ற மகிழ்ச்சி கூத்தாக வெளிப்படுகின்றது. மனத்திலுள்ள இன்பங்களைப் பலரும் அறிந்து அநுபவிக்கச் செய்வன கூத்துக்களே. கூத்துக்களால் தெய்வங்களையும் மகிழச்செய்யலாம் என்றஉறுதி எல்லோருக்கும் உண்டு. தெய்வங்களும் கூத்தாடியதாக நூல்கள் தெரிவிக்கின்றன.

கூத்திற்கெல்லாம் தோற்றம் ஆனந்தக்கூத்து. அதனை ஆடியவர் ஆனந்தக் கூத்தர். அவர் ஆடிய இடம் அம்பலம். அவர் குமாரராகிய முருகனும் சில கூத்துக்களை ஆடினர் என்பதில் புதுமையில்லை. அவர் ஆடிய கூத்து குடைக்கூத்தும், துடிக்கூத்துமாம். வேலனுக்கு விருப்பம்வர மக்களும் கூத்தாடினார்கள். அவை குரவைக்கூத்து, வெறிக்கூத்து, வள்ளிக்கூத்து என்பன. இந்தக் கூத்தின் இயல்புகளைச் சிலப்பதிகாரத்து அரங்கேற்றுக் காதையிலும், குன்றக்குரவையிலும் பரக்கக் காணலாம். அவற்றுள், முருகன் ஆடிய கூத்துக்களை முதற்கண் ஆராயலாம்.

குடைக்கூத்து: இது பதினொரு ஆடல்களுள் ஒன்று. இப்பதினொரு வகையும் வென்றிக்கூத்து, வசைக்கூத்து, விநோதக்கூத்து என்ற மூன்றுள் அடங்கும். அவற்றுள் இது வென்றிக்கூத்தின்பாற்படும். வென்றிக்கூத்தாவது மாற்றானொடுக்கமும் மன்னனுயர்ச்சியும் மேற்படக் கூறுவது. போர்க்களத்தில் அவுணர்களனைவரும், முருகனும் அவன் சேனைத்தலைவர்களும் செய்யும் போருக்கு ஆற்றாமல் தங்கள் தங்கள் கையிலிருந்த படையெல்லாம் போட்டுவிட்டுச் சோர்ந்து நிற்கின்றார்கள்; அதைக்கண்ட முருகனுக்கு வெற்றிக்களிப்பு விஞ்சுகிறது; வீரக்கூத்து ஆடத் தொடங்குகிறார். கூத்திற்குத் திரைவேண்டாமா? தன் கையில் உள்ள குடையை முன்னே சாய்த்துக்கொண்டு கூத்தாடுகிறார். குடையைச் சாய்த்து ஆடுங்கூத்தாகலின் குடைக்கூத்தாயிற்று.[1] குடைக்கூத்திற்கு நான்கு உறுப்பு உண்டு என்று அடியார்க்குநல்லார் உரை அறிவிக்கிறது.[2]

துடிக்கூத்து: துடிக்கூத்தாவது துடிகொட்டியாடுகின்ற கூத்து. சூரன் முருகனுடைய போருக்கு ஆற்றாது வஞ்சனையால் மறைந்துசென்று கடல்நடுவில் மாமரமாக நின்றான். அவனுடைய வஞ்சக உருவை அறிந்த முருகன், கடலும் கலங்கும்வண்ணம் கடலுக்குள் சென்று பாறையெல்லாம் தவிடுபொடியாம்படி வேலை ஏவி வெற்றிகண்டார். ஆதலால் அவர், வென்றிச்சிறப்புத்தோன்ற, கடலலைகளையே திரையாகக்கொண்டு கடலையே

---

1 படைவீழ்த் தவுணர் பையுள் எய்தக்
குடைவீழ்த் தவர்முன் ஆடிய குடையும் — சிலப் - கடலாடு - 52, 53.

2 அறுமுகத்தோ னாடல் குடை மற்றதற்குப்
பெறுமுறுப்பு நான்கா மெனல் — சிலப் - அரங்கேற்று - 14, 15 உரை.

அரங்கமாக்கித் துடிகொட்டி ஆடினர்.[1] இதுவும் வென்றிக்கூத்தே. இக்கூத்து ஐந்து உறுப்புக்களை உடையதாக அறிவிக்கப்படுகிறது.[2]

குரவைக்கூத்து: வேண்டிய வரங்களை விரைவில் அருளுகிறவர் முருகன். அவர் திருவுள்ளம் மகிழ மக்கள் கூத்தாடுவார்கள். அக்கூத்துக் களுள் குரவையும் ஒன்று. குரவையாவது, மகளிர் எழுவரேனும், எண்ம ரேனும், ஒன்பதின்மரேனும் கைகோத்து ஆடும் ஒருவகைக்கூத்து.[3] இக் கூத்தினை முல்லைநிலத்து மக்களாகிய இடைச்சியர்களும், குறிஞ்சிநிலத்து மக்களாகிய குறத்தியர்களும் ஆடினர்கள் என்று தெரிகிறது.[4] இடைச்சியர் ஆடுவது ஆய்ச்சியர் குரவை எனப்படும். அது, கண்ணனை நோக்கி ஆடியது. முருகனைநோக்கிக் குறத்தியர் ஆடியகூத்து குன்றக்குரவை எனப்படும். இந்த இரண்டுமே தம் சேரிக்குவரும் நலந்தீங்குகளை முன்னர் அறிவிக்கும் உற்பாதங்களுக்குச் சாந்தியாக ஆடப்பெறுவது என்பர் அடியார்க்கு நல்லார்.[5] விநோதக்கூத்து ஆறனுள் ஒன்ருகவும் இதனைக்குறிப்பர்.[6] இக் கூத்து, காமமும் வென்றியும் பொருளாகக்கொண்டு வரும்.

சிலப்பதிகாரத்தில் கோவலனை இழந்த கண்ணகி, அவன் சொற்படி பதினான்காம் நாள் திருச்செங்குன்றில் வேங்கைமரநிழலிலே கோவல னோடு வானவூர்தி ஏறினள்; அதுகண்ட குறவர்கள் மலைவளஞ்சிறக்கக் குரவையாடுகிருர்கள் என்று குறிப்பிடப்படுகிறது.

வெறிக்கூத்து: இது தெய்வம் ஏறியாடுகின்ற ஆவேசக்கூத்து. வேலனுகிய பூசாரி கையில் வேலேந்தி, செம்பட்டாடையுடுத்தி, செவ்வணி அணிந்து, செஞ்சந்தனம்பூசி, தொண்டகப்பறை ஒலிக்க ஆடுவான். இவன் வேலை ஏந்தி ஆடுதலின் வேலன் என அழைக்கப்படுவான். இக்கூத்து விநோதக்கூத்து ஆருேடு இணைத்து எண்ணப்படுவது ஒன்று என்பர்

---

1 .. .. மாக்கடல் நடுவண்
நீர்த்திரை அரங்கத்து நிகர்த்துமுன் னின்ற
சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும் — சிலப் - கடலாடு - 49 - 51.

2 துடியாடல் வேல்முருக னடல் அதனுக்கு
ஒடியா உறுப்போரைந் தாம் — சிலப் - அரங்கேற்று - 14, 15 உரை.

3 சிலப் - பதிகம் - 77 உரை.

4 5 சிலப் - பதிகம் - 77, 82, 83 உரை. 6 சிலப் - அரங்கேற்று - 12 உரை.

அடியார்க்குநல்லார். இது மகளிர்க்கு அணங்கு தீண்டியதனுல் செவிலி அல்லது நற்ருய்வேண்டுகோளின்படி ஆடப்பெறுவது. தொல்காப்பியத்தில் 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தளும்' என்று குறிக்கப்பெறுகிறது. 'வாலிழையோர் வினைமுடிய வேலனெடு வெறியாடின்று' 'காணிலரனும் களிக்கும் கழல் மறவன், பூணிலங்கு மென்முலை போதரிக்கண் - வாணுதல், தான்முருகு மெய்ந்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப, வேன்முருகற் காடும் வெறி' என்று புறப்பொருள்வெண்பா மாலை எடுத்துக்காட்டுகிறது.

**வள்ளிக்கூத்து:** இது, "வாடா வள்ளி வயவரேத்திய ஓடாக்கழல் நிலை உளப்பட" என்ற பகுதியால் தொல்காப்பியத்துள் சொல்லப்பெற் றுள்ளது. ஒரு குறமகள் வள்ளிவேடம்புனைந்து ஆடுகின்ற கூத்தாகலின் வள்ளிக்கூத்து எனப்பட்டது. இதனைக்கண்டு முருகனும் வியந்தான் என்று புறப்பொருள்வெண்பாமாலை பேசுகிறது. "பூண்முலையார் மனமுருக வேன் முருகற்கு வெறியாடின்று" என்றும், "இனவளையார் - பூண்தயங்க, சூல மொடு ஆடும் சுடர்ச்சடையோன் காதலற்கு, வேலனெடு ஆடும் வெறி" என்றும் வரும்பகுதிகள் அக்கருத்தை விளக்குவனவாம்.

மொய்தார் அணிகுழல் வள்ளியை
வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்
போன்வெய்ய வாரணம்போல்
கைதான் இருபது உடையான்
தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள்
பயந்த இலஞ்சியமே.

— *கந்தரலங்காரம்.*




ஸ்ரீ சுப்பிரமணியர்
( குமாரதந்திரத்தில் )

# தமிழ்நூல்களில் முருகன்

**தொல்காப்பியத்தில் :**

தொல்காப்பியம் மிகப்பழமையான இலக்கணம். இன்று இருக்கும் நூல்களுக்கெல்லாம் ஆண்டில் மூத்தது அது. அதில் நிலங்களை நான்காகப் பிரித்து, ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய கடவுள்கள் பேசப்படுகிறார்கள். குறிஞ்சித்திணை என்பது மலையும் மலைசார்ந்த இடமும். அந்த இடத்திற்கு உரியவன் முருகன். 'சேயோன் மேய மைவரை உலகமும்' என்கிறது தொல்காப்பியம். மைவரை உலகம் என்பது மஞ்சு சூழ்ந்து வளமுற்று வானளாவ ஓங்கிய மரங்களடர்ந்துள்ள பசுமையான மலை. அதனை விரும்பி இடமாக வீற்றிருப்பவன் முருகன். அவன் சேய், செவ்வேள் என்றெல்லாம் பாராட்டப்படுகின்றான். அவன் செந்நிறமுடையவன்; விரும்பத் தக்கவன்; பசுமையான சூழலில் காணப்பெறும் செம்மையிற்றோன்றிச் செவ்வேளாகச் சிந்தைபுகுந்து விளங்குபவன். அன்புததும்பிய ஈரவுள்ளத்தில் எழுந்தருளிக்காட்சி வழங்கும் செம்பொருளே முருகன்.

உலகம் ஆணும் பெண்ணுமாக அமைந்தபோதே காட்சியும், கவர்ச்சியும், புணர்ச்சியும், அகற்சியும் அவற்றிற்கான நிமித்தங்களுமுடைய மணவாழ்வு தோன்றியது காட்சி முதிர்ந்து கவர்ச்சியாகிறது. கவர்ச்சி முதிரப் புணர்ச்சியும் அகற்சியும் பொருந்துகின்றன. அகற்சி கவர்ச்சிக்கு வித்து. அகற்சியானபோது உடல் இளைத்துப்போகின்றது. அதனைக் கண்ட தாய் தன்மகளுக்குப் பேயோ பிசாசோ தீண்டிவிட்டது என்று முருகனுக்குப் பூசைபோடச் சொல்லுகிறாள். இவ்வண்ணம் தமிழ்மக்களுடைய மணவாழ்க்கையில் அதன் அங்கமாகவே கலந்திருப்பது முருகன் வழிபாடு என்று அறிவிக்கிறது தொல்காப்பியம்.

வீரமும் போரும் ஆட்சியும் நிறைந்த புறவாழ்விலும் 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தளா'க் கலந்திருக்கிறது என்று பேசுகின்றது தொல்காப்பியம். இங்ஙனம் இலக்கணத்தில் இடம் பெறுவதற்கு முன்னே இலக்கியவாழ்வில் எவ்வளவுகாலம் அது

நிலைபெற்றிருக்கவேண்டும்? இலக்கியம்கண்டு அதற்கு இலக்கணமியம்புதல் தானே முறை. இலக்கியவழக்கில் ஏற எத்தனையாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்து சமுதாயவாழ்வில் வேரூன்றியிருக்கவேண்டும் என்று நாம் எண்ணிக்கொண்டேபோனால், முருகன் தொன்றுதொட்டே - கால எல்லை காணமுடியாத நிலையிலே செந்தமிழுலகோடு சேர்ந்துவிட்டான் என்பது தெளிவாகும்.

**சங்க இலக்கியங்களில் :**

தாயுமானவர் பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்த போதமாகக் கடவுளைக் காட்டுகிறார். அதுபோல முருகன் சங்க இலக்கியங்களில் எங்கும் காணப்படுகிறார். சங்க இலக்கியங்களில் மிகப் பழமையானது பரிபாடல். அதில் இப்போது காணப்படுகிற பாடல்கள் இருபத்திரண்டு. அவைகளில் எட்டு முருகனைப்பற்றியவை. அவற்றுள் முருகனுடைய பிறப்பு வரலாறும், வென்றியும், வழிபடுமுறையும், படை வீடுகளுள் முதன்மையான பரங்குன்றின் சிறப்பும், பிறவும் பேசப்படு கின்றன. கலித்தொகை, அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு, குறுந் தொகை, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு ஆகிய எல்லாவற்றிலும் முருகன் மலரிற்பிறந்ததும், சூர்மாத்தடிந்ததும், முருகனுடைய அணியும் ஆடையும், முருகன் ஆடிய கூத்தும், முருகற்கு ஆடிய கூத்தும், முருகன் எழுந் தருளியுள்ள தலங்களும், எதிர்நோக்கிய பயனும் பிறவும் கூறப்படுகின்றன.

[1]'பவளத்தன்ன மேனி' [2]'பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு, ஓவற இமைக்கும் சேண்விளங்கவிரொளி' முதலான செய்யுட் பகுதிகள் முருகனுடைய நிறம் கண்ணைக்கவருகின்ற செந்நிறம் என்று தெரிவிக் கின்றன. நிறச்செம்மைக்கு ஏற்ப, [3]அவருடைய ஆடையும் செம்மை;

---

1 குறுந்தொகை - கடவுள் வாழ்த்து.

2 திருமுருகாற்றுப்படை 2, 3.

3 '' குன்றியேய்க்கும் உடுக்கை '' —குறுந் - கடவுள்.

'' உடையும் ஒலியலும் செம்மை, மற்றுங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்
உருவம் உருவத்தி யொத்தி முகனும்
விரிகதிர் முற்று விரிசுடர் ஒத்தி '' —பரிபாடல் 19: 97 - 100.

'' செய்யன் சிவந்த ஆடையன் '' —திருமுருகாற்றுப்படை 206.

அணிகளும் செம்மை; மாலேயும் செம்மை; அவருக்கு வெண்துகில் கூடாது என்பதை,

> * "வேல்வலானுடைத் தாழ்ந்த விளங்குவெண் துகில் ஏய்ப்ப
> வாலிது கிளந்த வெண்காற் சேயும்"

என்ற முல்லேக்கலிப்பகுதிக்கு நச்சினுர்க்கினியர் கூறுகின்ற உரை நன்கு விளக்குவதாம்.

இறைவன் உமையை மணந்தருளினுர்; நெடுநாளாகப் போகத்தில் பொருந்தினுர். பின் அமைதியுற்ற காலத்து இந்திரன் வந்து வணங்கி 'எம்பெருமானே! இப்புணர்ச்சியால் வந்த கருவை அழித்துவிடவேண்டும்' என்று வேண்டிக்கொண்டான். இறைவன் 'அங்ஙனமே ஆகுக' என வரம் அளித்தார். அவ்வரத்தை மாற்ருது மழுப்படையைக்கொண்டு தம் மெய்ம்மையை உலகெலாம்போற்ற அக்கருவைப் பல கண்டங்களாகச் சிதைத்தார். தெய்வமுனிவர்கள் எழுவரும் தமது தவவலிமையால், இக்கரு உருக்கொள்ளின் தேவசேனுபதி ஆதற்குரியது என உணர்ந்தனர். இதனே இந்திரன் ஏனே அறியாமல் சேதிக்கச்செய்தான் என்று எண்ணி, அவனிடம் சென்று, இதமான வார்த்தைகளேச் சொல்லி, 'அரசே! இந்தக் கருவால் தங்களுக்கு எந்தவிதமான ஏதமும் வாராது; எங்களிடம் கொடுங்கள்' என்று பெற்றுக்கொண்டு சென்ருர்கள். இவற்றை இப்படியே நம் மனேவிய ரிடம் கொடுத்துக் கருவை வளர்ப்போமாஞல், அவர்களால் தாங்கவும் முடியாது; நிறையும் அழிவர் அதனுல் 'அக்கினியே தாங்கட்டும்' என்று எண்ணி, யாகத்தீயை வளர்த்து, அதில் அவியுடனே இட்டார்கள். அந்த அவியோடு கருவை யாகாக்கினி ஏற்றது; புரோடாசம் ஆயிற்று.

புரோடாசத்தை முனிபத்தினிகளாகிய அருந்ததிநீங்கலான அறுவரும் தத்தம் கணவர்கள் விருப்பப்படி உண்டார்கள்; சூல்கொண்டார்கள். இமயமலேயில் சரவணப் பொய்கையிலே தாமரைப்பூவாகிய பாயலிலே ஒருங்கு குழந்தையைப் பெற்ருர்கள். இதனே உணர்ந்த இந்திரன் பகைமிக்க வனுக, முனிவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் கடந்து, வச்சிரா யுதத்தால் அந்தக் குழந்தையை ஆறு கூறுகளாக வெட்டினுன். அந்த ஆறு கூறுகளும் ஆறு குழந்தைகளாக வடிவெடுத்தன. பின் ஒருருவம்

---

** முல்லேக்கலி 5: 17 - 18.*

ஆயிற்று. அதுகண்ட இந்திரன் மீட்டும் போருக்குவந்தான். முருகன் குழந்தையாயிருந்தும் வெறுங்கையுடன் அவனை வென்ருர். தேவர்கள் அனைவரும் இதனைக்கண்டு 'இவனே நம் சேனைக்கெல்லாம் தலைவனுகும் தகுதியுடையவன்' என்று கருதி, படைக்கலங்களையும் ஊர்தியையும் உதவ எண்ணினுர்கள். அக்கினி கோழியைத்தந்தான்; இந்திரன் மயிலைத்தந்தான்; இயமன் வெள்ளாட்டுக்கிடாயைத் தந்தான். பிறதேவர்கள் தங்கள்தங்கள் உடம்பிலிருந்தும் பல ஆயுதங்களைப் படைத்துக்கொடுத்தனர். அவற்றைப் பன்னிரண்டு திருக்கரங்களிலும் தாங்கி, அந்தத் தளர்நடைப்பருவத்திலேயே முருகன் தேவசேனுபதியானுன் (பரிபாடல் 5 : 25 - 70).

இதனையே திருமுருகாற்றுப்படையுள் நச்சினுர்க்கினியர், 'இறைவன் உமையை வதுவை செய்துகொண்ட நாளிலே, இந்திரன் சென்று நீ புணர்ச்சி தவிரவேண்டும் என்று வேண்டிக்கொள்ள, அவனும் அதற்குடம் பட்டு அது தப்பாஞகிப் புணர்ச்சி தவிர்ந்து கருப்பத்தை இந்திரன் கையிற் கொடுப்ப, அதனை இருடிகள் உணர்ந்து அவன் பக்கனின்றும் வாங்கித் தமக்குத்தரித்தல் அரிதாகையினுலே இறைவன் கூருகிய முத்திக்கட்பெய்து, அதனைத் தமது மனைவியர்கையில் கொடுப்ப, அருந்ததி ஒழிந்த அறுவரும் வாங்கிக்கொண்டு விழுங்கிச் சூல்முதிர்ந்து சரவணப்பொய்கையில் பதுமப் பாயலிலே பயந்தாராக, ஆறு கூருகி வளர்கின்றகாலத்து, இந்திரன் தான் இருடிகட்குக் கொடுத்தநிலையை மறந்து ஆண்டுவந்து வச்சிரத்தால் எறிய அந்த ஆறுவடிவும் ஒன்ருய் அவனுடனே பொருது அவனைக்கெடுத்துப் பின் சூரபன்மாவைக் கொல்லுதற்கு அவ்வடிவம் ஆருகிய வேறுபட்ட கூற்ருலே மண்டிச் சென்றது' என்று சிறிது மாற்றந்தந்து கூறுவர்.

சூரியனது வெப்பத்தை உலகம் தாங்காது என்று எண்ணி அந்த வெப்பத்தைத்தாங்க, சூரியனேடு வாலகில்லியர்கள் என்ற முனிவர்கூட்டத் தார் சுற்றிவருகிருர்கள். அவர்களுக்குத் துன்பம் வாராதபடி பாதுகாத்தார் முருகன். முருகன் அசுரர்களை அழித்து, தேவர்களைக்காத்து, தெய்வயானை யம்மையாரை மணந்தகாலத்து, தமது திருக்கரத்திலுள்ள வேலாயுதத்தை நோக்கி 'நமக்கு எல்லாம் தந்தது இவ்வேல்' என்று பாராட்ட, பக்கத்தில் இருந்த பிரமன் 'இவ்வேலுக்கு இந்நிலை என்னுலல்லவா வந்தது?' என்ருன். என் கைவேலுக்கு வன்மைகொடுத்தது இவனு? என்று முருகன் கோபித்து 'நீ அவனியிற் பிறந்து அல்லலுறுக' என்று சபித்தார். அவ்வாறே பிறந்து அறுமுகக்கடவுளை வழிபட மீட்டும் பதவியருளினுர் என்பது வரலாறு.

முருகனது வீரச்செயல்களுள் மாயங்களுக்கெல்லாம் உறைவிடமாயிருந்த கிரவுஞ்சமலையைத் துளைத்த வரலாறும், கடல்நடுவிலே மாமரமாகச் சென்று முளைத்த சூரபன்மாவை வலியொடுக்கிய வரலாறும் பல நூல்களிலும் பாராட்டிப் பேசப்படுகின்றன.

**காப்பியங்களில் :**

காவியத் தலைவனுக்கு அழகுக்கும் வீரத்திற்கும் ஒப்பிடக்கூடிய ஒருபொருளாக முருகன் பேசப்படுகிறார். கட்டியங்காரனுடைய பட்டத்து யானையைச் சீவகன் கொன்றுவிட்டான்; அப்போது சீவகன் நின்றநிலையைத் திருத்தக்கதேவர், கிரவுஞ்சமலையைத் துளைத்து, கறைபடாத வேலினைக் கையில் ஏந்தி மயிலின்மீது ஆரோகணித்திருக்கிற முருகனுடைய புருவம் போல் சீவகன்புருவம் வளைந்தது என்று சீவகசிந்தாமணியில் சித்திரிக்கிறார்.

கோவிந்தையாரிலம்பகத்தில் இடையர் குலத்தலைவனாகிய கோவிந்தன் கோவிந்தையை மணந்துகொள்ளுமாறு சீவகனை வேண்டிக்கொள்ளுகின்றபோது, 'தம்பி! முருகன் வள்ளியை மணந்து கொள்ளவில்லையா? குலத்தைப் பாராட்டவேண்டாம்' என்று கூறுவதாகக் குறிப்பிடுகிறார். குணமாலையாரிலம்பகத்து, சரவணப்பொய்கையிலே தாமரையில் தேவர்கள் விரும்பப் பிறந்த முருகனைப் போன்றவன் சீவகன் என்று குறிக்கப்படுகிறது.

மேலும் முருகனை அந்நூலில் மற்றோரிடத்து 'பூவினுட் பிறந்த தோன்றல்' என்றே குறிப்பிடுகிறார். பிறிதோரிடத்து, புனலாடுங்காளையரை முருகனை ஒத்த இளையர் என்றும், 'மாத்தடிந்தானன்ன மாண்பினன்' என்றும் குறிப்பிடுகின்றார். பதுமையாரிலம்பகத்தில் பதுமையினுடைய கண்களுக்கு உவமையாக முருகன் கைவேல் கவிஞர் கருத்தில் எழுந்தது; கண் இரண்டாக இருக்கிறதே! வேல் ஒன்றுதானே இருக்கிறது என்ற ஆய்வெண்ணம் உண்டாயிற்று; 'முருகன் எஃகம் ஓரிரண்டனைய கண்ணாள்' என்று, கருத்தாலேயே மற்றொரு வேலாயுதத்தையும்படைத்து கண்களுக்கு உவமை காட்டுகிறார்.

சிலப்பதிகாரத்து, மங்கலவாழ்த்துப்பாடலில், மணக்கோலங்கொண்ட கோவலன், கண்கண்ட முருகன் என்று பாராட்டப்படுகிறான். மனையறம் படுத்த காதையில் முருகவேள் உன்கண்ணால் நானிறப்பதைத் தன்கண்ணால் காணவேண்டுமென்ற விருப்பத்தால் தன்கையிலுள்ள ஒருவேலை உனக்கு

இரண்டு கண்களாகப் படைத்தார் என்று கோவலன் கண்ணகியின் கண்களைப் பாராட்டுகின்றான். இவ்வண்ணம் முருகன் இலக்கியங்களில் அழகுக்கு அளவுகோலாகக் காட்டப்படுகின்ற இடங்கள் பல.

**திருமுறைகளில் :**

திருமுறைகள் பன்னிரண்டு. அவை சிவபெருமானையே தோத்திரிப்பன. அம்பிகையையும், கணபதி முருகன் ஆகியோர்களையும் இறைவனோடு இணைத்துப் பேசுமேயன்றித் தனித்துப்பேசமாட்டா. அவற்றுள், திருஞான சம்பந்தசுவாமிகள் செய்தருளிய மூன்று திருமுறைகளிலும் சற்றேறக் குறைய பத்து இடங்களில் முருகன் பாராட்டப்படுகிறார்.

திருமுதுகுன்றை அறிவிக்கவந்த சம்பந்தசுவாமிகள், கருங்குழல் மடவார்கள் குறிஞ்சிப்பண்ணைப்பாடி முருகன் பெருமையை மொழிகின்றார்கள்; குறிஞ்சிப்பண் தெய்வத்தன்மை பொருந்தியது என்று அறிவிக்கின்றார்கள். இராமனதீச்சரப் பதிகத்தில் 'தழைமயிலேறவன்' என்றும், திருமீயச்சூர்ப்பதிகத்தில் 'மாயச்சூர் அன்றறுத்த மைந்தன்' என்றும், அரிசிற்கரைப்புத்தூர்ப் பதிகத்தில் 'வள்ளிமுலை தோய் குமரன்' என்றும், பிரமபுரப் பதிகத்தில் 'இளங்குமரன் சேந்தன்' என்றும், திருநறையூர்ச் சித்தீச்சரப்பதிகத்தில் 'மடமயிலூர்தி' என்றும், திருப்புகலூர்ப்பதிகத்தில் 'சாமி' என்றும், தென்குடித்திட்டைப்பதிகத்தில் 'குமரவேள்' என்றும், திருக்கழுமலப் பதிகத்தில் 'கந்தன்' என்றும் முருகன் குறிப்பிடப் பெறுகின்றார்.

திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தில் 'ஆறுகொலாம் அவர்தம் மகனார் முகம்' 'கடம்பன் தந்தை' 'சேந்தனை மகனாக் கொண்டார்' 'குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை' 'கடம்பமர் காளை தாதை' 'விரிநீர்ப் பரவைச் சூரட்ட வேலவன் தாதை' 'மயிலூர்தி முருகவேள் தன் ஐ' 'நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்' 'சமர சூரபன்மாவைத் தடிந்த வேற்குமரன் தாதை' 'குமரன் வணங்கும் கழற்பூரணன்' 'கடம்பன்தாதை' 'முருகவேள் தன்னைப் பயந்தாய்போற்றி' 'சரவணத்தான் கைதொழுது சாரும் அடி' 'பன்னிரண்டு கையுடைய பிள்ளை தோன்றும்' 'வள்ளி மணாளர்க்குத் தாதை' 'குமரன்தாதை' 'குமரனையும் மகனாக உடையார் போலும்' 'கூரிலங்கு வேற்குமரன் தாதை போலும்' 'கோழிக் கொடியோன்றன் தாதை போலும்' எனப் பல இடங்களில் முருகனைப் பற்றிய குறிப்புக்கள் மொழியப்பெற்றுள்ளன.

சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரத்தில் 'பொரும்பலமதுடை அசுரன் தாரகனைப் பொருது பொன்றுவித்த பொருளினை முன் படைத்து உகந்த புனிதன்' 'குறவனார்தம்மகள் தம்மகனார் மணவாட்டி' 'மயிலூர்தி முருக வேள் தாதை' 'சேந்தன் அப்பன்' 'கடற்சூர் தடிந்திட்ட செட்டியப்பன்' 'குமரனைப் பயந்த வார்த்தயங்கியமுலை மடமான்' 'குமரன் முதற்றேவர் தங்கள் நம்பி' 'கடற்சூர் தடிந்திட்ட சேந்தர் தாதை' 'குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற கோன்' 'குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும் அமரன்' என்றெல்லாம் முருகன் இறைவனோடு இயைத்துக் குறிப்பிடப்பெறுகின்றார்.

மணிவாசகசுவாமிகள், திருப்பொற்சுண்ணத்திலும் திருவுந்தியாரி லும் முறையே 'நல்வேலன் தாதை' 'குமரன்றன்தாதை' என்று கூறுகிறார். 'மலைமகள் மதலை மேலுலாந்தேவர் குலமுழுதாளும் குமரவேள் வள்ளிதன் மணாளன்' 'வேலுலாம் தடக்கை வேந்தன்' 'சேந்தன்' 'கோழிவெல் கொடி யோன்' 'தூவிநல் பீலிமாமயிலூரும் சுப்பிரமணியன்' 'சூர்மார்பினைத் தடிந் தோன்' 'கங்கைதன் சிறுவன் கணபதி பின்னிளங் கிளையே' 'இளஞ்சேய்' 'அக்கிரிதனைக் கீண்ட ஆண்டகை' 'கேடில் வேற் செல்வன்' 'செஞ்சடை யான் மதலை' 'மால்மருகன்' 'முருகவேள்' 'பொன்மலை வில்லிதன் புதல்வன்' 'மலரும் பன்னிரு நயனத்து அறுமுகத்தமுது' 'உமையாள் திருமகன் முருகன்' என்றெல்லாம் ஒன்பதாந்திருமுறை உரைக்கிறது.

அசுரனுடைய ஆற்றலுக்கு அஞ்சிய தேவர்கள், இறைவனிடம் வந்து அசுரன் வலிமையைச்சொல்லி முறையிடுகிறார்கள். திருச்செவி ஏற்ற இறைவன் 'அம்பவள மேனி அறுமுகனே! நீ அமரர்பகையை வென்று கொன்றுவருக' என ஆணையிடுகின்றார் எனக்கூறுகிறது பத்தாவது திருமுறையாகிய திருமந்திரம். மேலும் இறைவன் அறுகோணவடிவாய் ஆறு முகங்களோடு தோன்றினார்; கந்தஸ்வாமி கலந்திருந்தார்; இவரை இறைவனுக்கு மைந்தன் என்று இயம்பினார்கள் எனவும் கூறுகிறது.

பதினோராம் திருமுறைப் பிரபந்தங்களுள் ஒன்றாகிய திருக்கயிலாய ஞானவுலாவில்,

"செருக்குடைய சேனாபதி மயில்மேல் முன்செல்ல"

என்றும், நக்கீரர் போற்றித்திருக்கலிவெண்பாவில்,

" வானவர்கள் வேண்ட மயிலூரும் கோனவனைச்
சேனுபதியாகச் செம்பொன் முடிகவித்து
வானுள வைத்த வரம் போற்றி "

என்றும், திருக்கழுமலமும்மணிக்கோவையில்,

" கொம்பிட்ட கோழிக்கொடி வேந்தன் "

என்றும், திருவிடைமருதூர்மும்மணிக்கோவையில்,

" பூவலர் குடுமிச் சேவலம் பதாகை
மலை துளையடுத்த கொலைகெழு கூர்வேல்
அமரர்த் தாங்கும் குமரன் தாதை "

என்றும்,

" காளகண்ட கந்தனைப் பயந்த
வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந "

என்றும், நம்பியாண்டார்நம்பி அருளிய திருத்தொண்டர்திருவந்தாதியில்,

" சத்தித் தடக்கைக் குமரன்நல் தாதை "

என்றும் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளன.

பெரியபுராணத்தில் 'சரவணத்துத்தனையர்' 'மயிலுடைக் கொற்ற வூர்தி வரையுரம் கிழித்த திண்மை, அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார்' 'முருகலர் அலங்கல் செவ்வேல் முருகவேள்' 'போரணி நெடுவேலான்' 'குன்றமெறிந்த வேலவன்' 'முன்னுள் வரைகிழிய ஏந்தும் அயில் வேல் நிலைகாட்டி, இமையோர் இகல்வெம் பகைகடக்கும் சேந்தன், 'முன்னே வந்து எதிர்தோன்றும் முருகனே' என்றெல்லாம் முருகன் மொழியப்பெறுகிறுர்.

இவையன்றி, கணபதி கந்தர் ஆகிய இருவரையும் இணைத்த தோத்திரங்களாக எட்டுத்திருப்பாடல்கள் காணப்படுகின்றன. இவ்வண்ணம் 'சிவனே முருகன்' 'முருகனே சிவன்' என்று பேசப்படுகின்ற சம்புபக்கமும், 'முருகன்தாதை' 'உமையவள் சேய்' 'குமரன்முதல்தேவர்தங்கள் நம்பி' என்றெல்லாம் முருகனை அன்பராக மகனுகப்பேசும் அணுபக்கமுமாகத் திருமுறைகள் முருகனதுபெருமையை எடுத்து மொழிகின்றன.

# வேதாகமங்களில் முருகன்

**இருக்குவேதத்தில் :**

வேதங்கள் அறிவுநெறியை அறிவிப்பன. உபநிஷத்துக்கள் வேத சிரசுகள். ஆகவே வேதத்திலும், சாந்தோக்கிய உபநிஷத்திலும் சுப்பிரமணியர் ஸ்கந்தர் என்ற சொல்லாட்சிகள் காணப்படுகின்றன.

சுப்ரஃமண்யோம் என்று மும்முறை கூறி அமைகிறது இருக்குவேதம். இங்கு சுப்ரஃமண்ய என்ற சொல்லானது பிரமசொருபத்தைக் குறிப்பதாகுமேயன்றி, சுப்பிரமணியர் என்ற தெய்வத்தைக் குறிப்பதாகாது என்பாரும் சிலருளர். இந்தச் சுப்பிரமணியரும் பிரம சொருபத்தினின்றும் வேறுபடாதவராகவே புராணங்களிலும் இதிகாசங்களிலும் குறிப்பிடப் பெறுகிறார்.

**சாந்தோக்கிய உபநிஷத்தில் :**

நாரதர் மனக்கலக்கம் அடைந்து சனற்குமாரரை அடுத்து, அமைதியை அடைதற்குரியவழியை வினவுகிறார். அவர் இருளின் எல்லையை அதாவது இருள் கடந்த நிலையைக் காட்டியருளினார்; அவர் ஸ்கந்தர் எனக்கூறப் படுகிறார் என்ற குறிப்பு வருகிறது.

आहारशुद्धौ सत्व शुद्धिः, सत्व शुद्धौ ध्रुवा स्मृतिः, स्मृति लम्भे सर्व ग्रन्थीनां विप्र मोक्षस्तस्मै मृदितकषायाय तमसः पारंदर्शयति भगवान् सनत्कुमारः तम् स्कन्द-इत्याचक्षते तम् स्कन्द इत्याचक्षते ।। २६-२ ।।

*—சாந்தோக்யம் 7-வது அத்யாயம்.*

**சிவாகமங்களில் :**

சிவாகமங்கள் சிறப்புநூல்கள். தென்னாட்டுச் சமுதாயத்தின் பழமையான கடவுட்கொள்கைகளை நன்கு விளக்குவன. இறைவனாலே அருளிச் செய்யப்பெற்றன. முருகனுடைய வரலாற்றுக் குறிப்புக்களைக் குறிக்கும் ஆகமங்கள் காமிகம், காரணம், சுப்பிரபேதம், குமாரதந்திரம், அம்சுமத் பேதம் முதலாயின.

சுப்பிரபேதம்: தாக்ஷாயணியாகிய உமாதேவி, தக்ஷன்மகள் என்று அழைக்கக் காரணமாயிருக்கும் தனது உடலை யோகபலத்தால் உதறிவிட்டு, வேருெரு உடலம்தாங்கி, இமயமலைச்சாரலில் இமவானுக்குப் புத்திரியாகி, பரமசிவனையே மணவாளனுக அடையும்பொருட்டுத் தவம்செய்தாள். தேவர்களின் வேண்டுகோளால் சிவனும் சக்தியும் ஒன்று கூடினுர்கள். மீட்டும் தேவர்கள், திருக்கயிலையை அடைந்து 'தேவசேனுபதியாய், சூரபன்மனுதியரை வெல்லத்தக்க திருக்குமாரரை விரைவில் தந்தருளுக' என வேண்டிக்கொண்டனர். தேவர்களுடைய விருப்பப்படி அக்கினி சிவபெருமானுடைய தவவலி நிறைந்த கருவைப்பெற்றுச் சரவணப் பொய்கையில் விட்டான். அதிலிருந்து முருகன் தோன்றினுர்; கார்த்திகை மாதர் அறுவரால் வளர்க்கப்பெற்றுர்; ஆதிசக்தியின் அம்சங்களில் ஆயிரத் தில் ஒருகூறு முருகனுகப் பிறந்தது என்று கூறப்பெற்றுள்ளது.

மேலும் முருகனுக்கு என்று ஆலயம் அமைக்கும் விதியைக் கூறும் போது கல், மண், மரம், உலோகப்பொருள்கள் இவற்றைக்கொண்டு நவதால அளவினுல் திருவுருவைச் சமைக்க. ஒரு முகத்தோடாவது, ஆறுமுகத்தோடாவது, இரு கைகளுடனுவது, பன்னிருகைகளுடனுவது திருவுருவை அமைக்கலாம். இரண்டு கைகளையுடைய மூர்த்தி ஆசனமூர்த்தி என்றும், நான்கு கைகளையுடைய மூர்த்தி ஸ்தானமூர்த்தி என்றும், எட்டுக் கைகளையுடையது யானமூர்த்தி என்றும் பெயர்பெறும் என்று கூறுகின்றது.

அம்சுமத்பேதம்: சிறப்பாகப் பஞ்சதால உயரத்தில் முருகனை இயற்று வதே முறை. இரண்டு, நான்கு, ஆறு, பன்னிரண்டு கைகளுடன் அமைப்ப துண்டு. பன்னிரண்டுகைகளுடன் அமைக்கும்போது சக்தி, பாணம், கட்கம், சக்கரம், பிராசம், பிரசாரிதம், பிச்சம், கேடகம், குக்குடம், தனுசு, தண்டம், கலப்பை இவ்வாயுதங்களையும்; ஆறு கைகளாயின் அபயம், கட்கம், சக்தி, இவற்றை வலப்பக்கத்திலும் கேடகம், அட்சமாலை, குக்குடம் இவற்றை இடப்பக்கத்திலும்; நான்கு கைகளாயின் வலப்பக்கத்தில் அபயமும் சக்தியும், இடதுபக்கத்தில் குக்குடமும் அட்சமாலையும்; இருகைகளாயின் இடதுகையில் குக்குடமும் வலதுகையில் சக்தியும் உடையவராக அமைத் திடல்வேண்டும்.

உத்தரகாமிகம்: நகரின் தலைப்பிலாவது அல்லது இடையிலாவது அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, ஈசானன் இத்திசைகளிலாவது

இவற்றின் இடையிலாவது எங்குமாவது முருகனுக்கென்று தனிக்கோயில் அமைக்கப்படலாம். சிவன்கோயிலிலும், மலையின்மேலும், பக்கத்திலும், ஆற்றங்கரையிலும், சோலைகளிலும், காடுகளிலும், பெரிய மரங்களினடியிலும், தலைநகரிலும், ஏனைய புண்ணியத்தலங்களிலும் முருகன் திருக்கோயில்கள் அமைக்கத்தக்கன. இதனையே "காடும் காவும் கவின்பெறு துருத்தியும் யாறும் குளனும் வேறுபல் வைப்பும், சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும், மன்றமும் பொதியிலும், கந்துடை நிலையினும்" எனத் திருமுருகாற்றுப்படை கூறுகிறது.

முருகன் கோயில்கள் மூன்றுமுழம் முதல் முன்னூறு வரை பரப்புடையதாக், அம்சகோணம் கெசகோணம் இவ்வமைப்பில் அமைக்கப்படுவது நல்லது. கருப்பக்கிரகம் ஒருதளம் முதல் ஏழுதளம் வரையில் சிவனுக்குச் சொல்லப்பட்ட முறைமைப்படி, அவரவர்கள் விருப்பம்போல அமைக்கப்படலாம். உச்சியில் ஊடுகல்லும் அதன்மேல் ஸ்தூபியும் அமைத்தல் வேண்டும். முன்னர்க்கூறப்பட்ட பிரகாரங்களும் மண்டபங்களும் நன்கு அமைக்கப்படுதல்வேண்டும். இவைகள் யாவற்றையும் தலைமைத்திருவுருவின் உயரம் முதலான அளவிற்கேற்ப அமைக்கவேண்டும். விமானங்களின் மூலையில் மயில் அல்லது யானையின் உருவங்களை அமைத்தல் வேண்டும். வரதம், அபயம், கட்கம், கேடகம் இவற்றை ஏந்திய நான்கு கரங்களோடு யட்சேந்திரர், இராட்சசேந்திரர், பூதராட், கந்தருவர், கின்னரர், தானவாதிபர் முதலிய எட்டுப் பரிவாரங்களையும் கிழக்கு முதலிய எட்டுத் திசைகளிலும் முறையே கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு முகமுடையவர்களாக அமைத்தல் வேண்டும். இரண்டுகை உடையவர்களாயின், கட்கம் கேடகம் உடையவர்களாக அமைக்க. பரிவாரங்கள் எண்மருக்கும் சக்திகளாவன, கட்கம் கேடகம் ஏந்திய சகுனி, பூதனை, இரேவதி, அருத்தபூதனை, வக்திரமண்டினி, சாந்தா, பீமரூபா, சுசாந்தர் ஆகியோர்.

மெய்காப்பாளர்களாகப் போற்றப்படுபவர்கள் எண்மர். அவர்கள் சண்முகர், சக்திபாணி, கார்த்திகேயர், குகர், ஸ்கந்தர், மயூரவாகனர், சேனனி, சக்தியத்தர் என்பவர்கள். இவர்களுக்கும் இரண்டு அல்லது நான்கு கைகளுண்டு. இரண்டுகையுடையவர்கள் கும்பிட்டுக்கொண்டும், நான்கு கையுடையவர்கள் முன்னிருகைகளாற் கும்பிட்டுக்கொண்டு, பின் இருகைகளால் வச்சிரம், பத்மம் இரண்டையும் தாங்கியிருப்பர். இவர்களுக்கும் ஆறு திருமுகங்கள் உண்டு. இப்பெயர்தாங்கிய முருகன்

திருவுருவங்கட்கும் இதற்குமுள்ள வேறுபாடு, கைகூப்பிநிற்றல் ஒன்றே. இவர்கள் திருவுருவங்கள் இரண்டாம் பிரகாரத்தில் கிழக்கு முதலிய எண்திசைகளிலும் மூலமூர்த்தியை நோக்கிக்கொண்டிருக்கும். மூலவர் சன்னிதியில் மயிலாவது யானையாவது அமைத்தல் வேண்டும். இந்திரன், இயமன், வருணன், குபேரன், அக்கினி, நிருதி, வாயு, ஈசானன் இவர்கள் உருவங்களையாவது பீடங்களையாவது அவ்வவற்றிற்குரிய திசைகளில் அமைத்தல்வேண்டும். விக்கினேசுவரர், க்ஷேத்திரபாலர், சூரியன், பெரிய பீடம் இவற்றை மூலவர் முன்னுள்ள மயில் அல்லது யானையின் இருமருங்கும் உரிய இடத்தில் நிலைபெறுவித்தல் வேண்டும். பலிபீடத்தின் எட்டு இதழ்களிலும் இந்திரன் முதலானவர்களையும், நடுவில் உள்ள பொகுட்டில் கிருகேசுவரரையும், வாயிலின் இருமருங்கிலும் துவாரபாலகர்களையும் நிலைபெறுவித்தல்வேண்டும்.

கருப்பக்கிரகத்தின் ஈசானபாகத்தில், ஸ்கந்தசண்டர் என்னும் சண்டிகேசுவரர் அமைக்கத்தக்கவர். அவர், இரண்டுகைகளை உடையவராயின் அபயமும் வேதமும், நான்குகைகளை உடையவராயின் அபயம், பத்மம், வச்சிரம், வரதம் இவைகளையும் உடையவராக அமைக்க.

கிராமமாயின், ஒருமுகமும் இருகையும் இருகண்ணும் உடையவராக வலது கையில் தாமரையைப் பிடித்துக்கொண்டு, இடது கையைத் தொங்கவிட்டுக்கொண்டிருக்கும் பாலஸ்கந்தராக நிறுவுக. மலையும் காடுமாயின் இருகையும், பூணூலும், சிகையும், வயிற்றில் மூன்றுமடிப்பும், வலக்கை தண்டமும் இடதுகை இடுப்பிலும் விளங்கக், கோவணம் உடுத்திய ஞானஸ்கந்தரை நிறுவுக. நகரம் அல்லது பட்டணமாயின் தேவியர்களோடு கூடிய முருகனே பூசிக்கத்தக்கவர். தலைநகரில் ஆறுமுகத்தோடும் ஆறுகைகளோடும் இருபெருந்தேவியர்களோடு கூடிய முருகன் நிலைபெறுவிக்கத்தக்கவர். பொதுவாகவே காடும் மலையும் நீங்க ஏனைய இடங்களில் இருபெருந்தேவியர்களோடு கூடிய முருகனையே பிரதிட்டை செய்விக்கவேண்டும்.

குமாரதந்திரம் என்னும் ஆகமம் முழுவதுமே முருகனுடைய வரலாறும், பிரதிட்டைமுறையும், விழவும், பூசையும், விரதமும், தீட்சையும், பிறவும் கூறுகிறது. இந்த ஆகமம் லளிதம் என்னும் மூலாகமத்தின் பேதம் என்று காமிகாகமத்தில் ஆகம உற்பத்தி கூறுமிடத்தில் கூறப்பட்டுளது. இதனது இறுதியிலே இருபத்தெட்டு ஆகமங்களின் சாரம் என்றும்

விளக்கப்பெற்றுள்ளது. இதில் முருகனுக்குரிய மந்திர - யந்திரவிதிகளும் நித்தியபூசை அக்கினிகாரியம் இவற்றின் விதிகளும், குகதீக்ஷை விதிகளும், பாலஸ்தாபனமுதல் பிரதிஷ்டை வரையில் உள்ள சிறப்புவிழாவின் விதிகளும், பதினைந்துநாள் விழா மாதவிழா விதிகளும் பிறவும் கூறப்பட்டுள்ளன. முருகன் கைகளின்வேறுபாட்டால் ஐவகைப்படுவர் என அறிவிக்கப்படுகிறது. அவற்றுள் இருகையுடைய திருவுருவங்கள் ஐந்துவகை என்றும், நான்கு கையுடையன ஏழுவகை என்றும், ஆறுகையுடையது ஒன்றே என்றும், எட்டுக்கையுடையன ஐந்துவகை என்றும், பன்னிரண்டு கையுடையன ஆறுவகை என்றும் கூறப்பெற்றுள்ளன.

அவர் அவதரித்த நாள் சித்திரைமாசத்துப் பூர்வபட்சத்துப் பௌர்ணமி. ஈருருவும் ஒன்றுனது பூர்வபட்சத்துப் பஞ்சமியில். சஷ்டியில் தேவசேனுபதியாக அபிடேகஞ்செய்யப்பட்டார். இந்திரன் தன்மகளான தேவசேனையைக் கொடுத்தான். விஷ்ணு ஆயுதம் கொடுத்தார். குபேரன் பத்து இலட்சம் இயக்கர்களைக் கொடுத்தான். அக்கினி ஒளியையும், வாயு வாகனத்தையும், தேவதச்சன் கோழியையும், ஏனைய தேவர்கள் எல்லையற்ற பரிவாரங்களையும் கொடுத்தனர். பின்பு திருமுன்பு மண்டியிட்டுத் தோத்திரித்தனர். குமாரக்கடவுள் அவர்களை நோக்கி 'உங்களுக்கு விருப்பமானது எது? அதைத் தருகிறேன்' என்ருர். தேவர்கள் வணங்கி மண்டியிட்டு. 'தேவ உலகத்தை அடியோடு அழிக்கும் அசுரர்குலத்தலைவனுகிய தாரகன் என்பவன் எப்போதும் எங்களை வருத்திக்கொண்டிருக்கிருன்; இரண்ய கசிபு, உக்கிரன் என்பவர்களும் வருத்துகிருர்கள்; அவர்களை அழித்து எங்களைக் காக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார்கள். குமாரக்கடவுள் அங்ஙனமே ஆகுக என்று சக்கரன் என்பவரை அழைத்து 'நீ தாரகாசுரனிடம் சென்று தேவர்களைச் சிறைவிட்டு இனியும் துன்புறுத்தாமல் இருக்கச்சொல்லுக; இல்லையெனின் போர் என்று அறிவித்துவருக' என்று ஆணையிட்டார். சக்கரனும் அவ்வாறேசென்று தெரிவித்தார். தாரகன் இணங்கவில்லை. சக்கரன் திரும்பிவந்துவிட்டார். தாரகன், நேற்றுவரை நமக்கு அடங்கியிருந்த சக்கரன் இன்று தூதாகவரக் காரணம் என்னே? எனச் சிந்தித்தான். சைனியங்களைப் போருக்குப் புறப்படச்செய்தான். குமாரக்கடவுள் அனைவரும் வாழ்த்துக்கூறப் போருக்குப் புறப்பட்டார். தாரகன்வந்து எதிர்த்தான். குமாரக்கடவுளைப்பார்த்து 'நீ ஒரு குழந்தை; இதை ஒரு பந்தாட்டம் என்று எண்ணிக்கொண்டாய்; இது போர்; அனுபவமில்லாத குழந்தைப்புத்தி இது' என்று ஏளனம் பண்ணினுன். குமாரக்கடவுள் சிரித்துக்கொண்டே 'இது சாஸ்திரார்த்தங்களை விசாரிக்குமிடமா?

இல்லே; சஸ்திரங்களால் சண்டைபோடும் இடம். குட்டிப்பாம்பென்ருல் கடிக்காமலாவிடும்? இளஞ்சூரியன் கண்ணைக் குத்தாதா? குழந்தையாய் இருந்தாலும் வெல்லமுடியாதா? நான் சில எழுத்துக்களைப் பேசுகின்றவன் தான்; மந்திரங்கள் எல்லாம் சில எழுத்துக்களால் ஆனவைதாம்; ஆனல் எவ்வளவுவல்லமை உள்ளவைதெரியுமா?' என்று பேசிக்கொண்டிருக்கும் போதே கதாயுதத்தை ஏவினன். குமாரக்கடவுள் அதனைச் சக்ராயுதத்தால் மாற்றினர். அவன் பின்பு சூலத்தை ஏவ, கரங்களைக்கொண்டே பிடித்து முறித்தெறிந்தார். இவ்வாறு ஆயுதங்கள் பயனற்றமை தெரிந்த அவன் தன் சைனியங்கள் அழிந்து தான் தனித்து நிற்றலை உணர்ந்து வஞ்சகத்தால் கிரவுஞ்சத்தில் ஒளிந்தான், குமாரக்கடவுள் கையில் வேலை எடுத்து, 'புத்தி கெட்டவனே! ஓடாதே நில் நில்' என்று ஏவினர். அது அவன் மார்பைப் பிளந்து உயிரைக் குடித்தது. வெள்ளத்தில் கிடக்கின்ற மலையைப்போல் உதிரவெள்ளத்திற்கிடந்தான் தாரகன். கண்ட தேவர்கள் எல்லோரும் மகிழ்ந்தார்கள்; தோத்திரித்தார்கள்.

பூர்வகாரணுகமம் முன்னுகமங்களில் கூறியவாறே மூர்த்திபேதங் களும் அவற்றின் அமைப்பும் கூறுகிறது.

விஷ்ணுதர்மோத்தரம் சண்முகப் பெருமான் செம்பட்டாடை யோடு மயில்வாகனத்தில் வலதுகை இரண்டிலும் குக்குடமும் மயிலும் விளங்க, இடதுகை இரண்டிலும் வைசந்தி என்னும் கொடியும் சக்தியும் இலங்க எழுந்தருளியிருக்கிருர் என்று கூறுகிறது.

பிருகத்சம்ஹிதை ஸ்கந்தர் என்பவர் குமாரரூபத்துடன் வேலே யேந்தி, கோழிக்கொடியுடன் விளங்குகிருர் என்று கூறுகிறது.

சில்பரத்தினம் சண்முகக்கடவுளை மயில்வாகனத்தோடு சூரிய நிறம் உடையவராகவும் கிராமத்தில் இருகரங்களையுடைய குமரக்கடவுளாக வும், (கர்வடத்தில்) நான்குகைகளையுடையவராகவும், மற்ற இடத்தில் பன்னிருகை மூர்த்தியாகவும் அமைக்க என்று கூறுகிறது.

மற்றும் முருகனுடைய திருவுருவம் அமைக்கும் முறைபற்றித்தெரி விக்கும் சில்பசாஸ்திரங்களாவன; மானசாரம், அகத்திய சில்பம், சில்ப சாஸ்திரம், சில்பரத்தினம், சித்திரகர்மவித்யா, ஹாஸ்யவ சில்பம், சில்ப சங்கிரகம், சில்பசாரம் முதலியன. இவற்றுள் சிறுசிறுமாற்றங்கள் அங்கங்கு காணப்படுகின்றன.

**வால்மீகத்தில் :**

வால்மீக ராமாயணத்தில் பாலகாண்டத்தில் இராம லக்ஷ்மணர்கள் விசுவாமித்ர முனிவரைப்பார்த்து 'தாங்களே தேவியின் மகிமை முழுதும் அறிந்தவர்கள்; கங்கை ஏன் மூன்று பிரிவாகப் பாய்கிருள்; அவளுடைய அலுவல்கள் யாவை? எப்படிப் புகழ்பெற்ருள்? எல்லாவற்றையும் எமக்கு விரிவாகச் சொல்லவேண்டும்' என்று கேட்கிருர்கள். கங்கையின் மகிமையைச் சொல்லவந்த விசுவாமித்ரர், முருகன்வரலாற்றைக் கூறுகிருர்.

முன்ஞெருகாலத்து நீலகண்டராகிய இறைவன் பார்வதியை மணம் செய்தருளினுர். பொறிகளைவென்ற செறிந்த தவஒழுக்கமுடைய, அவர் பார்வதியைத் தழுவினுர். தேவ வருஷங்கள் நூறு கழிந்தன. அப்பொழுதும் அவர்கட்குப் பிள்ளையில்லை. இதனை உணர்ந்த தேவர்கள் வருந்தி, பிரமனிடம் முறையிட்டுக்கொண்டார்கள். பிரமன் தேவர்களனைவரையும் அழைத்துக்கொண்டு திருக்கயிலைக்குச்செல்ல, அனைவரும் இறைவனை வணங்கினுர்கள். 'மகாதேவரே! நாங்கள் மிகவும் பணிந்து கேட்டுக்கொள்ளுகிருேம். உம்முடைய வீரியத்தை இவ்வுலகில் எவன் தாங்குவான்? மூவுலகங்களுடைய நன்மையை விரும்பி, தேவரீரே அக்கினிவடிவாகித் தாங்க வேண்டும்' என்று வேண்டிக்கொண்டார்கள். இறைவன் அப்படியே தீப்பிழம்பாகிய வீரியத்தை அக்கினியிடம் அளித்தார். அது பூமியில் நழுவிற்று; உலகம் எங்கும் பரவியது. எல்லாவற்றையும் வெப்பம் தாக்கியது. அதனைக்கண்டு அஞ்சியதேவர்கள் அக்கினிதேவனையும் வாயுவையும் நோக்கி 'நீங்களே இந்த உருத்திர வீரியத்தைத் தாங்கவேண்டும்' என்று ஆணையிட்டனர். அக்கினி அவ்வண்ணமே சிவரேதசைக் காப்பாற்றினுன். அது ஒரு வெண்மலையாயிற்று. கருமுதிர்ந்தது. கங்கையிலேவிட்டான். கங்கை அதனைத் தாங்கமாட்டாது, மூன்ருகப் பிரிந்தாள். விரைந்து அசைந்து எடுத்துச்சென்று மெலிந்தவளாய் நாணற்காட்டால் சூழப்பெற்ற சரவணப் பொய்கையிலே கொண்டுசேர்த்தாள். அங்குள்ள தாமரைப்பூவிலே முருகன் அவதரித்தார். இதைக்கண்ட பார்வதி கோபித்து, தேவர்கட்கும் பிள்ளையில்லாமல் ஒழியட்டும் என்று சபித்தாள். இவ்வரலாறு இராமாயணத்தில் காணப்படுகிறது. (பாலகாண்டம் 36-வது சர்க்கம்).

**மகாபாரதத்தில் :**

முன்ஞெருகாலத்தில் மகேசுவரனுடைய வீரியமானது நழுவிற்று; அக்கினியில் வீழ்ந்தது. அவன் அதனைத் தாங்கமாட்டாமல் வருந்தினுன்;

பிரமதேவனுடைய கட்டளையின்படி கங்கையில்விட்டான். கங்கை இமய மலைமீது விட்டாள். அது அங்கேயே வளர்ந்துவந்தது; குழந்தையாயிற்று. அக்கினிப்பிழம்புபோன்ற அக்குழந்தையைக் கார்த்திகைமாதர் அறுவரும் கண்டார்கள், 'இவன் எங்களுடைய பிள்ளை' என்று உரக்கக் கூவினர். அவர்கள் கருத்தையறிந்த முருகன் அவர்கள் விருப்பப்படி முலையுண்டார். மேருமலைபோலப் பொன்னிறமாகத் தமது ஒளியால் உலகே ஒளியுறும் படியாக வளர்ந்தார். கங்கை தாங்கியதால் காங்கேயன் என்றும், கார்த்திகை மாதர்கள் பெற்றதால் கார்த்திகேயர் என்றும் அழைக்கப்பெற்றார். தேவ கன்னிகைகள் ஆடியும் பாடியும் இவரைக் களிக்கச்செய்தனர். பூத கணங்கள் சூழ்ந்து பாதுகாத்துவந்தன. சுப்பிரமணியக்கடவுள் வளர்ந் ததும், இறைவனை நோக்கி வந்தார். சிவன், பார்வதி, அக்கினி, கங்கை இவர் கள் இந்தக்குழந்தை யாரைநோக்கிவருவான் பார்ப்போம் என்று எண்ணி னார்கள். சுப்பிரமணியக்கடவுள் நான்கு வடிவங்கொண்டு நான்குபேரையும் ஒரேகாலத்தில் அடைந்தனர். ஸ்கந்தர், விசாகர், சாகர், நைகமேயர் என்பது அவர் நான்கு வடிவுகொண்ட காலத்துள்ள பெயர்கள். சிவனை அடைந்த வடிவு ஸ்கந்தர்; பார்வதியையடைந்த மூர்த்தி விசாகர்; அக்னியை அடைந்தவர் சாகர்; கங்கையை அடைந்தவர் நைகமேயர். தேவர்கள் எல்லாரும் இதனை வியந்தார்கள்.

பிரமதேவர் இதனைக்கண்டு இத்தகைய யோக புருஷனுக்கு என்ன பதவி கொடுக்கலாம் என்று சிறிது ஆலோசித்தார். முடிவில் தேவசேனாபதி யாக்கலாம் என்று எண்ணி, பதினெட்டுக் கணங்களுக்கும் எல்லா உலகங் களுக்கும் சேனாபதியாக இருக்கும் பதவியை அளித்தார். தேவர்களும் இவரைப் பாராட்டிப் போற்றினார்கள். பல பூதகணங்களைப் படைத்து இவருக்குச் சேனையாகக் கொடுத்தார்கள். இந்திரன் சக்தி ஆயுதத்தையும், பெரிய மணி கட்டியதும் பாலசூரியன் போன்ற நிறமுள்ளதுமான ஒரு கொடியையும் கொடுத்தான். உருத்திரர் பெருவலிபடைத்த முப்பதினாயிர வெள்ளம் சேனையைக் கொடுத்தார். விஷ்ணு வைஜயந்தி என்னும் மாயை யைக் கொடுத்தார். உமையவள், என்றும் அழுக்கில்லாத இரு ஆடைகளை அளித்தாள். கங்கை கமண்டலங்கொடுத்தாள். குரு தண்டம்கொடுத்தான். கருடன் மயிலைக் கொடுத்தான். அருணன் கோழியைக் கொடுத்தான். வருணன் ஆடு கொடுத்தான். பிரமன் போரில் வெற்றியுண்டாகும் வரத்தையும் மான்தோலையும் அளித்தான். இவைகளை ஏற்றுக்கொண்ட சேனாபதியானவர் தேவர்களுக்குப் பகைவனும், மகாபலியின் பிள்ளையும்




ஸ்ரீ கார்த்திகேயர்

கொடியனுமான பாணன் என்னும் அசுரன்மீது படையெடுத்துச் சென்ருர். அவன் இவரிடம் பயந்து கிரவுஞ்சத்தைச் சரணமடைந்தான். இவர் சத்தியாயுதத்தால் கிரவுஞ்சத்தையும் துளைத்து அவனையும்கொன்ருர். அசுரசைனியங்கள் அழிக்கப்பட்டன. ஸ்கந்தரைச் சிலர் ஸநத்குமாரராகப் பாவிக்கிருர்கள். சிலர் கங்காபுத்திரராகப் பாவிக்கிருர்கள், சிலர் சிவ குமாரராகச் சிந்திக்கிருர்கள். கிருத்திகாதேவியின் பிள்ளையாகப் போற்று கிருர்கள் சிலர். இப்படி யோகிகளுக்கு எல்லாம் தலைவரான இவரைப் பலரும் பலகோடிவிதமாகப் பாராட்டினுர்கள் என்று கூறப்பெற்றுள்ளது. (வியாஸபாரதம் - சல்லியபர்வம் - 46, 47-வது அத்தியாயங்கள்.)

பத்மபுராணத்தில் :

சிவன் பார்வதியோடு ஆயிரம் ஆண்டு கலந்திருந்தார். பரபரப்புடைய தேவர்கள் சங்கரனுடைய செய்கையை அறிய எண்ணினுர்கள். யார் யாரையோ தூதாக அனுப்பினுர்கள். எல்லோரும் வீரகன் என்னும் கணநாதனுடைய சொல்லைக்கேட்டு, நிகழ்ச்சியை அறிந்துகொள்ள முடியா மலே திரும்பினர். அக்கினியை அனுப்பினுர்கள். அவன் கிளிவடிவாகிப் பறவைகள் நுழையும் சாளரத்தின்வழியாக உள்ளே புகுந்து, சங்கர னுடைய காமவிலாசத்தைக் கவனித்துக்கொண்டிருந்தான். இது சங்கர னுக்குத் தெரிந்தது. அவர் கோபித்துக்கொண்டு 'அன்னியனுகிய நீ பார்த்த மையால் தேவி லஜ்ஜையுற்ருள்; ஆதலால் என்னுடைய வீரியம் பாதிதான் அவளிடம் நழுவிற்று; மற்றப்பாதியை நீயே உண்டுவிடவேண்டியதுதான்; அதனைத் தாங்கக்கூடியவன்மை வேறு யாருக்கும் இல்லை' என்ருர். அவன் அப்படியே உண்டான். அவனை முகமாகக் கொண்டுள்ள தேவர்கள் அனை வரும் அதனுல் நனைந்தவர்களானுர்கள். அந்த வீரியம் அவர்கள் வயிற்றி னின்றும் பீறிட்டுப் புறப்பட்டு வெள்ளமாகிப் பலயோசனை நீளமும் அகலமு முள்ள ஒரு தடாகமாயிற்று. பல பொற்றாமரைகளோடு கூடியதும் பறவை ஒலிகளையுடையதும் ஆகிய அழகான குளமாயிற்று. அதைக் கேள்வியுற்ற பார்வதியானவள் தன்தோழிகளுடன் அந்தக்குளக்கரையை அடைந்து, பொன்மலரைப் பறித்துச் சூடிக்கொண்டு, நீரில் விளையாடிக்கொண்டிருந் தாள்; கார்த்திகைமாதர் ஆறுபேரையும் அங்கேகண்டாள்; தெளிந்த நீரைப் பருகிவிடவேண்டும் என்று எண்ணினுள். கார்த்திகைப் பெண்கள் ஆறு பேரும் தாமரையிலையில் அந்த நீரைச் சுருக்கியெடுத்துக்கொண்டு வீட்டிற் குப் போகத்தொடங்கினர். பார்வதி 'நீங்கள் தண்ணீரைக் கொண்டு போவது எனக்குத்தெரியும்; இங்கே கொடுத்துவிட்டுப் போங்கள்' என்று

ஆணையிட்டாள். கார்த்திகை மாதர்கள் 'இந்தநீரைப் பருகிக் கருவுற்றுப் பிறக்கும் குழந்தை எங்களுக்கும் குழந்தை என்று அழைக்கப்பட வேண்டும்; அப்படியானல் கொடுப்போம்' என்ருர்கள். 'என்னுடைய அங்கங்களிலிருந்து உண்டான குழந்தை உங்கள் குமாரனுக அழைக்கப் படுவது எப்படி ? முடியாது' என்ருள் பார்வதி. கார்த்திகைப் பெண்கள் 'அப்படியானல் உனக்குக் குழந்தை பிறக்கும்; ஆனல் உடற்குறையாகவே இருக்கும்' என்ன, உங்கள் விருப்பப்படி அழைக்கப்படும் அளித்துவிட்டுப் போங்கள் என்ருள் பார்வதி. அங்ஙனமே அவர்கள்தர அந்த நீரைப்பருகிக் கருவுற்ருள். பார்வதியின் வலது விலாவழியாகக் குமாரர் அவதரித்தார். இடது விலாவழியாக ஸ்கந்தர் அவதரித்தார். ஈருருவும் ஒருருவாகி ஆறு முகங்களோடும் பன்னிரு கைகளோடும் விளங்கியது. (41-வது சர்க்கம் : சுலோகம் 118 - 217 முடிய).

**குமாரசம்பவத்தில் :**

காளிதாசன்செய்த காவியங்களுள் மிகச் சிறந்தது குமாரசம்பவம். இதில் பார்வதி இமயமலையரசன் புத்திரியாக அவதரித்தது முதல் குமாரக் கடவுள் உற்பத்திவரையில் காவியச்சுவைபட எட்டுச் சருக்கங்களால் வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இதிலும் குமாரக்கடவுளுடைய தோற்றம் தாரகாசுரனை அழிப்பதற்காகவே எனக்கூறப்பட்டுள்ளது.

திருந்தப் புவனங்கள் ஈன்றபொற்
 பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில்
 ஏறி அறுவர்கொங்கை
விரும்பிக் கடல்அழக் குன்றழச்
 சூரழ விம்மிஅழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன்என்
 ருேதும்; குவலயமே.

*— கந்தரலங்காரம்.*

# பெயர்களும் காரணமும்

முருகன் சங்கநூல்களில் பிள்ளையார், சித்தன், சேய், செவ்வேள், முருகன், வேள், நெடுவேள், சேவற்கொடியோன், ஆலமர்செல்வன் சேய் முதலான பல பெயர்களால் அழைக்கப்பெறுகிறார்.

பிள்ளையார் என்பது சிவபெருமானுக்குப் பிள்ளையாயிருப்பதால் வந்தபெயர். அடைமொழி இல்லாமல் பிள்ளையார் என்றசொல் முருகனையே குறிக்கும் என்ற வழக்கு நச்சினார்க்கினியருரையில் பயின்றுவந்துள்ளது. இக்காலத்தில் நாம் கணபதியைப் பிள்ளையார் என்று குறிக்கிறோம். இச்சொல் அக்காலத்து முருகனைக்குறித்து வழங்கியதுபோலும்.

சித்தன் என்பது முருகன் எல்லாம்வல்ல சித்தராக - அன்பர்கட்குச் சித்தியை வழங்கியருள்பவராக இருப்பதால் வந்தபெயர். இதுவும் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடப்பெற்றுள்ளது. முருகக்கடவுளுடைய ஆயிரம் திருநாமங்களுள் ஒன்று. ஆவினன்குடியாகிய பழனியில் முருகன் எழுந்தருளியிருப்பதால் 'சித்தன் வாழ்வு' என்ற பெயரும் பழனிக்கு உண்டு என்று அறியப்படுகிறது. "சித்தன் வாழ்வு இல்லந்தோறும் மூன்று எரியுடைத்து" என்று ஔவையார் பேசுகிறார்.

சேய், சேயோன் என்றபெயர்கள் நிறம்பற்றி வந்தன. முருகன் செந்நிறம் உடையவராதலின் அவருக்கு இப்பெயர்கள் அமைவவாயின. என்றும் மாறா இளமைபொருந்திய முருகனுக்கு நிறம்பற்றிவந்தன இப்பெயர்கள். குழந்தைகளையும் சேய் என்கிறோம். இளமையும் செம்மை நிறமுமுள்ள முருகனுடைய பெயரே இளமை ஒன்றேபற்றிக் குழந்தைகளுக்கு ஆயிற்று. இதனைத் தாயும் சேயும் என்பனபோன்ற உலகவழக்குகளிலும் காணலாம். சேய் என்ற முருகன்பெயர் இளமைப்பண்பிற்காகி அதனையுடைய குழந்தைக்கும் ஆயிற்று.

வேள் என்பது விருப்பம். வேள்வி, வேட்கை, வேட்டல் முதலிய சொற்கள் யாகம், விருப்பம், மணம்செய்தல் என்ற பல பொருளைத் தருமாயினும் இந்த மூன்றும் வேள் என்னும் ஓரடியில் பிறந்தனவே.

விருப்பம் என்பதே அதன்பொருள். எல்லாராலும் விரும்பப்படுதலின் முருகன் வேள் எனப்பட்டார். வேள் என்று மன்மதனுக்கு ஒருபெயர் உண்டு. அவன் பொருள்கள்மேல் விருப்பத்தை விளைவிக்கிறான்; அதனால் அவன் வேள் ஆனான். வேள் என்ற சொல் பொதுமையினின்று முருகனை யும் மன்மதனையும் உணர்த்துதலால் இருவரையும் வேறுபடுத்த முருகனைச் செவ்வேள் என்றும், மன்மதனைக் கருவேள் என்றும் நிறம்பற்றிய அடை களைக் கொடுத்துப் பிரித்தனர் புலவர்பெருமக்கள். வேள் என்பது இருங் கோவேள், நாங்கூர்வேள், அழுந்தூர்வேள் என வேளாளர்களுக்கும் பட்டமாக வழங்கிவந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. அந்த வேள் என்ற சொல் உபகாரம் என்னும் பொருளில் வழங்கியது. 'விருந் தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு' என்ற இடத்தும் வேளாண்மை உபகாரம் எனப்பொருள்படுதலை அறியலாம். எங்ஙனமாயினும் விரும்பப் படுதல், விருப்பத்தை விளைவித்தல், உபகாரம் என்ற மூன்று குணமும் நம் முருகப்பெருமானிடத்து ஒருசேர விளங்குகின்றன, அதனால் முருகப் பெருமான் வேளெனப்படுகிறார் என்பது மிகப்பொருந்துவதாம். முருகனை விரும்பாதவர்கள் யார்? அவன் விரும்பச்செய்யவில்லையானால் நாம் விரும்பு வது எங்ஙனம்? அன்பர்களுக்கு முன்னின்றும், உடனின்றும், ஒன்றாய் நின்றும் அவன் செய்கின்ற உபகாரம் நம்மால் அளவிட்டுச் சொல்ல முடியுமோ? அதனால் எல்லாப் பண்புகளையும் ஒருசேரப் பொருந்தி நிற்பவன் முருகன். அவனுக்கே வேள் என்றபெயர் மிகப்பொருத்தம். காலத்தானும், தேயத்தானும் சேயோர்களுக்கு அண்ணியனாக - அளவிடற் கரிய புகழை உடையவனாக இருத்தலின் நெடுவேள் என்றும் பாராட்டப் படுகிறார் முருகப்பெருமான்.

வேலன் என்பது வெற்றியைத்தருகின்ற வேலைக் கையிலேந்தியமை யால் வந்த பெயர். முருகனுக்கு அடையாளமான படை வேல். வேலை ஏந்தியவன் வேலன்.

'ஆலமர் செல்வன் சேய்' 'சேவற்கொடியோன்' 'கொற்றவை சிறுவன்' 'மாற்றோர் கூற்று' 'அறுவர்பயந்த ஆறமர் செல்வன்' முதலான பெயர்கள் அவருடைய தோற்றம் வீரம் முதலிய வரலாறுபற்றி வந்தன.

அரன்மகன்: ஹரன் - பாவநாசன்; சங்கார கருத்தா. ஆன்மாக் களுடைய பாசங்களை நாசம் செய்பவரும், சங்கார கருத்தாவுமாகிய

சிவபெருமான் முருகனுடைய தோற்றத்திற்குக் காரணமாக இருந்தார் ஆதலின் மகன் முறைகொண்டு அரன்மகன் என்றபெயர் வந்தது. எல்லாப் பொருளிலும் கலந்துநின்று அருள்வழங்கும் அதீதப்பொருள் சிவயோகியது சிவயோகானுபவத்தில் வெளிப்பட்டு நின்று பிரகாசிக்கின்றபோது ஆனந்த மாகிறது. அச்சொருபமே மகன், முருகன். ஆகவே எந்த ஆன்மாக்களும், அரன்மகனுகிய சிவானுபவப் பொருளேக் காணுமல் பரமுத்தியடைய முடிவதில்லே.

அறுமீன் காதலன்: கார்த்திகைமாதர் ஆறுபேருக்கும் அவர்கள் தவத்திற்காக இரங்கி அவர்கள் முலேயுண்டு வளர்ந்தமகன்.

அறுமுகன்: ஆறுமுகங்களுடையவன்: சிற்சத்தியாகிய சிவசத்தியின் வதனம் ஒன்றும், சிவபெருமானுடைய முகம் ஐந்தும் ஆம். இந்த ஆறு முகங்களும், ஆன்மாக்கள் விருப்பு நிறைவேறும்வண்ணம், திருவருளே காரணமாக இயற்றப்பெறும் படைத்தல் முதலான ஐந்துதொழில் இயற்று தற்காக அபேத சிவசத்தியாகிற சிற்சத்தியில் பத்தில் ஒருகூறு வலியுள்ள மஹாசாதாக்கியம் என்னும் தத்துவமும் மஹாசாதாக்கிய மூர்த்தியும் பொருந்தின கீழ்நோக்காயுள்ள அதோமுகமும், பராசத்தியின் பத்திலொரு பங்கு வலியுள்ள சாதாக்கிய தத்துவமும் சதாசிவமூர்த்தியும் பொருந்தின மேனேக்காகவுள்ள ஈசானமுகமும், ஆதிசத்தியில் பத்திலொருகூருன அமூர்த்திசாதாக்கியமும் ஈசன் என்னும் மூர்த்தியும் பொருந்தின மேற்கு நோக்கிய சத்தியோசாத முகமும், இச்சாசத்தியில் பத்திலொருகூறு வலியுள்ள மூர்த்திசாதாக்கியமும் பிரமீசன் என்னும் மூர்த்தியும் பொருந்தின வடக்கு நோக்கியுள்ள வாமதேவமுகமும், ஞானசக்தியில் பத்தில் ஒருகூறு வலிகொண்ட கன்மசாதாக்கியமும் ஈசானன் என்ற மூர்த்தியும் பொருந்தின கிழக்குநோக்கியுள்ள தற்புருடமுகமுமாம். இவைகளே முருகனுக்குரிய முகங்கள் ஆறுமாயின.

'நங்குமாரன் உனது சொருபத்தையும், எனது சொருபத்தையும் கொண்டவன் ஆதலின் அறுமுகனுயினன்' என இறைவன் உமைக்கு உரைப்பதாகவரும் ஸ்காந்தபுராணம் கொண்டும், 'ஐந்துமுகத்தோடு அதோ முகமும் தந்து, திருமுகங்கள் ஆருகிச் செந்தழற்கண் ஆறும், ஒருமுகமாய்த் தீப்பொறி ஆறு உய்ப்ப' எனவரும் கந்தர்கலிவெண்பாப் பகுதிகொண்டும் அறியலாம்.

**குரு:** பிரமவித்யா மரபுகளை விளக்கும் ஆசிரியன். சிவனுக்கும், அகத்தியர்க்கும், நந்திதேவருக்கும், தசரதராமனுக்கும், வாமதேவமுனிவர்க்கும், நாரதர்க்கும், பராசரமுனிவர் புத்திரர் ஆறுபேர்க்கும் குருவாதல்பற்றி இவர் வேதம் வேதாந்தம் சித்தாந்தம் கலைகள் எல்லாவற்றிற்கும் பரமாசாரியன் என்பது பெறப்படும். மகாஸ்காந்தத்தில் பல இடங்களில் 'லோககுரு' 'ஜகத்குரு' எனவரும் பகுதிகள் இதனைநன்கு விளக்கும். சிவபெருமானுக்குப் பிரணவப்பொருளை விளக்கிக் காட்டியதுபற்றிச் 'சிவகுரு' எனவும் போற்றப்படுகிறார்.

**கோழிக்கொடியோன்:** அக்னி தேவனையும், சூரன் உடற்பிளப்பில் ஒன்றான கோழியையும் கொடியாகக் கொண்டவர் என்பது பொருள். நமக்கு ஒரு தலைவன் உண்மையை உணர்த்துவது கோழிக்கொடி.

**கங்கை மைந்தன்:** இமயமலை அரசன் மகளாகிய குடிலையென்னும் பெயருடைய கங்கை உமாதேவிக்கு மூத்தவளாதலின் உமைமகன் அவளுக்கும் மகனாயினன். அன்றியும் தீப்பொறிகளைக் கங்கை சுமந்துசென்று சரவணத்து உய்த்து வளர்த்தமையாலும் இம்முறை இயைவதாயிற்று. ஆணவம் என்னும் அழுக்கைப்போக்கி உண்மகிழ்ச்சியைத் தாராநின்ற அருட்பிரவாக சக்தியினிடம் விளங்கிநின்ற சிவானந்த சொரூபம் கங்கை எனப்பட்டது.

**கடம்பன்:** கடப்பமலர்மாலையைச் சூடியவன். இது நித்தியத் தூய்மையை உணர்த்தும்.

**கந்தன்:** வலியமைந்த தோள்களையுடையவன். ஸ்கந்தம் - தோள். இப்பொருள்பற்றியே இப்பெயரமைந்தமையை ஸ்காந்தபுராணங்கொண்டு தெளியலாம். தமிழ்க் கந்தபுராணத்து "சேயவன் வடிவம் ஆறும் திரட்டிநீ ஒன்றாய்ச் செய்தாய், ஆயதனாலே கந்தனும் எனும் நாமம்பெற்றான்" என்று கூறப்பெற்றுள்ளது. ஒன்றுகூட்டப் பெற்றவர் என்னும் காரணம்பற்றி வந்த பெயராம். இப்பெயர் சர்வசக்திதத்துவத்தைக் குறிப்பது.

**கலையுணர்புலவன்:** அறுபத்துநான்கும், அதற்கு மேற்பட்டுள்ளதுமாகிய கலைகளை இயற்கையேயுணர்ந்த பேரறிஞர். 'ஆறறிபுலவ' 'புலவரேறே' என்று முருகாற்றுப்படையும் மொழிகின்றது. மதுரையில் உப்பூரி குடிகிழார் மகனாரெனத்தோன்றி இறையனாரகப்பொருளுரையின் அருமை

உணர்த்தியதும், ஔவையாருக்கு நாவற்பழமீந்து நல்லருள் செய்ததும் ஆகிய தமிழ் அருமையைப் பாராட்டிய நிகழ்ச்சிகளால்வந்த பெயருமாம்.

காங்கேயன், கார்த்திகேயன் என்பன கங்கைமைந்தன், அறுமீன் காதலன் என்ற பெயர்களின் காரணத்தான் வந்த வடமொழித் திரு நாமங்கள்.

குகன்: மலைக்குகைகளில் கோயில்கொண்டிருப்பவன். குகை - தகராகாசம். இதுவே இதயபுண்டரீக சிதாகாசம். இதில் எழுந்தருளியிருப் பவன் குகன். அதாவது உயிர்கள் அனைத்தினிதயாகாசத்திலும் எழுந்தருளி யிருப்பவன். 'வேத வேதாந்தங்களில் தகராகாசமானது குகையெனக் கூறப் படுமன்றோ! சகல பிராணிகளின் இதயகமலங்களில் வசித்திருப்போன் உன்மகனுதலின் அவன் குகன் எனப்படுவான்' என உமையம்மைக்குச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியதால் காணலாம்.

குமரன்: இது சிவன்மகன் என்ற காரணம்பற்றி வந்த பெயர். பிரமசாரி யெனலும் ஆம். கு - அருவருப்பு. மாரன் - (அதனை) அழிப் பவன். குமாரன் - ஆணவமலபந்தங்களை நீக்குபவன் என்னும் பொருளது.

குழகன்: அழகன்: இளையோன். குழ - இளமைப் பொருளைத் தரும் இடைச்சொல்.

குறிஞ்சிவேந்தன்: பரங்குன்று, பழனி முதலிய மலைகளில் எங்கும் தங்கி ஆட்சிபுரிபவன். மலைபோலுயர்ந்த மனத்தை இடமாகக்கொண்டு விளங்குபவன் எனலுமாம்.

குன்றெறிந்தோன்: அகத்தியரின் சாபத்தால் அன்றில்வடிவமான மலையாகிய கிரவுஞ்சத்தை வேலாயுதத்தால் வென்றவன். மாயையின் முக்குணமூல அகங்காரத்திற் பிரதிபலித்த அனேக பிரமாண்டாதிபதியாகிய ஆணவமலம் என்னும் சூரனுக்கு உறவான முக்குண விகற்ப அகங்கார கடினத்தை ஞானசக்தியால் வென்றவன் என்பதாம்.

கௌரிநந்தனன்: கௌரி என்னும் உலகமாதாவுக்கு மகன். உலகம் எல்லாவற்றையும் ஈன்றும் நித்தியகன்னிகையான உமாதேவியார் பிள்ளைத் தன்மை பாராட்டியிருக்கின்ற பெரும்பொருள்.

**சண்முகன்:** அறுமுகன் என்பதன் வடமொழித்திருநாமம்.

**சரவணபவன்:** நாணற்புல் நிறைந்த பொய்கையில் தோன்றியவன் என்பதாம். சரம் - நாணல். வனம் - காடு, நீர். வனம் வணமாயிற்று. பவன் - தோன்றியவன். திருவைந்தெழுத்து சிவனுக்குரியது ஆதல்போலச் சரவணபவ என்னும் ஆறெழுத்து முருகனுக்குரிய தாரகமந்திரமாம். ச - மங்களம், ர - ஒளி அல்லது கொடை, வ - சாத்துவிகம், ந - போர். மங்களமும், ஒளியும், வள்ளன்மையும், சாத்துவிகமும், வீரமும் செறிந்து தோன்றியவன் எனவும்; மங்களம் - சிவம், ஒளி - சக்தி, சாத்துவிகம் - நம: என்பது, வீரம் - ய என்னும் ஆன்மா. எல்லாம்கூடி சிவயநம: என்னும் ஐந்தெழுத்தே ஆறெழுத்தாக ஆயிற்று எனவும் கருத்துடையனவாக ஞானிகள் கூறுவர்.

**சிலம்பன்:** மலைகளில் இருப்பவர் என்னும் காரணம்பற்றியும், காலில் சிலம்பணிந்தவர் என்பதுபற்றியும் வந்தபெயர். சிலம்பு - நாதமாகிய சிலம்பு. பரநாதமே இறைவன் சிலம்பொலியாதல் உணர்க.

**சுரேசன்:** சூரபன்மனுதியரால் விளைந்த துன்பத்தை நீக்கித் தேவர்களைக் காத்து அவர்கட்குத் தலைவனாக இருப்பவன்.

**சூர்ப்பகைவன்:** சூரபன்மனுக்குச் சத்துரு. சூர் - அச்சம், துன்பம். இவற்றிற்குப் பகைவராய் அடியார்களைக்காத்தலின் இப்பெயர் அமைந்தது.

**செட்டி:** உப்பூரிகுடிகிழார் மகனாய் உருத்திரசன்மராய்ச் செட்டி மரபில் தோன்றியமையால் இப்பெயர் வழங்கலாயிற்று. செட்டு - வாணிகம். செட்டி - வாணிகன்.

**சேந்தன்:** 'செக்கரும் செம்மையும் சேந்தும் பாடலமும்' எனப் பிங்கலந்தை கூறுமாற்றானே சேந்து - சிவப்பு என்னும் பொருளது. சேந்தன் - சிவப்பு நிறமுடையவன்; சோதிரூபப் பிரமம் என்பதாம்.

**சேவற்கொடியோன்:** இது ஆண்டலைக்கொடியோன் என்பதை ஒக்கும்.

**தாரகற்செற்றோன்:** சூரபன்மன் தம்பியாகிய தாரகாசுரனைக் கொன்றவன். தாரகாரி என்பதும் இப்பொருளதே.

தெய்வயானை காந்தன், தெய்வயானை காதலன்: தேவேந்திரன் புத்திரியாகிய தெய்வயானையம்மையாருக்குக் கணவர்.

தேவசேனாபதி. சேனானி என்பன தேவர்களாகிய சேனைக்குத்தலைவன் என்பதாம். ஆன்மாக்களை ஆளும் நாயகன் என்பதுமாம்.

பாவகி: அங்கியே உருவமாக உடையவர். பாவகாத்மஜன் என வடமொழியில் வழங்கப்பெறும். பரிசுத்தமுடையவன் எனலுமாம்.

மஞ்ஞையூர்தி: மயிலை வாகனமாகக்கொண்டு ஊர்பவர் என்பதாம். மகாமாயை என்னும் மயூரத்தில் எழுந்தருளியிருப்பவர் என்பதுமாம்.

மாயோன் மருகன்: திருமாலுக்கு மருகன் என்னும் முறையில் நிற்பவர். "அநுதினம் விழிதுயில்பவர் தங்கச்சிக்கு ஒரு புதல்வோனே" என்று அருணகிரிநாதர் கூறுமாற்றானும் அறியலாம்.

முருகன், முருகு என்பன முன்னர் விளக்கப்பெற்றன.

வரைபகவெறிந்தோன் என்பது குன்றமெறிந்தோன் என்பதற்குக் கூறிய பொருள்நோக்கியே வந்தது.

வள்ளிமணாளன்: வள்ளிதேவிக்கு மணாளன். வள்ளி - இச்சாசக்தி.

பாகுலேயன்: கார்த்திகேயன் என்பதுபோலக் கொள்க. பாகுலை - கார்த்திகை.

விசாகன்: வைகாசிமாத விசாகநட்சத்திரத்தில் தோன்றியவன், வி - பட்சி. சாகன் - சஞ்சரிப்பவன்; மயிலாகியபட்சியிற் சஞ்சரிப்பவன் எனலும் ஆம்.

வேலன்: வேற்படையை உடையவன். வேல் - ஞானசக்தி. வேலிறை, வேலிறைவன் என்பனவும் இப்பொருளனவே.

சங்கத்தலைவன்: கலையுணர் புலவன் என்பதன் பெயர்க்காரணம் இதற்கும் ஆம்.

சாமி: ஸ்வாமி என்பதன் திரிபு. ஸ்வம் - பொருள். ஸ்வாமி - செல்வன். சாமிமலை என்பதும் நோக்குக.

முத்தையன்: ஐயன் - குரு. குருவில் முத்துப்போலச் சிறந்தவன் என்பதாம்.

சுப்பிரமணியன்: நல்ல வேதத்திற்குத் தலைவன் என்பதாம். சிறந்த தேவன் எனலுமாம். ஆனந்தமயமான பரவஸ்துவிலிருந்து தோன்றி ஒளிர்பவன் என்பதும் ஆம்.

இவைகளேயன்றிப் புராணவரலாறு குறித்து அன்பர்களாலும், கவிஞர்களாலும் படைத்திட்டுக்கொண்ட திருநாமங்களும் பலவுள்ளன. அன்றியும் எழுந்தருளியிருந்து ஆன்மாக்களை ஈடேற்றும் தலங்களடியாகவும் பிறந்த பெயர்கள் அளப்பில. இப்பெயர்களை எண்ணும்போதே அவற்றின் பெயர்க்காரணமும் சிந்திக்கப்பெற்று முருகன் நமக்குச்செய்த பேரருட்டிறங்களும் தோன்றலின் நம்மனம் கனிகிறது; ஈடுபடுகிறது. கண்ணீர்மல்கத் தன்னைமறந்து முருகன்மயமாகிறோம்.

**சிவமே முருகன் : முருகனே சிவம் :**

சிவம் எங்கும் நீக்கமற நிறைந்த இன்பமே வடிவான அறிவுருவுடையது; (சத் சித்து ஆனந்தம்) உண்மை அறிவு ஆனந்த வடிவுடையது. உண்மையையும் அறிவையும்விட்டு ஆனந்தம் தனித்திராது. அங்ஙனம் உண்மையும் அறிவும் என்றும் பிரியாதன. ஆகவே இந்த மூன்றும் ஒரு பொருளின் மூன்றுநிலைகள்.

உண்மையாகிய பரம்பொருள், சித்தாகிய திருவருட்சத்தி தன்னினின்று பிரிந்திருக்கும்நிலையில் அம்மையாகிறது. உண்மையும் அறிவும் தம்முளியையும்போது ஆனந்தம்விளைகிறது. ஆனந்தத்துள் சித்து நிறைந்த ஆனந்தமும், சத்து நிறைந்துள்ள ஆனந்தமும் என இருவகை நிலையுண்டாகலாம் அன்றோ! அவற்றுள் சித்து நிறைவான ஆனந்தம் சத்தியின் கூறு நிரம்பிய முருகன் என்னும் திருப்பெயரைச் சேர்கிறது. சத்து நிறைவான ஆனந்தம் சிவத்தின்கூறு நிரம்பிய பிள்ளையார் என்னும் திருப்பெயரைச் சேர்கிறது. முருகன் ஒளிவடிவர். விநாயகர் ஒலிவடிவர். இதனையே உமையம்மையின் உருவினின்றும் பிரணவநாத வடிவினராகப் பிள்ளையார் படைக்கப்பெற்றார் என்று சைவபுராணம் *ஞானசங்கிதை

* சைவபுராணம் - ஞானசங்கிதை - அத் - 32, சுலோ - 17, 18.

கூறுகிறது. முருகன் இறைவனுடைய நெற்றிக்கண்ணினின்றும் தீப்பொறியாருகச் சேர்ந்தார் என்று *கந்தபுராணம் தெரிவிக்கிறது. ஆகவே, சிவமே நம்மைப் பாதுகாக்க, நமது பரிபாகநிலைக்கு ஏற்பச் சிவமாகவும், முருகனுகவும், விநாயகராகவும் விளங்குகின்றதன்றிச் சிவத்தினும் வேருனதன்று. முருகன் பிறப்பைப்பற்றி மொழியும் பரிபாடற்கதை, பாத்மபுராணம், பாரத ராமாயணக்கதைகள் உயர்நிலையில் உள்ள முருகனைப்பற்றியதன்று என்று துணிக. சண்டேசுர பதவியை எய்தும் பக்குவான்மாக்களும், சண்டேசுரரும் வேருவர் என்பதைச் சமய உண்மைகளை மரபாக அறிந்த பெரியோர்கள் ஒப்புவர். அதுபோல் பரசுப்பிரமணியமும், முருக பதவிகளை எய்தியவர்களும் வேருதல் வெளி. அங்ஙனம் முருகனுடைய பதவிகளை எய்துகின்ற சில பக்குவான்மாக்களைப் பற்றியெழுந்த வரலாறுகளைப் பரமுருகனைப் பற்றியதாகக்கொண்டு மயங்கல் அறிவுடைமையாகாது.

அன்றியும், சமயக்காழ்ப்புத் தலையெடுத்திருந்தகாலத்து, சமய வெறுப்புக்கொண்டு ஓதப்பெற்றன உண்மையான வரலாறுகளாக ஆகாவன்றே ? இடைப்பட்டகாலத்துப் புறச்சமயிகள் சிலரும், சைவ வைணவ புராணங்களின் இடையில் ஒருவருக்கு ஒருவர் உள்ள அமைதிகெட்டுக் கலகம் செய்துகொள்ளக்கூடிய அளவில் மாருன - இறைமைத்தன்மைக்கு ஒவ்வாத வரலாறுகளை அமைத்துவிட்டனர் என்பதை வடமொழி இலக்கிய வரலாற்றில் புராணகாலத்தைப்பற்றியெழுதிய அறிஞர்கள் புகலுகின்றனர்.

சிவமே முருகன் என உமையம்மைக்குச் சிவபெருமான் உபதேசிப்பதாக வரும் 'நான் ஐந்து திருமுகந்தாங்கி ஐந்தொழிலாற்றும் சதாசிவன்; நீ பலவாருக இருப்பினும் ஒருமுகமுடைய பராசத்தி; முருகன் இருவர் முகங்களையும் ஒருங்குகொண்டுள்ள நமது குமாரன்; நாமே அவன்' எனக் கூறுவதாகவரும் சம்பவகாண்டத்தின் சுலோகங்களாலும் தெளியலாம்.

" ஈசனே அவன் ஆடலால் மதலையாயினன் காண்
ஆசிலா அவன் அறுமுகத் துண்மையால் அறி நீ
பேசில் ஆங்கவன் பரனெடு பேதகம் அல்லன்
தேசுலா வகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல் "

" ஆதலால் நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும்
பேதகம் அன்ருல் "

---

* கந்தபுராணம் - உற்பத்திகாண்டம் - திருவவதாரப்படலம்.

" நன்முகம் இருமூன்று உண்டால் நமக்கவை தாமே கந்தன்
தன்முகமாகி யுற்ற தாரகப் பிரமமாகி
முன்மொழிகின்ற நந்தம் மூவிரண்டெழுத்தும் ஒன்ருய்
உன்மகன் நாமத்தோராறு எழுத்தென உற்ற அன்றே"

" திருவுருவானும் சேயைச் சிவனெனத் தெளிதல் வேண்டும்"

எனவரும் கந்தபுராணப்பகுதிகளும் இக்கருத்தை நன்கு வலியுறுத்தும். வேதமும் அவனே மகேசன், உமை, விநாயகன், கந்தன் என்கிறது.[1] பெண்ணும், ஆணும், குமாரனும் நீயே என்கின்றது [2]சுவேதாசுவதரம். இங்ஙனமாகவும் முருகனே ஆறுநாட்பாலகன் என்று எண்ணிச் சூரபன்மன், தாரகன், இந்திரன், பானுகோபன், அக்னிகோபன், வச்சிரவாகு முதலியோர் அழிந்தனர் என்பதை வரலாறு வகுத்துக்காட்டும்.

" ஊரிலான் குணங்குறியிலான் செயலிலான் உரைக்கும்
பேரிலான் ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்
சாரிலான் வரல்போக்கிலான் மேலிலான் தனக்கு
நேரிலான் உயிர்க்கடவுளாய் என்னுளே நின்ருன்"

எனச் சிவத்திற்கு உள்ள சிறப்பியல்பு முழுதும் முருகனுக்கும் தோன்றப் புகழ்ந்துள்ளதை நோக்குக.

---

[1] यश्च महेश्वरः याचोमा यश्च विनायकः यश्चस्कन्दः ।

—அதர்வசிரசு.

[2] त्वं स्त्री त्वं पुमान् त्वं कुमारः ।

—சுவேதாசுவதரம்.

# திருவுருவ அமைப்பு

உருவும் நிறமும் இல்லாத கடவுள் நம்மீதுவைத்த கருணையால் திருமேனி தாங்குகிறார் என்று முன்னரே கூறினோம். அங்ஙனமாக முருகன் சரவணப்பொய்கையில் ஆறு குழந்தைகளாக விளையாடும்பொழுது ஒரு முகமும் இருகரங்களும் உடையவராக விளங்கினார். பின்னர் ஆறு உருவங் களும் ஒன்றாகி ஆறுமுகங்களும் பன்னிரு திருக்கரங்களும் உடையவராக விளங்கினார்.

அறுமுகக் கடவுளாகவே திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் நிலையைத் திருமுருகாற்றுப்படை, தியானத்திற்கு ஏற்றமுறையில் தெரிவிக் கிறது. ஒருமுகம், ஒளியை வீசுகிறது; இருளை ஓட்டுகிறது. அம்முகத்திற் கேற்ப ஒருகை தேவமுனிவர்கட்குப் பாதுகாப்பாக உயரத்தூக்கப்பெற் றுள்ளது. அதற்கு இணையான மற்றொருகை இடுப்பிலே வைக்கப்பெற் றுள்ளது; என்ன பொருத்தம்! உலகம் அறியாமை இருளில் கிடந்து அவதிப்படுகிறது. அந்த இருளைச் சூரியனும் சந்திரனும் அக்கினியுமாகிய எந்தப் புற ஒளியும் போக்கமுடியாது. அதனைப் போக்கி ஆட்கொள்ளு கின்ற ஒளி, ஞான ஒளி ஒன்றுதான். அந்த ஒளியைச் செய்தது ஒருமுகம். அம்முகத்துக்கேற்ற கைகள் என்ன செய்யவேண்டும்? அறியாமை நீங்கிய தேவமுனிவர்களுக்கு ஆபத்து வராமல் காக்கவேண்டியதும் கடமை யல்லவா? அந்தத் தொழிலை ஒருகை செய்கிறது. மற்றொருகை எடுப்பாக எம் அடியாரை எத்தகைய இருளும் வந்து பற்றாது என்ற குறிப்புடன் இடுப்பிலே விளங்குகின்றது.

மிகக் கனிந்த உள்ளத்து அடியவர்கள் பக்கத்தில் நின்றுகொண்டு கசிந்து கண்ணீர்மல்கத் தோத்திரிக்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய வரங்களை எல்லாம் விரைந்து அளிக்கிறது ஒருமுகம். அதற்கேற்ற திருக் கைகளில் ஒன்று தொடைமீது சும்மாகிடக்கிறது. மற்றொன்று தான் ஏறிவந்த யானையின்மேல் அங்குசத்தைச் செலுத்துகிறது. என்ன வியப்பு! உதவி செய்யக்கூடியவர்களில் சிலர் 'ஆத்திரம் உள்ளவர்கள் நம்மைத்

தேடிவரட்டுமே ஆவனசெய்யலாம்' என்றிருப்பார்கள். அவர்கள் இருக்குமிடம் தேடித்தேடி ஓடிப்போய் உதவிசெய்பவர்கள் ஒருசிலர். முருகன் எளிவந்த கருணையால் அன்பர்கள் இருக்குமிடம் தேடிச்சென்று அருள் கொடுக்க விரும்புகிருர் ; யானையின்மேலேறுகிருர். யானை வேகமாகத்தான் போகிறது. ஆனுலும் அவருடைய திருவுள்ளம் மிகப் பரபரக்கிறது. அங்குசத்தால் அதனைக்குத்தி விரையச் செலுத்துகிருர். இது ஒரு திருக்கையின் தொழில்.

உலகம் உய்ய, உள்ளம் ஒருமைப்பட, வான்முகில் வழாதுபெய்ய, மலிவளம் சுரக்க அந்தணர்கள் ஆகுதி செய்கிருர்கள். அதில் கொஞ்சங்கூட மந்திர தந்திரக் குறைபாடுகளில்லை. அப்படி மனமொன்றி அவர்கள் ஆகுதி செய்கின்றபோது அசுரர்கள்வந்து தடுக்கிருர்கள். யாகம் அழிகின்றது. அங்ஙனம் அதற்குத் தீங்குவராதபடி அதனைக் கூர்ந்து ஆராய்ந்துகொண்டே இருக்கிறது ஒருமுகம். எந்தப்பக்கத்திலிருந்து துன்பம் வந்தாலும் அதைத் தடுக்க ஒருகை வேலையும், ஒருகை கேடகத்தையும் சுழற்றிக்கொண்டே இருக்கிறது. அவற்றுள் கேடகம் எதிரிகள் விடும் ஆயுதத்தைத் தடுக்க. வேல் அந்தணர்களுக்கு உண்டாகும் ஆபத்தைத் தடுத்து அசுரர்களை அடக்கி வேள்வியைப் பாதுகாக்க.

வேத வேதாங்கங்களையெல்லாம் விதிப்படி ஓதிய முனிவர்கள், பொருள்விளங்கக் கற்றவர்கள்தாம். ஆனுலும் ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு ஆகாததுபோல இவர்கள் படிப்பு ஐயத்தைப் போக்கவில்லை; அமைதியை உண்டாக்கவில்லை. அவர்கள் வந்து தங்கள் ஐயத்தைக் கேட்கிருர்கள். குளிர்ச்சியாகப் பொருள்களை விளக்குகின்ற சந்திரனைப்போன்ற ஒருமுகம் உள்ஞானத்தை உதவி உறுதியை விளைவிக்கிறது. ஐயமுற்றவர்களுக்கு அமைதியின்மையால் அச்சம் உண்டாவதியற்கையே. ஆதலால் அஞ்சாதே என்று அபயம் அளிக்கவேண்டியது அவசியமாயிற்று. ஆகையால் ஒருகை மார்போடு அபயஹஸ்தமாக விளங்கிக்கொண்டிருக்கிறது. 'அஞ்சாதே' என்று சொன்னுல்மட்டும் போதுமா? விரும்பியதை அளிக்கவேண்டாமா? அதனுலே ஒருகை மாலையொடு மாலையாக ஞானத்தை வழங்கிக்கொண்டிருக்கிறது. அதுதான் வரதஹஸ்தம்.

இறைவனுக்கு வேண்டுதல் வேண்டாமை இல்லை; கோபமும் தாபமும் இல்லை; பகையும் நண்புமில்லை. ஆனுலும் அசுரர்கள் தேவர்களைச் சிறைப்படுத்திச் சித்திரவதை செய்கிருர்கள். நடுநிலை தவறியவர்களைத்

தண்டிக்கவேண்டியது இறைவனுக்கு அவசியமாகிறது. அதனுல் போர்க் களத்திலே அசுரர்களை அழித்து மறக்களவேள்வி செய்கிறது ஒருமுகம். அதற்கேற்ற கைகளில் ஒன்று வளையத்தைச் சுழற்றி முத்திரை கொடுக் கிறது. மற்ருெருகை வெற்றியுடன் மணியை அசைக்கிறது.

இறைவன் போகியாயிருந்தாலல்லது எந்த உயிர்களும் போகத்தை நுகரமாட்டா. ஆதலால் முருகனும் போகியாக வள்ளியம்மையாரோடு சிரித்தும் விளையாடியும், ஊடியும் கூடியும், உல்லாசமாக உலாவவேண் டியது இன்றியமையாததாயிற்று. ஆதலால் ஒருமுகம் அத்தொழிலை ஆற்று கின்றது. உயிர்கள் இன்பவாழ்க்கை வாழவேண்டுமானுல் மழைவளம் அவசியம். அதற்காக அம்முகத்திற்கேற்ப ஒருகை பருவந்தவருமல் மழை யைப்பொழிவிக்கிறது. மற்ருெருகை தேவமகளிர்க்குத் திருமணமாலையைச் சூட்டி வாழ்த்துகின்றது. இப்படியாக முருகப்பெருமானின் திருவுருவ அமைப்பை, அனைவருக்கும் தெய்வக்காதல் சித்திக்கும் நிலையில் தியான முறையைக் கற்பிக்கிறது திருமுருகாற்றுப்படை.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள் ; மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காஎனும்
நாமங்கள் ; முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு
தோளும் ; பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங்
கோடன் மயூரமுமே.

— *கந்தரலங்காரம்.*

# திருவுருவ வகைகள்

சிறந்த நடிகன் மக்கள் விருப்பிற்கு ஏற்பப் பல கோலங்களோடு தோன்றுவதுபோல, இறைவனும் ஆன்மாக்கள் உய்ய அவரவர்கள் பரிபாக நிலைக்கு ஏற்பப் பலவேறு கோலங்களைத் தாங்குகிறார். பலவேறு கோலங்களைத் தாங்குகின்ற நடிகன், தாங்குகின்ற கோலங்கட்கு ஏற்ப, இன்பத் துன்பங்களை எய்தி விகாரியாகிறான். இறைவனோ அங்ஙனம் ஆவதில்லை; என்றும் ஆனந்தமயமானவன். அங்ஙனமே இறைவனின் வேறாகாத முருகப் பெருமானும் அவரவர்கள் பரிபாகநிலைக்கு ஏற்ப உருமேனி தாங்கி அருள் வழங்குகிறார். நின்றகோலத்தும், இருந்தகோலத்தும் காட்சி வழங்குகிறார். ஒருமுகம், இருமுகம், ஆறுமுகம், இரண்டுகை, நான்குகை, ஆறுகை, எட்டுக்கை, பன்னிருகை இவைகளோடு, ஒருசக்தியோடும், இருசக்திகளோடும், விளங்குகிறார். குமரனாக, குழந்தையாக, கிழவனாகக் கோலங் கொள்ளுகிறார். பத்மாசனத்தில், நின்றதிருக்கோலமாகக் காட்சியளிக்கிறார். பதுமாசனத்திலும், மயிலிலும், சிங்கத்திலும், யானையிலும் இருந்த திருக்கோலத்தில் எழுந்தருளுகிறார். புராணங்கள், இரண்டு கைகளையுடையன சாத்வீகமூர்த்திகள் என்றும், நான்கு கைகளையுடையன இராசதமூர்த்திகள் என்றும், நான்கிற்கு மேற்பட்ட கைகளையுடையன தாமசமூர்த்திகள் என்றும் குறிப்பிடுகின்றன.

இத்தகைய மூர்த்திபேதங்கள் அனைத்தையும் காரணாகமமும், காமிகாகமமும், அம்சுமத்பேதாகமமும் யோகபேரம் போகபேரம் தியானபேரம் என மூன்றாகப் பகுக்கின்றன.

இரண்டு திருக்கரங்களையுடைய வடிவங்களில் கீழ்க்காணுமாறு ஐவகை நிலைகள் உள்ளன.

| | வலது கரத்தில் : | | இடது கரத்தில் : |
|---|---|---|---|
| 1. | தாமரை | ... | இடுப்பில் வைத்த திருக்கரம் |
| 2. | அபயம் | ... | இடுப்பில் வைத்த திருக்கரம் |
| 3. | தண்டம் | ... | இடுப்பில் வைத்த திருக்கரம் |
| 4. | சக்தி | ... | வச்சிரம் |
| 5. | சக்தி | ... | குக்குடம் |

நான்கு திருக்கரங்களை உடைய மூர்த்திகளில் ஏழுவகையுள்ளன. அவை வருமாறு:-

| | வலது கரங்களில் : | | இடது கரங்களில் : | |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 1 | 2 |
| 1. | அபயம் | சக்தி | வரதம் | வச்சிரம் |
| 2. | அபயம் | அட்சமாலை | வரதம் | கமண்டலம் |
| 3. | அபயம் | அட்சமாலை | இடுப்பில்கை | கமண்டலம் |
| 4. | அபயம் | சக்தி | இடுப்பில்கை | குக்குடம் |
| 5. | அபயம் | சக்தி | இடுப்பில்கை | கமண்டலம் |
| 6. | அபயம் | சக்தி | அட்சமாலை | குக்குடம் |
| 7. | கட்கம் | சக்தி | கேடகம் | குக்குடம் |

ஆறு திருக்கரங்களை உடைய மூர்த்திகளில் வலது திருக்கைகளில் அபயம் கட்கம் சக்தி இவைகளும், இடது திருக்கைகளில் கேடகம் அட்சமாலை குக்குடம் இவைகளும் விளங்கும்.

எட்டுத் திருக்கரங்களையுடைய மூர்த்தி இருவகையாக அமைந்து உள்ளது. வச்சிரம், சக்தி, அபயம், வரதம், கட்கம், கேடகம், பாணம், தனுசு இவைகளைக் கொண்டு விளங்குவது ஒருவகை. பத்மம், வச்சிரம், சக்தி, அபயம், வரதம், கேடகம், கட்கம், பாசம் இவைகளை ஏந்தி விளங்குவது மற்றொருவகை.

பன்னிரண்டு திருக்கரங்களை உடைய மூர்த்திகளில் ஆறுவகை வடிவங்கள் உள்ளன. அவையாவன:-

| | வலது கரங்களில் : | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 1. | சக்தி | பாணம் | கட்கம் | துவசம் | கதை | அபயம் |
| 2. | சக்தி | பாணம் | கட்கம் | சக்கரம் | பாசம் | நீட்டியகை |
| 3. | சக்தி | துவசய | கட்கம் | சக்கரம் | பாசம் | அபயம் |
| 4. | சக்தி | துவசம் | கட்கம் | பத்மம் | அபயம் | பாணம் |
| 5. | சக்தி | வச்சிரம் | சக்கரம் | பாசம் | அங்குசம் | கதை |
| 6. | சக்தி | பாணம் | கட்கம் | அபயம் | தனுசு | கேடகம் |

இடது கரங்களில் :

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|---|
| 1. | வச்சிரம் | தனுசு | கேடகம் | தாமரை | சூலம் | வரதம் |
| 2. | சக்கரம் | சங்கம் | குக்குடம் | தனுசு | தண்டம் | கலப்பை |
| 3. | வச்சிரம் | தனுசு | கேடகம் | குக்குடம் | அங்குசம் | வரதம் |
| 4. | வச்சிரம் | பாசம் | கேடகம் | தண்டம் | அங்குசம் | வரதம் |
| 5. | சூலம் | அபயம் | பத்மம் | தண்டம் | அங்குசம் | வரதம் |
| 6. | சூலம் | குக்குடம் | சக்கரம் | பாசம் | சங்கம் | வரதம் |

முருகனுடைய உருவவேறுபாடுகளைப்பற்றிய தியானசுலோகங்கள் பல குமாரதந்திரம், ஸ்ரீ தத்துவநிதி முதலிய நூல்களில் விரிவாகவும் விளக்க மாகவும் பேசப்படுகிறது. முருகனது திருவுருவங்கள் பதினுறு என்று குமாரதந்திரம் கூறுகின்றது. திருவுருவ அமைப்பில்மட்டும் மேற்குறித்த இரண்டுநூல்களும் வேறுபடுகின்றன. அந்தந்த மூர்த்திகளை விளக்கும் பகுதிகளில், வேறுபாடுகளும் அங்கங்கே குறிக்கப்பெறும். ஸ்ரீ தத்துவநிதி கூறுவன பெரும்பாலும் புராண சித்தாந்தங்களையும், சில சிவாகமபாட வேறுபாடுகளையும் அடிப்படையாகக் கொண்டவை.

சக்திதரர் :

ஒருமுகம், இருகைகள், வலதுகையில் சக்தி, இடது கையில் வச்சிரம் இவற்ருேடு விளங்குபவர். இவர் கையிலுள்ளசக்தி இச்சை, ஞானம், கிரியை என்ற மூன்றையும் வடிவாகக்கொண்டது.

ஸ்ரீதத்துவநிதி என்றநூலில், ஒருமுகமும், இருகண்களும், நான்கு கைகளும், அவற்றில் சக்தி குக்குடம் வச்சிரம் அபயமும், சடாமகுடமும், வெள்ளெருக்கம்பூமாலையும், சந்தனப்பூச்சும், வெண்பூணூலும் தாங்கி வெண்ணிறமுடையவராக விளங்குபவர் எனக் குறிப்பிடப்பெறுகிருர். இவரை ஞானசக்தி சுப்பிரமணியர் என்று அந்நூல் வழங்கும்.

தணிகைப்புராணம் ஒருகையில் வேலை ஏந்தி மற்ருெருகையைத் தொடைமீது வைத்திருக்கிருர் என்று கூறுகிறது. இவருடைய பெயரை ஞானசக்திதரமூர்த்தி எனக் குறிப்பிடுகிறது.

एकास्यं द्विभुजं वामे वज्रं दक्षिणजे करे ।
इच्छाज्ञानक्रियाशक्ति रूपं शक्तिधरं भजे ।।

—குமாரதந்திரம் – படலம் - 2.

एकवक्रं द्विनेत्रं च जटामकुट संयुतम् ।
श्वेतार्क पुष्पमालं च हेमरत्न किरीटिनम् ।।

चतुर्भुजे वज्रशक्ति कुक्कुटाभय धारिणम् ।
दिव्यगन्धानुलिप्ताङ्गं शुक्ल यज्ञोप वीतिनम् ।।

शिवशक्ति ज्ञानयोगं ज्ञानशक्ति स्वरुपकम् ।
श्वेतवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

**கந்தசுவாமி :**

ஒரு முகமும், இரு கரமும், அவற்றுள் ஒன்றில் தண்டம் ஏந்தி மற்றொருகையை இடுப்பில் வைத்துக்கொண்டு, கோவணம் உடுத்திக் கொண்டு, செந்தாமரைபோன்ற நிறத்துடன் நின்றதிருக்கோலத்தில் காட்சி அருளுபவர். இது பழனியாண்டவர் திருக்கோலம்.

ஸ்ரீதத்துவநிதி: ஒருமுகமும், இருகண்களும், நான்குகைகளும் உடையவர்; கைகளில் குக்குடம் அபயம் வச்சிரம் வரதம் இவற்றைத் தாங்கி வெண்தாமரைமலரில் வீற்றிருப்பவர்; மயிர்முடியில் கட்டப்பெற்ற பூமாலையுடையவர்; மேகலை, ஆடை இவற்றை உடுத்தியவர்; மணியணிகளைப் பூண்டவர்; வட்ட ஒளியோடு கூடிய புகைநிறத்தை உடையவர் என்று கூறுகிறது.

कल्पद्रुमं प्रणमतां कमलारुणाभं स्कन्दं भुजद्वय मनामय मेकवक्त्रम् ।
कात्यायनीसुतमहं कटिबद्धवामं कौपीनदण्डधर दक्षिणहस्त मीडे ।।

—குமாரதந்திரம் – படலம் – 2.

चतुर्भुजं द्विनेत्रंच श्वेतपद्मासनस्थितम् ।
कुक्कुटाभय वज्राणि दधतं वरदं करे ।।

किञ्चित्केश शिखाबद्ध पुष्पमालाभि रावृतम्।
मेखलाम्बर संवीतं रत्नभूषण भूषितम्॥

धूम्रवर्णप्रभं स्कन्दं प्रभामण्डल मण्डितम्।
स्कन्दरूपमिदम् ... ... ... ... ...
धूम्रवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

தேவசேனுபதி :

ஆறு முகம், பன்னிரண்டு கண், பன்னிரண்டுகை ஆகிய இவற்ருேடு தாமரையைத் திருக்கரத்தில் ஏந்திய தேவியைத் தொடையின்மீது உட்கார வைத்து அணைத்துக்கொண்டு அபயம், வரதம், சூலம், கேடகம், வச்சிரம், தனுசு, கதை, மணி, குக்குடம், பாணம், தாமரை இவற்றைப் பதினொரு திருக்கரங்களிலும் உடையவராக விளங்குபவர்.

ஸ்ரீதத்துவநிதி : ஒருமுகம், இருகண், அபயம் வரதம் சங்கம் சக்கரம் இவற்றைத் தாங்கிய நான்கு கைகள், கருநிறம் இவற்றை உடையவராக, அணிகள் பல பூண்டு, வெண்ணூல் அணிந்து, சந்தனப்பூச்சுடன் புன்முறுவலோடு விளங்குபவர் என்று கூறுகிறது.

नौम्यादित्यप्रदीप्तं द्विदशनयनकं षण्मुखं मन्दहासं
वामाङ्के सुस्थितायाः स्वरसिरुहधृतालिंगितायाः प्रियायाः।
उत्तुङ्गोरुस्तनाग्रे विहितकरतलं भीतिखेटादिशूल ह्रादिन्युदीप्त
शक्तीष्वसनघनगदा कुक्कुटाब्जेषु हस्तम्॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

एकवक्त्रं द्विनयनम् शङ्ख चक्र वराभयान्।
सर्वाभरण संयुक्तं दिव्यगन्धानुलेपनम्॥

श्यामवर्ण प्रभुंचैव शुक्ल यज्ञोप वीतिनम्।
सुस्मितं चारुवदनं देवसेनापतिं भजे॥

—ஸ்ரீதத்துவநிதி.

**சுப்பிரமணியர் :**

குங்குமநிறமும், நிறைமதிபோலும் முகமும், தாமரை அபயம் சக்தி குக்குடம் இவற்றைத் தாங்கிய நான்கு கைகளும், செஞ்சந்தனப் பூச்சும், செம்பட்டாடையும், கேயூரம் ஆரம் இவற்றையும் உடையவராக விளங்குபவர்.

மற்றொருவகையாக ஒரு முகமும், இரு கைகளும், ஒரு கை அபயமாகவும் ஒருகை இடுப்பிலும் வைத்துக்கொண்டு இருப்பவர்; சூரியன் போன்ற ஒளியுடையவர்.

सिन्दूरारुण सिन्दुकान्ति वदनम् केयूर हारादिभिः
दिव्यैराभरणै र्विभूषित तनुम् स्वर्गादि सौख्यप्रदम् ।
अम्भोजाभय शक्ति कुक्कुटधरं रक्ताङ्गरागांशुकम्
सुब्रह्मण्य मुपास्महे प्रणमतां भीतिप्रणाशोद्यतम् ॥

अन्यच्च

एकवक्त्रं द्विदोर्दण्डं कटिबद्धाभयान्वितम् ।
तरुणारुण संकाशं सुब्रह्मण्य मुपास्महे ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

**கஜவாகனர் :**

ஒருமுகம், இருகண், வலதுகை இரண்டிலும் குக்குடம் வரதம், இடதுகை இரண்டிலும் சக்தி அபயம் இப்படியாக யானை வாகனத்தின் மேல் விளங்குபவர்.

தணிகைப்புராணம் இடக் கைகளில் வரதமும் குக்குடமும், வலக் கைகளில் வேலும் வாளும் ஏந்தியிருப்பதாகக் கூறும்.

एकाननं द्विनयनं वरकुक्कुटंच
वामद्वये निशित शक्त्यभय द्वयञ्च ।
विभ्राणमीश्वर सुतं तपनायुताभं
नित्यं नमामि गजवाहन मिष्टसिद्ध्यै ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

**சரவணபவர் :**

ஆறுமுகங்களும், பன்னிரண்டு கண்களும், அபயம், வரதம், சக்தி, மணி, துவசம், பத்மம், குக்குடம், பாசம், தண்டம், டங்கம் (உளி), பாணம், தனுசு இவற்றை ஏந்திய பன்னிரண்டு கைகளும், மஞ்சள் நிறத்தோடு அன்றலர்ந்த தாமரைபோன்ற திருமுகங்களையும் உடையவர்.

ஸ்ரீதத்துவநிதி : ஒருமுகத்தையும், ஆறு திருக்கரங்களையும், மூன்று கண்களையும் உடையவராக, உதயசூரியன்போன்ற நிறத்தோடு கைகளில் புஷ்பபாணம், கரும்புவில், கட்கம், கேடகம், வச்சிரம், குக்குடம் இவற்றை ஏந்தி, செந்நிறத்தோடும் விபூதிப்பூச்சோடும் சிங்கவாகனத்தில் விளங்குபவர் என்கின்றது.

शक्तिं घण्टां ध्वजसरसिजं कुक्कुटं पाशदण्डं
टङ्कं बाणं वरद मभयं कार्मुकञ्चोद्वहन्तम् ।
पीतं सौम्यं द्विदशनयनं देवसङ्घै रुपास्यं
सद्भिः पूज्यं शरवणभवं षण्मुखं भावयामि ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

षड्भुजंचैकवदनं बालसूर्यसमप्रभम् ।
सर्वाभरणसंयुक्तं सिंहस्थंदधतंभजे ॥

त्रिनेत्रंभसितोद्धूलं पुष्पबाणेक्षुकार्मुकम् ।
खड्गंखेटञ्चवज्रंच कुक्कुटध्वजधारिणम् ॥
शरजन्मसमाख्यातम् … … … … …
शुक्लवर्णः

—ஸ்ரீ தத்துவநிதி.

**கார்த்திகேயர் :**

ஆறுமுகங்களும், ஆறுதோளும், அபயம், வரதம், வச்சிரம், கேடகம், சக்தி, கட்கம் இவற்றைத்தாங்கிய ஆறுகைகளும் உடையவராக மத்தியான சூரியன் போன்ற நிறமுடன் விளங்குபவர்.

ஸ்ரீதத்துவநிதி: ஒரு முகம், மூன்று கண், சூலம், சக்கரம், சக்தி, அங்குசம், அபயம் இவற்றைத்தாங்கிய வலக்கரங்கள் ஐந்தையும், தோமரம், பாசம், சங்கம், வச்சிரம், வரதம் இவற்றை ஏந்திய இடக்கரம் ஐந்தையும் உடையவராக, உதயசூரியனை ஒத்த நிறத்தோடு தலையில் வில்வமாலை யணிந்து மயில்வாகனத்தில் வீற்றிருப்பவர் என்கிறது.

वरद कुलिश खेटं वामहस्तत्रयेच
दधत मभयशक्ति खड्गमन्यत्रयेच ।
तरुण रवि समाभं साधुभिः पूज्यमानं
कमल वदन षट्कं कार्तिकेयं नमामि ।।

—குமாரதந்திரம் - படலம் - 2.

त्रिनेत्रंदशहस्तंच मस्तके विल्वधारिणम् ।
शक्तिशूलंतथाचक्रं अङ्कुशाभयमन्यके ।।

वरदं तोमरं पाशं शङ्खं वज्रञ्च वामके ।
मयूरवाहनारूढं सर्वाभरणभूषितम् ।।

बालसूर्यप्रतीकाशं कार्तिकेयंशिवात्मजम् ।।
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

குமாரர்:

ஒருமுகமும் நான்கு கைகளும் உடையவர். வலக்கையிரண்டிலும் கூர்மையான சக்தியையும், கத்தியையும் தாங்குபவர். இடக்கையிரண்டிலும் குக்குடம், கேடகம் ஆகிய இரண்டையும் ஏந்தியவர்; வள்ளி தேவியோடு கூடியவர்.

ஸ்ரீதத்துவநிதி: ஒருமுகம், நான்குகை, கரண்டமகுடம் உடையவர்; வலதுகைகளில் சக்தியையும் அபயத்தையும் உடையவர்; இடதுகைகளில் வரதத்தையும் வச்சிரத்தையும் உடையவர்; தாமரைப்பூமாலையைக் கழுத்தில் தரித்திருப்பவர்; குழந்தை வடிவினர்; செந்நிறத்தினர்.

सव्यद्वयेनिशितशक्त्यसिमा दधानं
वामद्वयेभिमतकुक्कुटखेटकंत्वाम् ।
वल्लीपतिं विबुधलोचनपूर्णचन्द्रं
कल्याणदाननिरतं कलयेकुमारम् ॥

— குமாரதந்திரம் - படலம் - 2.

चतुर्भुजं चैकवक्त्रं करण्डमकुटान्वितम् ।
शक्तिचाभयदंदक्षे सव्येवरदवज्रके ॥
पद्मपुष्पधरं कण्ठे देवंबालस्वरूपकम् ।
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

**சண்முகர் :**

ஆறுமுகமும், பன்னிரண்டு கண்களும், பன்னிரண்டு கைகளும் உடையவர்; குங்குமநிறத்தினர்; மயில் வாகனத்தில் வீற்றிருப்பவர்; வலது கைகளில் சக்தி, பாணம், கட்கம், துவசம், கதை, அபயம் இவற்றையும் இடதுகைகளில் வில், வச்சிரம், தாமரை, கேடகம், சூலம், வரதம் இவற்றையும் தாங்கியவர்.

ஸ்ரீதத்துவநிதி : சக்தி, சரம், கட்கம், சக்கரம், பாசம், அபயம் இவற்றை வலது கைகளிலும், குக்குடம், தனுசு, கேடகம், சங்கம், கலப்பை, வரதம் இவற்றை இடது கைகளிலும் உடையவர்; மயில் வாகனத்தில் எழுந்தருளியிருப்பவர்; அழகெல்லாம் அமைந்தவர்; சயை, விசையை ஆகிய இருதேவிகளையும் இருமருங்கும் உடையவர்; அணி ஆடைகளோடும், செந்நிறமும் உடையவர். இப்படி விளங்குபவராகத் தியானிக்க என்கிறது. தேவிகள் நின்றதிருக்கோலமாக இருப்பவர்.

वन्दे सिन्दूरकान्तिं शरविपिनभवं श्रीमयूराधिरूढं
षड्वक्त्रं देवसैन्यं मधुरिपुतनया वल्लभं द्वादशाक्षम् ।
शक्तिं बाणं कृपाणं ध्वजमपिच गदाञ्चाभयं सव्यहस्ते
चापं वज्रं सरोजं कटकमपिवरं शूलमन्ये दधानम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.



ஸ்ரீ பிரமசாஸ்தா

शक्तिं शरंच खड्गंच चक्रं पाशाभयौ तथा ।
कुक्कुटञ्च धनुः खेटं शङ्खं धत्ते हलं वरम् ॥

मयूर वाहनोपेतं सर्वलक्षणसंयुतम् ।
जयाच विजयाचैव वामदक्षिण पार्श्वयोः ॥

सर्वालङ्कार संयुक्तं सर्वाभरण भूषितम् ।
षण्मुखञ्चेति विख्यातम्................
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

தாரகாரி :

கோடிசூரியன் போன்ற பிரகாசம் உடையவராய், பன்னிரண்டு கைகளிலும் இடதுமுதல் முறையே வரதம், அங்குசம், வல்லி, கடகம், வில், வச்சிரம், அபயம், பாசம், சக்கரம், கட்கம், உலக்கை, சக்தி இவற்றைத் தாங்கியவராயும் விளங்குபவர்.

ஸ்ரீதத்துவநிதி: ஒரு முகமும் மூன்று கண்களும் ஆறு கரங்களும் உடையவராக, யானை வாகனத்தில் வீற்றிருப்பவர். வலது கைகளில் அபயம், கட்கம், சக்தி இவற்றைத் தரித்திருப்பவர்; இடதுகைகளில் கேடகம், அட்சமாலை, குக்குடம் இவற்றைத் தரித்திருப்பவர்; செந்நிறத்தினர் என்று குறிப்பிடுகிறது.

वरदमङ्कुशवल्लीच कटकौ चापवज्र मभय
पाशचक्रखड्गं मुसलशक्तिमन्वहम् ।

द्विदशपाणिभि र्दधान मरुणकोटिसन्निभम्
भजत तारकारिं सित्रभव विनाशकारणम् ॥

— குமாரதந்திரம் - படலம் - 2.

एकवक्त्रं त्रिनयनं गजपृष्ठोपरिस्थितम् ।
षट्करं चाभयं खड्गं शक्तिं वामेतरे दधन् ॥

खेटकं चाक्षमालाञ्च कुक्कुटं वामहस्तके ।
तारकारिं भजेख्यातम्…………
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

சேனானி :

பன்னிரண்டு கண்களும், ஆறு முகங்களும் உடையவர். பன்னிரண்டு கைகளிலும் முறையே அபயம், கத்தி, சக்கரம், அங்குசம், சூலம், சக்தி, வரதம், வச்சிரம், பத்மம், பாசம், தண்டம், கதை இவற்றை உடையவராய் விளங்குபவர்.

अभय मसिरथाङ्गंचांकुशंशक्तिशूलं
वरदकुलिशपाशं पद्मदण्डं गदाञ्च ।
दधत मुभयपक्षे द्वादशायाम हस्तैः
द्विदशकमलनेत्रं देवसेनान्यमीडे ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

பிரமசாஸ்தா :

இடதுகைகளில் வரம் குண்டிகை இவற்றையும், வலதுகைகளில் அட்சசூத்திரம் அபயம் இவற்றையும் உடையவர். வள்ளிதேவியோடு கூடியவர். அலர்ந்த செந்தாமரைபோன்ற ஒருமுகத்தையும் இருகண்களையும் உடையவர். இவரே பிரமனைக் குட்டிச் சிறையிருத்தும் கோமானவர்.

वामेकरेच युगळे वरकुण्डिकेच सव्येक्षसूत्र मभयं दधतं विशाखम् ।
वल्यायुतं वनजलोचन मेकवक्त्रं वन्दामहे वनजसंभव शासितारम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

வள்ளிகல்யாணசுந்தரர் :

வலதுகைகளில் பின்னுள்ளகையில் அட்சமாலை ஏந்தியும், முன்னுள்ளகை அபயமாகவும் இடதுகைகளில் முன்னது இடுப்பிலும் பின்னது

கமண்டலம் ஏந்தியும் விளங்க, வள்ளிதேவியுடன் ஆபரணங்களோடும் பீதாம்பரங்களோடும் வீற்றிருப்பவர். இவர் எதிரில் பிரமா மணச்சடங்கு இயற்றுகிருர். விஷ்ணு கையில் நீர்ச்சொம்புடன் தாரைவார்க்கச் சித்தமாக இருக்கிருர். சிவனும் பார்வதியும் ஆசி வழங்குகிருர்கள். இந்திரன் முதலிய தேவர்கள் சூழநின்று களிக்கின்றனர். இந்நிலையிலிருப்பவர் இப்பெருமான். முருகன் செந்நிறம். வள்ளியம்மையார் கருநிறம்.

हस्तद्वंद्वेक्षमाला मभयमपिधृतं कुण्डिकां श्रोणिबन्धं
सव्येवामे निषण्ण श्रवधृत विधिनाभूयमानेन युक्तम्।
सर्वालङ्कारयुक्तं जलकलशधृता विष्णुना चारुणाभं
वल्ली कल्याणमूर्तिं सकलसुरगणै स्तूयमानं प्रपद्ये ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

பாலசுவாமி :

ஒரு முகத்தோடு, வலதுகையில் தாமரை விளங்க, இடதுகை இடுப்பிலிருக்க, உயர்ந்ததோளுடனும் செந்தாமரைபோன்ற நிறத்துடனும் விளங்குபவர்.

மற்ருெருவகை; ஒரு முகத்தோடும் இரண்டு கண்களோடும் இரு தாமரையை இருகைகளிலும் ஏந்தி, இளஞ்சூரியன்போன்ற நிறத்துடன் விளங்குபவர்.

पद्मसव्य कटिसंयुतवामं पद्मकान्तिनिभ मेकमुखञ्च ।
बालवृद्धिकर मीश्वरसूनुं बालमुन्नतभुजं प्रणतोऽस्मि ॥
अन्यच्च

एकवक्त्रं द्विनयनं पद्मद्वयकरद्वयम् ।
विप्रप्रियकरं वन्दे बालरूपं रविप्रभम् ॥

—குமாரதந்திரம் – படலம் - 2.

**கிரவுஞ்சபேதனர் :**

ஆறு முகமும், எட்டுக் கைகளும் உடையவர். வலது கைகளில் அபயம் கத்தி சக்தி பாணம் இவற்றையும், இடது கைகளில் வரதம் குலிசம் வில் கேடகம் இவற்றையும் ஏந்தி இருப்பவர்.

ஸ்ரீதத்துவநிதி ; செந்நிறத்தோடு, மூன்று கண்களும், ஒரு முகமும் வரதம் அபயம் மலரம்பு கரும்புவில் இவற்றை ஏந்திய நான்கு திருக் கரங்களும் உடையவராய், சிம்மாசனத்தில் வீற்றிருப்பவர்.

மற்றொருவகை : தேவர்களைக்காத்தருளும் முயற்சியுடன் மயில் வாகனத்தின்மேல், இரு கைகளிலும் வேல்கொண்டு கிரவுஞ்சமலையைத் துளைக்கும் தோற்றமுடன் விளங்குபவர்.

अभयशितकृपाणं शक्तिबाणं चसव्यैः
वरद कुलिश चापं खेटक ञ्चान्यहस्तैः ।
दधत ममरसेना नायकं चाष्टबाहुं
कमलवदनषट्कं क्रौञ्चभेत्तारमीडे ॥

—குமாரதந்திரம் – படலம் – 2.

चतुर्भुजं त्रिनेत्रञ्च स्थितं सिंहासनोपरि ।
वरदाभय संयुक्त पुष्पबाणेक्षु कार्मुकम् ॥

मयूरवाहनारूढं नमस्ये रक्षणोन्मुखम् ।
क्रौञ्चभेद करद्वंद्वं क्रौञ्चभेदिस्वरूपकम् ॥
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

**சிகிவாகனர் :**

இம்மூர்த்திபேதம், கைகளில் ஏந்திய படைக்கல வேறுபாட்டாலும் கைகள், கண்கள், முகங்கள் இவற்றின் எண்ணிக்கையாலும் ஏழு வகையாக அமைந்திருக்கும்.




ஸ்ரீ வள்ளிகல்யாணசுந்தரர்

1. ஒருமுகம் உடையவராய், நான்கு கைகளிலும் வச்சிரம் சக்தி வரதம் அபயம் இவைகளை ஏந்தி, பவழநிறமாக, அசுரர்களை வென்றி கொண்டு, தேவர்களைக் காத்தருளுகின்ற பாவனையில், மயில்வாகனத்தில் எழுந்தருளியிருப்பவர்.

विद्रुमप्रभ मेकमुखं विभुं वज्रशक्ति वरदाभय पाणिनम् ।
देवलोक रिपुघ्नमविघ्नदं नौमि रुद्रभवं शिखिवाहनम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

2. ஆறுமுகங்களும், பன்னிருகண்களும், நான்குகைகளும், செம் மாதுளைப்பூ குங்குமம் இவற்றைப்போன்ற நிறமும், காளைப்பருவமும், வள்ளன்மையைக் குறிக்கும் திருமேனியும், வெண்மையான பூணூலும் உடையவர். திருக்கரங்களில் வரதம், அபயம், கமண்டலம், அட்சமாலை விளங்கும். காதில் மகரகுண்டலமும், தலையில் கரண்டமகுடமும், கழுத்தில் தோள்வளையும் ஆரமும், கைகளில் கடகமும், இடுப்பில் அரைஞாணும், காலில் சிலம்பும், பிற அணிகளும் அணிந்தவர்; வள்ளி தேவசேனையோடு கூடியவர்; நவவீரர்களால் சூழப்பட்டவர்; பொன்னிறத் திருமேனி உடையவர்.

दाडिमीपुष्प सङ्काशं गुंजाभं कुङ्कुमाकृतिम् ।
षड्वक्त्रसहितं देवं द्वादशाक्षं सुयौवनम् ॥

चतुर्भुजमुदारांगं यज्ञसूत्रेण संयुतम् ।
वरदाभयसंयुक्तं कमण्डल्वक्ष धारिणम् ॥

नक्र कुण्डल संयुक्तं करण्डमकुटोज्वलम् ।
हार केयूर कटक कटिसूत्रै र्विभूषितम् ॥

रत्न विद्रुम भूषाढ्यं नववीर समायुतम् ।
पादनूपुर संयुक्तं सर्वाभरण भुषितम् ॥

सर्वलक्षण संयुक्तं कुमारं शंकरात्मजम् ।
महावल्लीदेवसेना युतं सुरगण प्रियम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

3. ஒருமுகமும், சக்தி குக்குடம் வரதம் அபயம் இவற்றை ஏந்திய நான்கு திருக்கரங்களும் உடையவர்; இளமைப் பருவத்தர்.

इत्थंरूपं यजेन्नित्यं सर्वलोक हितावहम् ।
चतुर्भुजं बालवेषं स्कन्दं कनकसप्रभम् ॥
शक्ति कुक्कुट हस्तञ्च वरदाभय संयुतम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

4. பவழநிறமும், பன்னிருகையும், பன்னிருகண்ணும், ஆறுமுகமும் உடையவர்; வலதுகைகளில் சக்தி, சரம், கட்கம், அபயம், கொடி, கதை இவைகளையும்; இடதுகைகளில் வில், வச்சிரம், தாமரை, வரதம், சூலம், கேடகம் இவைகளையும் உடையவர்.

विद्रुमनिभ द्विदशहस्त रविनेत्र शक्ति शरखड्गमभय ध्वज गदाञ्च ।
वामकर चाप कुलिशाब्ज वर शूल खेट धर सव्यकर षण्मुखनमस्ते ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

5. ஆறு முகங்களும், முகங்கள்தோறும் மும்மூன்று கண்களும் உடையவர். சக்தி, கேடகம், கட்கம், சூலம், அபயம், தீ, வில், சக்கரம், பாசம், குக்குடம், அங்குசம், வரதம் இவற்றை ஏந்திய பன்னிருகைகளும் உடையவர். செம்பட்டுடுத்தி, செம்மலர், செம்மணிமாலைகளை அணிந்து, பிறைசூடி, மயில்வாகனத்தின்மீது வீற்றிருப்பவர்.

षड्वक्त्रं शिखिवाहनं त्रिनयनं रक्ताम्बरालंकृतम्
शक्तिं चर्मच खड्ग शूल विशिखा भीतिं धनुश्चक्रकम् ।
पाशं कुक्कुटमङ्कुशञ्च वरदं दोर्भिर्दधानं तथा
ध्यायेदीप्सित सिद्धिदं शशिधरं स्कन्दं सुराराधितम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

6. ஒருமுகம், குலிசம் சக்தி இவற்றை ஏந்திய இருகைகள், தாமரை போல மலர்ந்த கண்கள் இவற்றையுடையவராகி, கோடி சூரியப் பிரகாச முடையவராய், ஆபரணங்களை அணிந்து விளங்குபவர், தளர்ந்து தொங்கு கின்ற முன்னுடலை உடையவர். வில்லின் அடியைப் பூமியில் ஊன்றி அம்பு தொடுத்து இருப்பவர்.

लोकालोकांधकार प्रतिहतकिरणै र्भानुकोटि प्रकाशं
भूमिन्यस्तैककोटी श्वसनमपिशरं लंबमानोर्ध्वकायम् ।
हस्ताभ्या ञ्चेतराभ्यां धृत मथकुलिशं शक्तिमंभोरुहाक्षं
सर्वालङ्कारयुक्तं भजत सुरपरीपालकं वाहुलेयम् ॥

—குமாரதந்திரம் - படலம் - 2.

7. ஒரு முகமும், மூன்று கண்களும், அபயம் வரதம் பாசம் அங்குசம் இவற்றை ஏந்திய நான்கு கைகளும், ஒளிவிடும் கேசபாசங் களும், செங்குவளைபோன்ற நிறமும் உடையவராய் இந்திரநீலக்கல்லா லாகிய இரதம்போன்ற மயில்வாகனத்தின்மீது வீற்றிருப்பவர்.

चतुर्भुजं चैकवक्त्रं त्रिनेत्रमभयं वरम् ।
पाशांकुशंदधं चैव ज्वालाकेश शिखण्डकम् ॥
इन्द्रनीलरथारूढं रक्तोत्पल समप्रभम् ।
चतुर्दशादिभवनं शिखिवाहनमाचरेत् ॥
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

அக்கினிஜாதர் :

இரண்டு முகமும், எட்டுக்கைகளும், வெள்ளைநிறமும், கரிய கண்ட மும் உடையவர். பின்பக்கம் உள்ள நான்கு கைகளில் சுருவம், அட்ச மாலை, கட்கம், சுவஸ்திகம் இவற்றைத் தாங்கியவர். முன் நான்கு கைகளில் வச்சிரம், குக்குடம், கேடகம், நெய்க்கிண்ணம் இவற்றை ஏந்தியவர். தெய்வீக யாகாக்கினியை வளர்ப்பதற்கு உரிய முயற்சியுடன் விளங்குபவர்.

द्विमुखं चाष्टबाहुञ्च श्वेतंवा श्यामकन्धरम् ।
सृवाक्षमालां खड्गञ्च स्वस्तिकं दक्षिणेकरे ॥

कुक्कुटं खेटकं वज्रं आज्यपात्रन्तु वामके ।
अग्निहोत्रविधिं देव मग्निजात स्वरूपकम् ॥
नीलवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

**சௌரபேயர் :**

நான்கு முகத்தோடும், எட்டுக்கைகளோடும், எட்டுக்கண்களோடும் தாமரையாசனத்து நின்றதிருக்கோலத்துடன் விளங்குபவர். வலக்கால் பூமியிலும், இடக்கால் சிறிது வளைந்தும் இருக்கும். வலதுகைகளில் சக்தி, நீலோத்பலம், மலரம்பு, அபயம் இவைகளும்; இடதுகைகளில் வச்சிரம், கரும்புவில், சூலம், வரதம் இவைகளும் காட்சியளிக்கும். செந்தாமரை போன்ற நிறம் உடையவர்.

चतुर्वक्त्राष्टनयनं भुजाष्टकमलासनम् ।
कुञ्चितं वामपादञ्च सुस्थितं दक्षिणं पदम् ॥

शक्त्युत्पलं पुष्पबाण मभयं दक्षिणैः करैः ।
वज्रं चेक्षुधनु श्शूलं वरदं वामकै र्धरम् ॥

पद्मपुष्प निभंचैव सौरभेय स्वरूपकम् ... ... ...
पाटलवर्णः

—ஸ்ரீ தத்துவநிதி.

**காங்கேயர் :**

ஒரு முகமும், மூன்று கண்ணும், நான்கு கையும், தலையில் கரண்ட மகுடமும் உடையவர். வலது கைகளில் பரசும் பூரணகும்பமும், இடது கைகளில் அரணிக்கட்டையும் கோழிக்கொடியும் ஏந்தியிருப்பர். கோழிக் கொடியேந்திய கையில் குவளை மலரும் காட்சியளிக்கும். மகரவாகனத்தினர். செந்நிறம் உடையவர்.

एकवक्रं त्रिनयनं दाडिमीकुसुमप्रभम् ।
करण्ड मुकुटोपेतं कुक्कुटध्वज धारिणम् ॥

नीलोत्पलधरं वन्दे मकरारूढ मव्ययम् ।
परशुं पूर्णकुंभञ्च सव्यहस्तेतु धारिणम् ॥
अरणिं कुक्कुटंवामे गांगेय समरूपकम् ॥
पाटलवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

குகர் :

ஒருமுகமும், மூன்று கண்ணும், நான்கு கையும், தலையில் இரத்தின கிரீடமும் உடையவர். வலது கைகளில் வச்சிரமும் சூலமும், இடது கைகளில் வரதமும் அபயமும் தரித்தவர். இடதுபாகத்தில் மனைவியோடு கல்யாணகோலத்துடன் விளங்குபவர். கருநிறமும் வெள்ளையாடையும் உடையவர்.

चतुर्भुजं त्रिनेत्रञ्च हेमरत्न किरीटिनम् ।
शूलं वज्रं धरंसव्ये वराभयक मन्यके ॥

श्वेतवस्त्रधरं देवं सर्वेषां रक्षणोन्मुखम् ।
जायया वामपार्श्वेतु कल्याणोत्सव विग्रहम् ॥
पादांबुजं हृदिध्यात्वा गुहरूपं समाश्रये ॥
श्यामवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

பிரமசாரி :

ஒருமுகமும், இரண்டு கண்ணும், இரண்டு கையும் உடையவர். தலையில் அழகியமயிரும், மார்பில் பூணூலும், இடையில் முஞ்சிப்புல்லாலான அரைஞாணும் உடையவர். கோவண ஆடையும், வலக்கையில் தண்டமும், இடக்கையில் வச்சிரமும் உடையராய், செந்நிறத்தராய், தாமரைமீது வலக்காலும், இடக்கால் சிறிது வளைந்தும் நின்றதிருக்கோலமாய்க் காட்சி அளிப்பவர்.

द्विनेत्रं द्विभुजंचैव बालसूर्यधरं प्रभुम् ।
दक्षभागे दण्डहस्तं वत्रवामोरु हस्तकम् ।।

सव्यापसव्यपादन्तु स्थितंवा कुञ्चितन्तुवा ।
शिखायज्ञोपवीताढ्यं मौंजीकौपीन संयुतम् ।।

मेखलोपरिवङ्याणं रक्तपद्मोपरिस्थितम् ।
दिव्यरूपधरंदेवं ब्रह्मचारिण माश्रये ।।
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

**தேசிகர் :**

ஒருமுகமும், ஆறு கைகளும், கைகள் இரண்டில் சக்தியும், ஏனைய கைகளில் அட்சமாலையும், வரதமும், அபயமும், சின்முத்திரையும் விளங்க, சிவன் எதிரில் மாணவராகக் கைகட்டி வாய்புதைத்து நிற்க, பிரணவ உபதேசம் செய்பவர்.

மானசாரம் என்னும் சிற்பநூல் 'எதிரில் நிற்கும் சிவபெருமான் இடதுகையை மார்போடு அணைத்து, வலதுகையால் வாயைப்புதைத்து, ஏனை இருகைகளிலும் உடுக்கையும் மானும் விளங்க, தலையில் பிறைச் சந்திரன் பொலிய நிறைமதிபோன்ற நிறத்துடன் விளங்குவார்; பார்வதி இடப்பக்கத்தில் நிற்பார்' எனத் தெரிவிக்கிறது.

षड्भुजं चैकवदनं करण्ड मकुटान्वितम् ।
शक्तिहस्तद्वयंचैव जपमालाधरं शुभम् ।।

मयूरवाहनारूढं वराभयकरांबुजम् ।
इत्येवंविधिवद्ध्याये च्छिवदेवस्य देशिकम् ।।
रक्तवर्णः

—ஸ்ரீதத்துவநிதி.

## முருகன் தேவிகள்

தேவிமார்கள் இருவரும் இரண்டு கண்களும், இரண்டு கைகளும், ஒருமுகமும் உடையவர்கள். வலப்பக்கத்தில் தாமரை ஏந்திய கரத்துடன் கருநிறமுடைய வள்ளியும், இடப்பக்கத்தில் கருங்குவளைப்பூ ஏந்திய தெய்வயானையும் இருப்பர்.

குமாரதந்திரம்: வள்ளியம்மையார் கருநிறமும் புன்முறுவல்பூத்த முகமும் உடையராய் வலது காலை நேராக ஊன்றி இடது காலை வளைத்து இருப்பர்; இடக்கையில் தாமரையைப் பிடித்துக்கொண்டு வலது கையைத் தொங்கவிட்டிருப்பர். தெய்வயானையம்மையார் சிவப்பு நிறத்துடன் புன் முறுவல்பூத்த முகத்துடன் இடக்காலையூன்றி வலதுகாலைச் சிறிது வளைத்து, வலது கையில் கருங்குவளை ஏந்தி இடது கையைத் தொங்கவிட்டுக்கொண் டிருப்பர்.

முடியாப் பிறவிக் கடலில்
புகார்; முழு துங்கெடுக்கும்
மிடியால் படியில் விதனப்
படார்; வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள்
அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு
நாமம் புகல்பவரே.

—கந்தரலங்காரம்.

# கந்தபுராணவரலாறு

**உமாதேவியார் தவம் :**

திருக்கயிலாய மலையிலே பொன்மயமான அத்தாணி மண்டபத்திலே இரத்தின சிங்காசனத்தில் உலக அன்னையாகிய உமாதேவியாருடன் சிவ பெருமான் திருவோலக்கம் கொண்டிருந்தார். அப்போது தும்புரு நாரதர் முதலிய தெய்வமுனிவர்கள் யாழ் வாசித்தனர். பானுகம்பன் முதலிய பூதகணத்தலைவர்கள் குடமுழா முதலிய இன்னியங்கொட்டினர். தேவர் களும் முனிவர்களும் கண்படைத்த பயனையெய்திேனம் எனக் களித்துக் கூத்தாடினர். திருநந்திதேவர் வாயில்காக்கும் அகம்படிமைத் தொழில் பூண்டு அரன்பணியாற்றிக்கொண்டிருந்தார்.

உலகுய்யக்கொண்ட திருவோலக்கம் இவ்வண்ணம் நிகழும்போது சிவபெருமானுடைய இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமாதேவியார், ஏதோ துணுக்குற்றவர்போல எழுந்து, பெருமான் திருமுன்னர்ப் பணிந்து நின்று, 'பெருமானே ! சிவநிந்தகனாகிய தட்சனுக்கு மகள் என்ற பொருளால் வழங்கும் தாட்சாயணி என்னும் பெயரை நான் தாங்கேன்; அப்பெயர் நீங்குமாறு அருள்செய்யவேண்டும்' என்று விண்ணப்பித்தார். எல்லாவற் றையும் இருந்தபடி, உணர்த்தாதே உணருகிற முழுமுதற்கடவுளாகிய பெருமான், 'இமயமலையரசன் உன்னை மகளாக - எம்மை மருகனாகப்பெறப் பெருந்தவம் புரிகின்றான்; அவனிடம் சென்று நீ மகளாகத்தோன்றுக; நாம் உரியகாலத்து வந்து மணந்து வருவோம்; அப்போது தாட்சாயணி யென்ற பெயர் மாறிப் பார்வதியென்ற பெயர் எய்துவாய்' என்று ஆணை யருளினர். உமாதேவியார் விடைபெற்று, இமயச்சாரலிலே மானசவாவி யில் மலர்ந்திருந்த தாமரைமலர் ஒன்றில் குழந்தைவடிவாக எழுந்தருளி யிருந்தார். வாவிக்கரையிலே தவஞ்செய்துகொண்டிருந்த இமவான் கண்டு களிப்புற்றவனாக இரு கைகளாலும் வாரியெடுத்துக்கொண்டுபோய் அரண் மனையில் தன்மனைவியாகிய மேனையின் கையிலேகொடுத்து வரலாற்றைக் கூறி மகிழ்ந்தான். மேனையும் குழந்தையின் தெய்வத்திருமேனி ஒளியில்




ஸ்ரீ பாலசுவாமி
(வேறுவகை)

ஈடுபட்டு, இறைவன் திருவருளை வியந்து பாராட்டிச் சீராட்டி, புனைந்து அணிந்து அழகுசெய்து வளர்த்துவந்தாள்.

உமாதேவியார்க்கு வயது ஐந்து நிரம்பியது. அவர் தன் தந்தையைப் பார்த்து 'எனக்கு மணவாளனாக என்றும் விளங்குபவர் சிவபெருமானே; அவரையே நான் மணந்துகொள்ளவேண்டும்; அதற்கான தவத்தை இந்த இமயத்துச்சியில் இயற்றப்போகிறேன்; அதற்கான சாதனங்களை அமைத்துத்தர வேண்டுகின்றேன்' என்று தெரிவித்துக்கொண்டார். இமவானும் மேனையும் அம்மையின் இளமையையும், தவ இலட்சியத்தின் பெருமையையும், தவத்தின் கொடுமையையும் நினைந்து அம்மா (இவ்வயதில்) இத்தகைய கடுந்தவம் வேண்டாம் என்றனர். இக்காரணத்தால் உ - அம்மா, மா - வேண்டாம் என்ற இந்த இரு எழுத்துக்களும்கூடி உமா என்றே அன்று முதல் அம்மைக்குப் பெயரமைதலாயிற்று. எவ்வளவு சொல்லியும் மகள் மனம் மாறாமைகண்டு, பெற்றோர்கள் இமயத்துச்சியில் இன்று கௌரி சிருங்கம் என்று வழங்கப்பெறுமிடத்தில் தவச்சாலை அமைத்துத்தந்தனர்; மேலும் உமாதேவியார் தவஞ்செய்வதை நாடோறும் கண்டுவந்தனர்.

**உமாதேவியார் திருமணம்:**

இவ்வண்ணம் இறைவி இமயமலையில் தவம் மேற்கொண்டிருக்க, சிவபெருமான், வேதசாஸ்திர விற்பன்னர்களாகிய சனகர், சனந்தனர், சனாதனர் சனற்குமாரர் ஆகிய நால்வருடைய விருப்பின்படி, ஆகமத்து உட்பொருளின் அநுபவப் பொருளை உணர்த்த, கல்லால மரத்தடியில் தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளி, சின்முத்திரைக்கையராகி, ஞானானுபவப் பொருளைச் சொல்லாமற் சொல்லினர். இறைவன் இங்ஙனம் தவத்திருக் கோலம் பூணவே உலகில் உயிர்கள் யாவும் ஆண் பெண் இணைவிழைச்சின்றித் துறவிகள்போல வாழ்ந்தன. அதனால் உலகில் படைப்புக் குறைவதாயிற்று. பல தேவயாண்டுகள் கடந்தன. தேவர்களும் முனிவர்களும் மக்களும் சூரபன்மனாதியர் செய்யும் துன்பங்களைத் தாங்காது அவதிப்பட்டனர். இந்திரன் இந்திராணியோடு திருக்கயிலை சென்று விண்ணப்பிக்கலாம் என்று வந்தான். அங்கு இறைவன் தட்சிணாமூர்த்தியாக இருத்தலையும், யாரையும் தரிசிக்க அநுமதிக்காததையும் நந்திபகவான் வாயிலாக அறிந்துகொண்டான்; சத்தியலோகம் சென்று நான்முகனைக் கண்டான்; தன்மனைவி இந்திராணியைத் தேவகுருவாகிய வியாழபகவான் மனைவியிடம் ஒப்படைத்துவிட்டு, நான்முகனோடும் தேவர்களோடும் ஸ்ரீவைகுண்டத்தில்

திருமாலிடம் சென்ருன். 'தம் குறைநீக்கி அருளுக' என விண்ணப்பித்துக் கொண்டான். அதனைக்கேட்ட திருமால், 'நமது பரம்பொருளாகிய சிவ பெருமான் ஆதிசத்தியாகிய உமாதேவியாரை மணந்தாலல்லது நமதுகுறை தீராது; ஆதலால் யோகியாயிருக்கும் பெருமான் போகியாதல்வேண்டும்; அதற்காக நம் குமாரனுகிய கருவேளையழைத்துக் காமபாணங்களை ஏவிச் சிவனைப் போகியாகச் செய்வதே முதற்கண் செய்யவேண்டிய காரியம்' என்றனர்.

உடனே சத்தியலோகந்திரும்பிய பிரமன், தம்பியாகிய மன்மதனை அழைத்துத் 'தேவர்கட்கு உபகாரமான இந்தக் காரியத்தை உன் உயிரே போனுலும் முடித்துவைக்கவேண்டியதுதான்' என்று வற்புறுத்தினன். மறுத்தால் சபிப்பேன் என்றும் அச்சுறுத்தினன். பிரமனின் சாபத்தால் வருந்துவதைக்காட்டிலும் பரமன் கோபத்திற்காளாவதே புண்ணியமும் கண்ணியமுமாகும் என்று எண்ணிய மன்மதன் மனைவி இரதியோடும், தோழன் வசந்தனேடும் கயிலைக்குச்சென்ருன். மேற்குவாயில் வழியாக இறைவன் திருமுன்பு அடைந்தான்; கணையை எய்தான். கண்ணுதற் பெருமான் சிறிது நெற்றிக்கண்ணை விழித்து மன்மதனை நோக்கினர். அவன் சாம்பரானன். இரதிதேவி புலம்பினள். மதனன் அம்பெய்வதைக் காண வந்திருந்த பிரமன் முதலிய தேவர்கள் மன்மதன் எரிந்ததையும், மீட்டும் பெருமான் யோகத்திலிருப்பதையும் கண்டனர்; அஞ்சினர். திருக்கோபுர வாயிலையடைந்து துதித்தனர். சிவபெருமான் நந்திதேவரைக்கொண்டு தேவர்களை அழைத்து 'நுங்குறை யாது? நுவலுக' என்றனர். தேவர்கள் சூரனுற்படுந் துன்பங்களைச் சொல்லிக்கொண்டனர். இறைவன் உமையை மணந்து உங்கள் குறையைப் போக்குவோம் என்றருளிச்செய்தனர். இந்தச் சமயம்பார்த்து, 'இரதிதேவியும் என்நாயகன் குற்றமற்றவன்; தேவர்கள் தூண்டவந்து விளக்கில் விட்டில்போலாயினன்; என்னைக் காக்கவேண்டும்' என்று விண்ணப்பித்தாள். பெருமான் 'திருமணக்கோலக்காலத்து அவனை உனக்குமட்டும் உருவாகவும் ஏனையோர்க்கு மனத்திலுதிக்கும் அருவமாக வும் படைத்துத் தருவோம்' என்றனர். இரதிதேவியும் சொர்க்கம்சென்ருள். இறைவன் சனகாதியர்க்குச் சிவயோகத்திருந்து நற்கதியடைவீர்களாக என்று அருள்செய்து அனுப்பிவிட்டு. பார்வதிதேவியின் தவச்சிறப்பைக் காண, கிழவேதியர் உருத்தாங்கி இமயஞ்சென்ருர்; இறைவியின் மன உறுதியை உலகிற்கு உணர்த்த வாதாடினர்; இடபாரூடராக உண்மை வடிவைக்காட்டி 'உமையே! ஒன்றுக்கும் அஞ்சாதே; நாம் நாளையேவந்து

மணஞ்செய்து மகிழ்விப்போம்' என்று திருவாய்மலர்ந்தருளினர். பார்வதியும் தவத்தை முடித்தாள். இமவான் பார்வதியை அழைத்துக்கொண்டு அரண்மனை சென்றான்.

இறைவன் பெண்பேசுவதற்காக அகத்தியர் புலத்தியர்முதலான தேவ இருடிகள் எழுவரையுமனுப்பினர். அவர்கள்வந்து மணம்பேசிமுடித்தனர். இமவான் தேவத்தச்சனைக்கொண்டு அரண்மனையையும் இமாலயத்தையும் அலங்கரித்தான். எல்லா ஏற்பாடுகளும் விரைந்து நடந்தன. இமவான் திருக்கயிலைக்குச் சென்று நந்தியெம்பெருமான் ஆணையின்வண்ணம் உள்ளே புகுந்து 'பங்குனி உத்திரத்திருநாளாகிய இன்று என் மகள் உமையை மணந்துகொள்ளவேண்டும்' என்று விண்ணப்பித்துக்கொண்டான். சிவபெருமானும் திருமணக்கோலத்துடன் தேவர்களும் பிறரும் புடைசூழ இமயத்திற்கு எழுந்தருளினர். மணமண்டபத்து வீற்றிருந்தார். பார்வதி இலக்குமியும் சரஸ்வதியும் புடைவர, இந்திராணி அடைப்பைதாங்க, கங்கை சாமரம்வீச, மணமண்டபத்தில் எழுந்தருளினர். பிரமன் சடங்குமுறை காட்டினர். இமவான் தன்மகளது கையை எடுத்து உலகெலாமுடைய ஒரு பரம்பொருளின் கையில் வைத்துத் தாரைவார்த்துக் கொடுத்தான். திருமணக்கோலப் பெருமானையும் பெருமாட்டியையும் எல்லாரும் வணங்கி விடைபெற்றுச் சென்றனர். இரதிதேவியும் வணங்கித் தன் கணவனைப் பெற்றாள். இறைவன் போகியாயிருந்து எல்லா உயிர்களுக்கும் போகத்தை நல்கினன். உலகும் போகத்தில் ஆழ்ந்தன ; இன்புற்றன.

### முருகன் திருவவதாரம் :

திருமணமாகிப் பல நாட்கள் சென்றும், இறைவன் ஒரு குமாரனைத் தந்தருளாமையால் கவலையுற்ற பிரமன் முதலான தேவர்கள், நிகழ்ச்சியறிந்து வரும்படி வாயுவைத் தூதாக அனுப்பினர். வாயு, நந்திதேவர் ஆணையால் சிவபெருமானைக் காணமுடியாமல் திரும்பி வந்தான். தேவர்கள் தாங்களே திருக்கயிலை சென்று சிவபெருமானைத் தரிசித்துத் தங்குறைகளை விண்ணப்பித்துக் கொண்டனர். இறைவன் அருள்கூர்ந்து ஈசான முதலான ஐந்து முகங்களோடு அதோமுகமாகிய ஆறுவது திருமுகத்தையுங்கொண்டு எழுந்தருளியிருந்து, ஆறு முகங்களின் நெற்றிக்கண்கள் ஆறிலிருந்தும் தீப்பொறிகளைத் தோற்றுவித்தருளினர். அப்பொறிகளின் வெம்மையைத் தாங்காது உலகமே உலைந்தது. கடல்கள் வற்றின. பூமி பிளந்தது. ஆனல்

பொறிகள் எவ்வுயிர்க்கும் துன்பம் விளைவிக்கவில்லை; அச்சுறுத்தின. உமா தேவியாரும் திருவுளங்கலங்கித் தம்கோயிலைநோக்கி ஓடினர். தேவர்கள் சிதறியோடினர்.

பெருமான் தம்முடைய திருமுகங்கள் ஐந்தையும் மறைத்து ஒரு திருமுகத்தோடு எழுந்தருளியிருந்து, உலகெங்கும் பரவிய பொறிகளைத் தம்திருமுன்னர் வரும்வண்ணம் பணித்தார். இறைவன் வாயுதேவனையும் அக்கினிதேவனையும் பார்த்து, 'இப்பொறிகளைச் சரவணத்தில் கொண்டு சேர்க்க' எனக்கட்டளையிட்டனர். வாயுதேவன் முதற்கண் அப்பொறிகளைத் தாங்கிச்சென்றான். ஆற்றாமல் அக்கினியிடம் தந்தான். அவனும் சிறிது தூரம் சென்று ஆற்றாது கங்கையில் உய்த்தான். கங்கை வற்றியது. பின் இறைவன்கருணையினால் கங்கைபெருகிச் சரவணப்பொய்கையில் கொண்டு சேர்த்தது. தேவர்கள் சரவணப்பொய்கையைக் காத்து நின்றனர். அப்போது அருவமாய் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய் பிரமமாய் நின்ற சோதிப்பிழம்பு ஆறு முகங்களும் பன்னிரு கரங்களும்கொண்டு முருகனாக உதித்தார். அப்போது மங்களவொலிகள் வானத்து எழுந்தன. தேவர்கள் மலர்மாரிபெய்தனர். அசுரர்களுக்குத் தீ நிமித்தங்கள் தோன்றின. முருகக்கடவுள் ஆறு திருமுகங்களுடன் செந்தாமரைமலர்மீது வீற்றிருந் தருளினார். தேவர்கள் கார்த்திகைமாதர் அறுவரையும் பார்த்து, முருகனை வளர்க்குமாறு பணித்தனர். முருகன் ஒரு திருமுகமுடைய ஆறு குழந்தை யாக, அம்மாதர்கள் அறுவரும் பாலூட்டி வளர்த்தனர். முருகக்கடவுள் குழந்தைமைக்கேற்பப் பாலுண்டு, பல திருவிளையாடல்களைப் புரிந்தனர்; சிறுகுறும்புகள் பல செய்தனர். இவற்றைக்கண்டு தேவர்களும், கார்த்திகை மாதர்களும் களித்தனர்.

**துணைவர்கள் வருதல் :**

தீப்பொறிகளின் வெம்மையாற்றாது எழுந்தோடியபோது உமாதேவி யாரின் பாதச்சிலம்புகள் தெறித்தன. அவற்றின் பரற்கற்களாகிய நவமணி கள் சிதறின. ஒவ்வொரு மணியிலும் உமையம்மையின் நிழல் பட்டது. அம்மணிகளிலிருந்து நவசக்திகள் வெளிவந்தனர். இறைவனை விரும்பினர்; கருவுற்றனர். இதனைக்கண்ட இறைவி இச்சூலோடு நெடுங்காலம் வருந்துக எனச் சபித்தார். நவசக்திகளும் வியர்க்க விருவிருக்க நின்றனர். இவர்கள் வியர்வையிலிருந்தும் ஓரிலக்கம் வீரர்கள் தோன்றினர். அவர்கள் நாடோ றும் இறைவனை வணங்கித் தொண்டுபுரிந்து வந்தனர். கருணை நிறைந்த




ஸ்ரீ. கிரவுஞ்சபேதனர்

பெருமாட்டியின் ஆணையின்வண்ணம் நவசக்திகளுள் மாணிக்க வல்லி வீரவாகு தேவரையும், முத்துவல்லி வீரகேசரியையும், புட்பராகவல்லி வீரமகேந்திரரையும், கோமேதகவல்லி வீரமகேச்சுரரையும், வைடூரியவல்லி வீரபுரந்தரரையும், வைரவல்லி வீரராக்கதரையும், மரகதவல்லி வீரமார்த் தாண்டரையும், பவளவல்லி வீராந்தகரையும், இந்திரநீலவல்லி வீரதீரரையும் பெற்றனர். பிறந்த நவவீரர்களும் தம்மன்னையரையும், உமாதேவியரையும் சிவபெருமானையும் வணங்கி நின்றனர். சிவபெருமான் அவர்களுக்குத் தனித்தனியே வாள் முதலிய படைக்கலங்கள் வழங்கி, ஓரிலக்கம் வீரர் களுடன் கலந்து நீங்களும் நமது முருகனுக்கு ஏவல் புரிக என ஆணை வழங்கினர். அவர்களும் அங்ஙனமே சிவப்பணி தலைநின்றார்கள்.

ஒருருவானது :

இங்ஙனம் நிகழுநாட்களில் ஒருநாள் சிவபெருமான் உமையம்மை யாருடன் முருகனைக் காணச் சரவணப்பொய்கைக்கு எழுந்தருளினர். முருகன் தமது தந்தையாரை நோக்கி மனமகிழ்ந்தார்; முகமலர்ந்தார். இறைவன் ஆணையின்வண்ணம் உமாதேவியார் இடபவாகனத்திருந்து விரைந்து இறங்கிப்போய் ஆறு திருவுருவங்களையும் இருகையாலும் வாரி யணைத்து ஒருருவாக்கினர். அதுமுதல் முருகனுக்கு 'கந்தன்' என்ற நாமம் உண்டாயிற்று. உமாதேவியார் தம் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்துக் கறந்து ஊட்டினர்; இறைவன் திருமுன் கொண்டுசென்றனர். இறைவன் இடபவாகனத்தில் இடமருங்கு உமையவளும், இடையில் முருகனுமாக இருந்து சோமாஸ்கந்தமூர்த்தியாகத் திகழ்ந்தார். தேவர்கள் இக்கோலத் தைக் கண்டு வாழ்த்தினர். இறைவன் கார்த்திகைமாதர்களுக்கு அருள் வழங்கி, 'நம்மகன் உங்களால் வளர்க்கப்பெற்றமையின் கார்த்திகேயன் என்ற நாமத்தோடு விளங்கட்டும்; கார்த்திகை நாட்களில் முருகனை வழிபடு வோர்க்கு இருமைப்பயனையும் தந்து முத்தியையும் அளிப்போம்' என்று திருவாய்மலர்ந்தருளினர்.

பராசரமுனிவரால் சாபமெய்திச் சரவணப் பொய்கையிலே மீன்க ளாய்க்கிடந்த குமாரர்கள் ஆறுபேரும் உமாதேவியாரின் பாலையுண்ட புண்ணியத்தால் சாபநீங்கிச் சிவபெருமான் ஆணைவண்ணம் ஞானஸ்கந்தர் உபதேசம் பெறுவதற்காகத் திருப்பரங்குன்று சென்றனர். ஏனைய தேவர் களும் அவரவர்கள் இருப்பிடம் ஏகினர். இறைவன் திருக்கயிலைக்கு எழுந்தருளினர்.

முருகன் திருவிளையாடல் :

முருகன் திருக்கயிலையில் வீற்றிருக்கும்போது யாவரும் வியக்கப் பற்பல திருவிளையாடல்களைப் புரிவார். அவர் செய்யும் விளையாடல்கள் யாவும் தெய்வத்தன்மையை விளக்குவனவாக இருந்தன. வியந்த உமை யம்மையார் முருகன் பெருமையைச் சிவபெருமான் வாயிலாகச் செவி மடுத்து, இவன் பெருமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதாதலை எண்ணி உளம் பூரித்து வீற்றிருந்தார். முருகன் திருவிளையாட்டு உலகெங் கும் நிகழ்வதாயிற்று. மலைகள் இடம் பெயரும். கடல்கள் ஒன்ருகும். சந்திரன் சூரியமண்டலத்திருப்பான். சூரியன் சந்திரமண்டலத்திருப்பான். இத்தகைய பற்பல விளையாடல்களை அவர் புரிந்தார். மக்கள், உலகநிலை மாற்றத்தைக்கண்டு அஞ்சினர். தேவர்கள் இது அசுரர் செய்கையேயாகும் என்று அஞ்சி நான்முகனிடம் சென்றனர். நான்முகன் தேவர்களனைவரை யும் அழைத்துக்கொண்டு மேருமலையிலிருக்கும் இந்திரனிடம் சென்று தெரிவித்தனர். முருகன் இளமுருகனுக ஒரு திருமுகத்துடன் அங்கும் தோன்றி மேருமலையை அசைத்தார். கொடுமுடிகளைப் பறித்து வீசினுர். இந்திரன் முதலிய தேவர்கள் இச்செயலையறிந்து இவருடைய திருமேனியின் தெய்வ ஒளியில் ஈடுபட்டு 'அசுரர்களும் யாரும் செய்யமுடியாத இந்தப் பேராற்றலையுடையவன் இவனே ! இவன் இளைஞன் அல்லன்; அசுரரினும் கொடியன்; இவனேடு அனைவரும் சண்டையிடுவோம்' என்று எண்ணித் தத்தம் ஊர்திகளில் ஏறிப் படையெடுத்து வந்தனர்: பொருதனர். யாவரும் அழிந்தனர். இந்திரன் முருகனுடைய ஒருகணைக்கு ஆற்ருது சோர்ந்து வீழ்ந்தான். முருகப்பெருமான் தனிவீரனுகப் போர்க்களத்து உலாவினுர்.

வியாழபகவான் நாரதமுனிவர் வாயிலாக நிகழ்ச்சிகளையறிந்து விரைந் தோடிவந்து முருகனை வழிபட்டு இறந்த தேவர்களை எழுப்பித்தந்தனர். முருகன் தமது விசுவருபதரிசனத்தைத் தேவர்களுக்குக் காட்டியருளினர். தேவர்கள் அவ்வுருவத்தை முழுதும் காணலாற்ருது 'பெருமானே ! பேருரு வைக் காட்டியதுமட்டும் போதாது ; அதனைக்காணும் ஆற்றலையும் எமக்கு அருளுதல் வேண்டும்' என வேண்டிக்கொண்டனர். முருகன் அவ்வாறே அவர்களுக்குக் காணுங்கண்ணை அளித்தார். தேவர்கள் கண்டு போற்றிப் புகழ்ந்தார்கள். பின் முருகன் ஆறுமுகங்களுடைய பண்டைத் திருக்கோலங் காட்டி ஆட்கொண்டார். இந்திரன் 'கருணைக்கடலே! கந்தப்பெரும! அசுரர்களை யழித்துத் தேவர்களைக்காத்து விண்ணுலகாட்சியைத் தேவரீரே செய்தருளவேண்டும்' என வேண்டிக்கொண்டான். முருகப்பெருமான்

இந்திரனை நோக்கி 'நீ நமக்குத்தந்த அரசை நாம் உனக்கு வழங்குகிறோம்; நாம் சேனாபதியாவோம்; நீங்கள் சேனைகளாக இருங்கள்; அவுணர்களை வென்று அமரர்க்கு ஆக்கமளிப்போம்' என்று கூறி, முருகன் தன்திருவிளையாடலால் முறைபிறழ்ந்த உலகை முன்னைய நிலையெய்தத் திருவுளம்பாலித்தார். அங்ஙனமே ஆயிற்று. இந்திரன் திருக்கயிலைமலைச்சாரலில் உள்ள ஒரு மலையில் ஆலயம் அமைத்து, இங்கு எழுந்தருளி எமது பூசையை ஏற்றருள வேண்டும் எனப் பணிந்தான். முருகன் அவ்வண்ணமே எழுந்தருளிப் பூசையேற்றருளினர். அவர் எழுந்தருளியிருந்த இடம் கந்தவெற்பு என வழங்கப்பெற்றது. முருகன் கந்தவெற்பில் நவவீரர்களும் இலக்க வீரர்களும் பூதகணங்களும் புடைசூழ வீற்றிருந்தருளினர்.

### பிரணவ உபதேசம் :

நாரதமுனிவர் ஒரு யாகம் செய்தனர். அந்த யாகத்தில் நிகழ்ந்த மந்திரலோபம் காரணமாக அவர் நினைப்பிற்குமாறாக ஓர் ஆடு தோன்றி உலகையே கலக்கிற்று. தேவர் முதலிய அனைவரும் அஞ்சினர். தேவர்கள் வேண்டுகோளின்படி முருகன் ஆட்டுக்கடாவை அடக்கித் தமது வாகனமாகக் கொண்டார். பின்னர் முருகன் அருளால் நாரதர் வேள்வியை இனிது முடித்தார். அது முதல் ஆட்டுக்கடாவை வாகனமாகக்கொண்டு முருகன் மூவுலகங்களிலும் உலாவருவார். இங்ஙனம் நிகழுங்காலையில் ஒருபோது, திருக்கயிலைசென்று சிவபெருமானை வணங்கிவரும் தேவர்கள் முருகனையும் வழிபட்டு அருள்பெற்றுச் செல்வார்கள். பிரமன்மட்டும் வீழ்ந்து வணங்காமல் கைகூப்பி நின்றான். பிரமதேவன் மனத்திலுள்ள ஆணவத்தடிப்பையறிந்த முருகன் 'சிருட்டித்தொழில் செய்யும் உனக்கு வேதம் வருமா? வருமாயின் ஓரிருக்கு ஓதுக' என்றனர். பிரமன் ஓம் என்று தொடங்கினன். 'போதும் இதன் பொருள் யாது?' என்று கேட்க அவன் விழித்தான். 'இதுகூடத் தெரியாத நீ சிருட்டிப்பது எப்படி ?' என்று நாலுதலையும் குலுங்கக்குட்டிக் கந்தவெற்பின் ஒருசாருள்ள சிறையில் அடைத்துச் சிருட்டித்தொழிலைத் தாமே செய்தனர். இதனையறிந்த திருமால் பிரமனை விடுவிக்க எண்ணிச் சிவபெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டார்.

சிவபெருமான் நந்திதேவரை முருகனிடம் அனுப்பி அயனைச் சிறைவிடுக எனப் பணித்ததாகத் தெரிவித்துவருக என்றனர். நந்திதேவர் முருகப்பெருமான் உடம்படாமையைக்கண்டு ஓடிப்போய்ச் சிவபெருமானிடம்

தெரிவித்துக்கொண்டார். சிவபெருமான் புன்முறுவல்பூத்து இடபத்தில் ஏறிக் கந்தவெற்பை அடைந்து, அயனைச் சிறைவீடுசெய்வித்து 'மைந்த! பிரணவப்பொருள் உனக்குத் தெரியுமோ? தெரிந்தாற் சொல்க' என்றனர். முருகன் அவர் திருச்செவியில் பிரணவப்பொருளைச் சொன்னர். கேட்டு உளமகிழ்ந்த ஞானநாயகராகிய சிவபெருமான் திருக்கயிலையையடைந்தார். முருகன் வீரர்களும், பூதகணங்களும் புடைசூழக் கந்தவெற்பில் எழுந்தருளி உலகம் உய்யும்வண்ணம் அகத்தியர்க்குப் பிரணவப்பொருளை உபதேசித்து வீற்றிருந்தார். அப்போது திருமாலின் புத்திரிகளாகிய அமிர்தவல்லியும் சுந்தரவல்லியும் 'எம்மை மணந்துகொள்ள வேண்டும்' என்று விண்ணப்பித்தனர். முருகன் 'தேவகாரியம் சிறிதுளது; அதனை முடித்து மணப்போம்; அதுவரையில் அமிர்தவல்லியாகிய நீ இந்திரனுக்கு மகளாக இரு; சுந்தரவல்லியாகிய நீ சிவமுனிமகளாக வேடர்களிடத்தே வளர்ந்து கொண்டிரு' என்றருளிச்செய்தார்.

**தாரகன் வதை :**

அசுரர்கள் கொடுமைக்காற்ருது சிவபெருமானிடம்சென்று 'எத்தனை யுகமாக நாங்கள் அவதியுறுகின்றோம்; அருள்செய்யவேண்டும்' என்று இந்திரன் விண்ணப்பித்துக்கொண்டான். சிவபெருமான் தம்மிடையில் இருந்த முருகனைநோக்கி 'அசுரர்களை வென்று, சூரனையடக்கி, தேவர்கள் துன்பத்தை நீக்கி, உலகில் வைதிக சைவ நெறியைப் பாதுகாத்து வருக' என ஆணைதந்து பதினொரு உருத்திரர்களையும் தோமரம், கொடி, வில், வாள், குலிசம், அம்பு, அங்குசம், மணி, தாமரை, தண்டம், வில், மழு என்ற படைக்கலங்களாக்கி முருகனுடைய திருக்கரங்களிலே தந்து, வேலாயுதம் ஒன்றையும் படைத்து, அதன் பெருமைகளையும் உணர்த்தித்தந்தனர். மேலும், இலக்கத்தொன்பது வீரர்களையும், முருகனுக்குத் துணையாகச் செல்லுக எனப் பணித்தருளினர். பூதகண நாதர்களையும் பூதங்களையும் உடனனுப்பியருளினர். பேராற்றல் வாய்ந்த இலக்கம் குதிரைகள் பூட்டப் பெற்ற தேரொன்றையும் படைத்துக்கொடுத்து, 'இதில் ஆரோகணித்துச் சென்று வருக' என ஆணை வழங்கினர். முருகன் தேரேறிக் கணங்கள் புடைசூழப் பூமியைநோக்கிப் புறப்பட்டார். தேவர்கள் சூரன் ஒழிந்தான் என்று துள்ளினர்; ஆர்ப்பரித்தனர்.

முருகக்கடவுள் வரும் வழியில், மாயைவல்லதும், சூரபன்மன் கடைசித்தம்பி தாரகனுக்கு உறைவிடமானதும் ஆகிய கிரௌஞ்சமலை

எதிர்ப்பட்டது. இந்திரன் கலங்கினுன். நாரதமுனிவர் அந்த மலையின் ஆற்றலையும், தாரகன் கொடுமையையும், அவனைக் கொன்ருல் அவன் அண்ணனுகிய சூரனைக் கொல்வதின் எளிமையையும் எடுத்து விண்ணப் பித்தனர். முருகக்கடவுள் வீரவாகுதேவரை நோக்கி 'நீ இலக்கத்தெட்டு வீரர்களோடு தாரகன் தலைநகரமாகிய மாயாபுரிக்குச் சென்று அவனை வென்று வருக' என்றனுப்பினர். தாரகன் ஏழு வீரர்களோடும் போர்புரிந்து மாயத்தால் அவர்களைத் தோற்கடித்தான். வீரவாகுதேவர் எதிர்த்தார். அவரோடு நேராகப் போர்செய்ய ஆற்ருது தன் தேரைவிட்டு இறங்கி ஓடினுன். வீரவாகுதேவர் அவன்மீது படைக்கலம் செலுத்துதல் போர்ப்பண்பன்று என்றெண்ணித் துரத்தினர். தாரகன் கிரவுஞ்சமலையின் குகைக்குள் ஓடி ஒளிந்தான். வீரவாகுதேவரும் பின்தொடர்ந்து சென்ருர். மலை மாயத்தால் அவரைச் சிறைப்படுத்தியது.

இந்நிகழ்ச்சியை நாரதர் வாயிலாக அறிந்த முருகன் தாமே சென்று தாரகனேடு பொருதார். தாரகன் அளவிலா வஞ்சகப்போரைச் செய்ய அவை அறுமுகக்கடவுளின் ஞானப்போரின் முன் பயனற்றன. முருகன் ஞானசக்தியாகிய வேலை ஏவி, கிரவுஞ்சத்தைத் துளைத்து வீரர்களை விடுவித்தார். தாரகனைக் கொன்ருர். தேவர்கள் இந்த முதல்வெற்றியைப் போற்றிப் புகழ்ந்து பூசித்தனர். முருகன் போர்க்களத்தில் இறந்துபட்ட பூதகணங்களை எழுப்பிப் போர்க்களத்தைவிட்டு நீங்கினுர். தேவகிரியை அடைந்தார். தேவர்கள் அங்கே ஒரு தேவாலயம் நிருமித்து, அதில் முருகனை எழுந்தருளச் செய்து பூசித்தனர். முருகப்பிரான் அனைவர்க்கும் அருள் வழங்கினுர்.

மாயாபுரியில் தாரகன் இறந்ததும், அவன் மகன் அசுரேந்திரன் அழுது புலம்பிக்கொண்டே, தன் தந்தை இறந்தசெய்தியைச் சூரனிடம் தெரிவிக்க வீரமகேந்திரபுரம் சென்ருன். சூரபன்மனிடம் தெரிவித்துக் கொண்டான். சூரபன்மன் சினந்து 'யானே சென்று என் தம்பியைக் கொன்ற ஆறுநாட்பாலகனை அழித்துவருவேன்' என்று படைகள் புடை சூழப் போருக்குப் புறப்பட்டான். அப்பொழுது அமோகன் என்னும் அமைச்சன் ஒருவன் 'மாற்ருர் வலியறியாது தாங்களே போருக்குச் செல்லலாகாது; சிறந்த வீரனைப் படையோடு அனுப்பி அறிந்துவரச் செய்க' என விண்ணப்பித்தனன். அவ்வாறே சூரன் கோபந்தணிந்து, பகன், மயூரன், சேனன், சக்ரவாகன் முதலிய ஒற்றர்களை அனுப்பிவிட்டு இனிமையாக அரசுசெலுத்தி வீற்றிருந்தான்.

**திருசெந்திலில் எழுந்தருளுதல் :**

தேவகிரியில் எழுந்தருளியிருந்த குமாரக்கடவுள் திருக்கேதாரம், காசி, ஸ்ரீபருப்பதம், திருவேங்கடம், திருக்காளத்தி, சிதம்பரம் முதலான தலங்களில் எழுந்தருளியிருந்து, பின் குமாரபுரியென வழங்கும் திருச்சேய்ஞலூரை அடைந்தார். அங்கே இந்திரன் தேவத்தச்சனைக்கொண்டு ஒரு நகரை நிருமித்து அதில் எழுந்தருளும்வண்ணம் வேண்டிக்கொண்டான். முருகப்பெருமான் அவ்வாறே எழுந்தருளினர்.

இப்படி இருக்கும்போது சீகாழியிலுள்ள வனதேவதையொன்று இந்திரனிடம் வந்து 'தேவரரசே! அன்று என்னிடம் அளிக்கப்பெற்ற அரசியாரின் ஆபரணங்கள் இதோ இருக்கின்றன; பெற்றுக்கொள்க' என்று கொடுத்துப்போயது. அவற்றைக் கண்டவுடன் இந்திரனுக்கு விரகதாபம் மிகுவதாயிற்று. இரவு முழுதும் வருந்தினன். கதிரவன் எழுந்தான். காமக் கொடுமை தணிந்தது. நீராடித் தூய்மையுடன் முருகவேள் திருமுன்பு வந்தான். முருகவேள் 'இந்திரனே! யாம் சிவபெருமானை வழிபட விரும்புகிறோம்; ஆவனசெய்க' என்றருளினர். அவன் அவ்வாறே செய்ய முருகன் சிவாகமநெறிப்படிச் சிவபெருமானைப் பூசித்தார். வணங்கித் துதித்தார். சிவபெருமான் இடபாரூடராக எழுந்தருளினர். யாவரும் மனமுருகிப் போற்றினர். அவர்கள்யாவருக்கும் இறைவன் அருள்புரிந்து முருகனுக்கு உருத்திர பாசுபதம் என்னும் வலிமை பொருந்திய படையொன்றையும் அளித்தனர்.

பின்னர் முருகவேள் அங்கிருந்தும் எழுந்தருளி, பல தலங்களையும் வணங்கிக்கொண்டு பாலைவனத்தைக் கடந்து, பரங்குன்றை அணுகிய போது பராசரமுனி குமாரர்கள் வந்து வணங்கினர். அவர்களுக்கு ஞானோபதேசம் செய்து, கூடவே வரும்படிப் பணித்து, திருச்செங்குன்றூரை வழிபட்டு, திருச்செந்தூரை அடைந்தார். அங்கே தேவத்தச்சன் நிருமித்த திருக்கோயிலிலே பூதகணங்கள் புடைசூழ வீற்றிருந்தார். வியாழபகவானை நோக்கிச் சூரபன்மனுதியர்களுடைய வரலாறுகளைக் கூறுக எனப் பணித்தார்.

**சூரபன்மன் ஆட்சி :**

வியாழபகவான் கூறத்தொடங்கினர்: அசுரேந்திரன் மகளாகிய மாயை சுக்கிரனுபதேசப்படி காசிபரை மயக்கிப் புணர்ந்து சூரபன்மன்,

சிங்கமுகன், தாரகன், அசமுகி என்ற நான்கு மக்களையும், இரண்டுலட்சம் வெள்ளம் அசுர சேனையையும் பெற்றாள். மூவரும் ஏனைய அசுரர்களும் தாய்தந்தையர்களைக்கண்டு வணங்கிநின்று 'யாங்கள் செய்யவேண்டியது என்ன?' என்றபோது, காசிபர் முப்பொருளிலக்கணத்தையும், பேரின்ப நெறியையும், தவத்தின் சிறப்பையும் உணர்த்தினார். மாயை, 'பிறவிப்பயன் கல்வியும் செல்வமுமே; அவ்விரண்டிலும் சிறந்தது செல்வமே; அதனை வேள்விகள் செய்தாயினும் அடைதல் வேண்டும்; தேவர்கள் உங்கள் பகைவர்; அவர்களை வெல்லுதல்வேண்டும்; அதற்குரிய வகையில் யாகங்களைச்செய்யுங்கள்' என்று உபதேசித்தாள். தாயின்சொற்படி சூரன் உத்தர குருவில் யாரும் செய்தற்கரிய பெரியயாகஞ்செய்து, யாகத்தீயில் தன்னையே ஓமஞ்செய்து, இறைவனதருளால் மீட்டும் உயிர்பெற்று, ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டுச்சதுர்யுகம் அரசாளக்கூடிய ஆற்றலையும், இறைவனுடைய சக்தியன்றி வேறு யாராலும் வெல்லமுடியாத வலிமையையும் பெற்றான்.

குருவாகிய சுக்கிராசாரியரும், சூரபன்மனுதியர்க்கு, 'பாசம் உண்டு என்பது பொய்; பதியும் பசுவும் ஒன்றே; இறைவன் விளையாட்டாக மாயாகாரியமாகிய உடல்களிற் கலந்திருப்பர்; நல்வினை தீவினை புண்யம் பாவம் அனைத்தும் மித்தை; முத்தியும் அப்படியே; நீயே பிரமம் என்று நினை; யாரும் உன்னைவிடப் பெரியவர்களல்லர்; எல்லாரையும் வென்று என்றும் நீங்கா ஆனந்தத்துடன் வாழ்க' என்று உபதேசித்தார். சூரபன்மன் 'குருநாதா! எனக்குரிய ஆயிரத்தெட்டண்டங்களைப்பற்றிய வரலாறுகளும் விளங்கக் கூறுக' என்று வேண்ட, அவ்வாறே அண்டகோச வரலாற்றையும் அறிவித்தார். சூரபன்மன் அசுரசேனைக்கடல் புடைசூழ, தாயை வணங்கி, குருதேவரை வணங்கி, தாய்தந்த இந்திரஞாலத்தேரின்மேல் ஏறிக்கொண்டு திக்விசயம் செய்யப்புறப்பட்டான். குபேரனை அடிமையாக்கி, விண்ணுலகைக் கொளுத்தி, சயந்தனைச் சிறைப்படுத்தி, அக்கினியை ஏவலனுக்கி, யமனை ஆட்படுத்தி, மற்றத் திக்குப்பாலகர்களையும் வென்று, திருமாலுடன் பொருது, தாரகன் அவர் ஏவிய சக்கராயுதத்தைக் கழுத்தணியாகப்பெற அவரால் பாராட்டப்பெற்று, சத்தியலோகம் மகலோகம் தவலோகம் சனலோகம் எல்லாவற்றையும் வென்று, வைகுண்டம் கடந்து, சிவலோகம் சென்று, சிவபெருமானை வணங்கி அருள்பெற்று, பிற அண்டங்களையும் கண்டு, அண்டபித்திகை வழியாகச் சுவர்க்கஞ் சென்றான்.

இவ்வண்ணம் தன் மகள் மகன் வீராதிவீரனுக விளங்குவதையறிந்த அசுரேந்திரன் சுக்கிரன் வாயிலாகச்சென்று, சூரபன்மனேக்கண்டு பாராட்டி அளவளாவி மகிழ்ந்தான். பின்பு சூரபன்மன் அசுரசேனேகள் புடைசூழப் பூமிக்குத் திரும்பினுன். தேவர்கள் அனேவரும்வந்து கண்டு சென்றனர். பின் சூரபன்மன் சுக்கிராசாரியர் திட்டப்படி, தேவத்தச்சனேநோக்கி 'கடலே அகழியாக அமைத்து வீரமகேந்திரபுரம் என்னும் அழகிய பெருநகரத்தைப் படைத்து, அதனேச்சூழ எட்டுத்திசைகளிலும் ஏமபுரம், இமயபுரம், இலங்கா புரம், நீலபுரம், சுவேதபுரம், அவுணர்புரம், வாமபுரம், பதுமபுரம் என்னும் எட்டு நகரங்களேயும் அமைத்துத்தருக; என்தம்பி சிங்கமுகனுக்கு வட கடலின் நடுவில் ஆசுரம் என்ற நகரையும், தாரகனுக்கு ஏமகூடமலேக்குப் பக்கத்தில் மாயாபுரம் என்ற நகரையும் விரைவில் அமைக்க' எனப் பணித்தான். அவனும் அவ்வாறே செய்துகொடுத்தான்.

சூரபன்மன், வீரமகேந்திரபுரத்தில் உள்ள தனது அரண்மனேயில் தேவர்கள்துதிக்க அசுரர்கள் வணங்கிமகிழச் சிம்மாசனம் ஏறினுன். தேவர் களுக்குத் தகாதபணிகளேத்தந்து செய்ய வற்புறுத்தினுன். இவ்வாறு அவன் அரசுசெய்யுங்காலே, தேவத்தச்சன் மகளாகிய பதுமகோமளேயை மணம் புரிந்துகொண்டான். யமன்மகள் விபுதை என்பாளேத் தம்பி சிங்கமுகனுக் கும், நிருதியின் மகள் சவுரியென்பாளேத் தாரகனுக்கும் மணம்புரிந்துவைத் தான். தம்பிமார்கள் இருவருக்கும் இரண்டு இரண்டுகோடி வெள்ளம் அசுர சைனியங்களே அளித்து, அவரவர்கள் நகர்செல்லப் பணித்தான். சேனுபதி யர்களேத் தம்மாணேயைக்கொண்டு செலுத்தும்படி ஆங்காங்கேநிறுவினுன். தான் வீரமகேந்திரபுரியிலிருந்து துர்க்குணன், தருமகோபன், துன்முகன், சங்கபாலன், வக்கிரபாலன், மகிடன் முதலான மந்திரிமார்களுடனிருந்து தேவர்கள் துதிக்க, முனிவர்கள் வாழ்த்த, திருமால் நான்முகன் முதலியோர் நல்லனவேகூற அரசுசெலுத்தினுன்.

இங்ஙனம் நடத்திவருநாளில் இவனுக்குப் பானுகோபன், அக்கினி முகன், இரணியன், வச்சிரவாகு என்ற மக்கள் பிறந்தனர். தம்பி சிங்கமுக னுக்கு அதிசூரனும், நூறு புத்திரர்களும் பிறந்தனர். தாரகனுக்கு அசுரேந் திரன் பிறந்தான்.

சூரன் தங்கையாகிய அசமுகி என்பவள், முனிவர்கள் தவத்தை அழித்து இஷ்டம்போலத் திரிந்துவந்தாள். ஒருநாள் துருவாசமுனிவரை

அவள் வலிந்துகூடி வில்வலன் வாதாபி என்ற மக்கள் இருவரைப் பெற்ருள். இப்படி இவர்கள் குடும்பம் பெருக ஆண்டுவருங்காலத்தில், சூரபன்மன் இந்திராணியைக் கவர்ந்துவர எண்ணி, இந்திரனைச் சிறையிடுக என்று தனது சேனுபதிக்குக் கட்டளையிட்டான். சேனுபதி சுவர்க்கம் சென்று இந்திரனையும் இந்திராணியையும் காணுது திரும்பிவந்தான். இச் செய்தி அறிந்த சூரபன்மன் ஒற்றர்களைக்கொண்டு அவர்கள் இருக்கும் இடத்தை அறிந்துவரச் செய்தனன். சீகாழியில் மூங்கில்வடிவாக இந்திரன் மறைந்திருந்தான். ஆகவே இருக்குமிடம் அறியப்படாமையால் சூரன் பூவுலகில் மழைபெய்யாதொழிக என ஆணையிட்டான். அதனுல் நந்தவனம் வாடியது. இந்திரன் வருந்தினுன். இறைவனது ஆணையின்வண்ணம், காகவடிவங்கொண்ட கணபதியால் காவிரி பெருகிவர, நந்தவனம் செழித்தது. இந்திரன் மகிழ்ந்து சிவபூசை செய்துகொண்டு சீகாழியிலிருந்தான்.

சூரன் ஆட்சிக்கொடுமையால் அவதியுற்ற தேவர்கள் தம்மரசனைத் தேடிக்கொண்டுவந்து சீகாழியில் கண்டு தமது நிலையைக் கூறினுர்கள். இந்திரன் மிகவருந்தி 'எல்லோரும் கயிலைசெல்வோம்; கண்ணுதற் பெருமானிடம் விண்ணப்பிப்போம்' என்ருன். அவ்வாறே அனைவரும் சென்று கயிலையில் காவல்செய்கின்ற நந்தியெம்பெருமான் ஆணையின்வண்ணம், யோகியாயிருக்கும் பெருமான் திருவருள் சுரக்கும்வரை இங்கிருப்போம் என்று ஒருபுடை காத்திருந்தனர்.

எங்கும் தன்னிஷ்டம்போலச் சுற்றிவரும் அசமுகி ஒருநாள் சீகாழியில் இந்திராணியைக் கண்டாள். 'இவளை நினைத்தல்லவா என் தமையன் மெலிகிருன்; இவளை இப்படியே தூக்கிக்கொண்டுபோய் என் அண்ணனிடம் சேர்ப்பேன்' என்று வலிந்து பற்றியிழுத்தாள். இந்திராணி, தனக்குக் காவலான மகாசாத்தாவை விளித்து 'ஐயனே! ஓலம்; மெய்யர்க்கு மெய்யனே! ஓலம்; எங்கள் கடவுளே! ஓலம்; தொல்சீர் வீரனே! ஓலம் ஓலம்' என்று புலம்பினுள். இந்த ஓல ஒலியை மகாசாத்தாவின் படைத்தலைவரான மகாகாளர் கேட்டார்; அசமுகியின் கையை வெட்டி இந்திராணியை விடுவித்தார்; அசமுகியைக் காலால் உதைத்துருட்டினுர்; துன்முகியையும் ஒருகையை வெட்டி உதைத்துருட்டினுர். அவர்களிருவரும் ஓவென்றலறிக்கொண்டு வீரமகேந்திரபுரம் சென்று, தன் தமையன் அத்தாணிமண்டபத்து அரசுவீற்றிருக்கும்போது நிகழ்ந்ததை அறிவித்து அலறினுர்கள். சூரபன்மன் சினந்து, தங்கை கையிழக்கத் தமையன்செய்யும் அரசாட்சி அழகிது அழகிது என்றுகூறி நகைத்தான். அதனையறிந்து பானுகோபன், தேவர்கள் யாரும்

இச்செயல் செய்யமாட்டார்கள் ஆயினும் எல்லாத்தேவர்களேயும் நான் சிறைபிடித்து வருவேன் என்று தந்தையின் அநுமதிபெற்றுத் தன் அரண் மனை சென்ருன். சூரபன்மன் நான்முகனையழைத்து இவள் கையை ஒன்றச் செய்க என்ருன். கை முன்போல் வளர்ந்தது.

சூரபன்மன் சூரியனேயும், வாயுவையும், ஏனைய தெய்வங்களேயும், மண்ணுலக மன்னர்களேயும் சிறையிட்டுத் தண்டித்தான். காலக்கடவுளர் சிறைப்பட்டமையால் உலகியல் நடைபெறவில்லை. நான்முகன் வேண்டு கோட்படி அவர்களைமட்டும் விடுவித்து 'எம் எண்ணப்படி இனி நடக்க' என ஆணையிட்டான். பானுகோபன் சீகாழி சென்று இந்திராணியைக் காணுமையால் விண்ணுலகம் புகுந்து பொருது சயந்தனேயும் ஏனையதேவர் களேயும் சிறைப்படுத்தினுன்; சுவர்க்கத்தைத் தீயிட்டுக் கொளுத்தினுன். இவற்றையெல்லாம் கண்ட வியாழபகவான் 'முருகப்பெருமானே! அசுரர் களை வென்று, தேவர்களைச் சிறைமீட்டு அவரவர்களுக்கு உரிய பதவிகளை வழங்கிக் காத்தருளவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார். முருகப் பெருமானும் அவ்வாறே காப்போம் என்று திருவாய்மலர்ந்தருளினுர்.

**வீரவாகுதேவர் தூது:**

முருகக்கடவுள் 'அசுரர்களாயினும் இறைவனுக்குப் புதல்வர்கள் தாமே; அநீதிசெய்வதால் நீதிநோக்கிக் கொல்லவேண்டியிருக்கின்றது; ஆயினும் யாரையாவது தூது அனுப்பித் திருந்தக்கூடுமானுல் திருத்தியாட் கொள்வோம்; இல்லையானுல் அவர்கள் விதிப்படியாகட்டும்' என எண்ணி வீரவாகுதேவரை அழைத்து, நீ வீரமகேந்திரஞ்சென்று சூரபன்மனைக்கண்டு 'தருமத்தை எண்ணிப்பார்த்துச் சயந்தனேயும் தேவர்களேயும் சிறை விடு வித்துக் குன்ருச்செல்வத்துடன் வாழ்க' என்று சொல்லுக; அவன் மறுத் தால் 'அசுரக்கிளையோடும் உங்கள் அனைவரையும் வேலுக்கு இரையாக்கச் செவ்வேள் எழுந்தருளுவார் என்று தெரிவித்து வருக' என ஆணைதந்தனர்.

வீரவாகுதேவர் முருகன் ஆணையைச் சிரமேற்ருங்கி, கந்தமாதன பர்வதத்தை அடைந்து அவருடைய திருவடியைத் தியானித்தவராய் விசுவரூபம் எடுத்தார். அதனைக்கண்ட அசுரர்கள் கிரவுஞ்சமலையின் மாயவுரு என்று வியந்தனர். சுரர்களும் முனிவர்களும் போற்றிப் புகழ்ந் தனர். வீரவாகுதேவர் இத்துணைப்பெரிய உருவோடு செல்லின் உயிர்கள் யாவும் வீணுக அழியும்; செல்லுதற்கேற்ற பேருருவோடு சென்ருற்போதும் எனத் திருவுளங்கொண்டு தக்கவுருவைத்தாங்கி வீரமகேந்திரம் நோக்கி

வானவீதியில் தாவிச்சென்ருர்; இலங்கையையணுகினர். அதனைக் காப்பவன் யாளிமுகன் என்னும் அசுரன். அவன் சூரபன்மனைக்காணப் போயிருந் தமையால் அவன்மகன் அதிவீரன் காவல் காத்தான். அவனது சேனைத் தலைவனுகிய வீரசிங்கன் வீரவாகுதேவரோடு போர்செய்தபோது வாளால் அவன் கைகளைவெட்டி முடியையும் அறுத்துக் கடலில் வீசினர். இலங்கை யிற் குதித்தார். இலங்கை கடலுள் ஆழ்ந்தது. அதனைக் காவல்செய்திருந்த யாளிமுகன் பிள்ளையாகிய அதிவீரன் படைசூழப் போருக்கு வந்தான். வீரவாகுதேவர் அதிவீரனுடைய கை கால் மார்பு முடி இவைகளைத் தனித்தனியாக வெட்டி வீழ்த்தினர். அங்கிருந்தும் புறப்பட்டு வீரமகேந்திர புரியின் வடக்கு வாயிலை அடைந்தார்.

வடக்கு வாயிலில் கோரன் அதிகோரன் என்னும் வீரரிருவர் ஆருயிரம் வெள்ளம் படைகளுடன் காவல்செய்து வந்தார்கள். இத்தனை பேரையும் கொன்ருல் நேரம் வீணுகும் என்றெண்ணிய வீரவாகுதேவர் கிழக்கு வாயிலையும் தெற்குவாயிலையும் முறையே அடைந்தார். தெற்கு வாயிலில் காவல்செய்த கயமுகன் இவரை அதட்டியும் அவமதித்தும்பேசி ஆர்ப்பரித்தான். பலவகை ஆயுதங்களாலும் கைகளாலும் போர்செய்தான். வீரவாகுதேவர் வாட்படையால் அவனுடைய மூவாயிரம் கைகளையும் வெட்டி வீழ்த்தியும், அவன் தோள்களால் மற்போருக்குவர அவன் மார்பில் ஓர் உதைகொடுத்துக் கொன்ருர். பகைவர் யாரும் புகமுடியாத இந்நக ரிலே அசுரர்களாகிய நம்மவர்களே இப்படி வீணிற்போரிடுகின்ருர்களே என்று மயங்கிய அசுரவெள்ளம் திரண்டுவந்தது. அதனைக்கண்ட வீரவாகு தேவர் முருகனுணையை முடிக்கத்திருவுளங்கொண்டு அணுவடிவெடுத்து, கோபுரத்தின்மீதிருந்து வீரமகேந்திரத்தின் சிறப்புக்களைக்கண்டார். நகருக் குள் புகுந்தார்; சூரபன்மன் குமாரர்களுடைய அரண்மனைகளையும், சிறைக் கூடத்தையும், அதில் சயந்தனும் தேவர்களும் துன்புறுதலையும் கண்டார். சயந்தன் பக்கலிலேசென்று அவனுக்குத் தேறுதல்கூறி, சூரபன்மனுடைய அரசாட்சி மண்டபத்தில் புகுந்தார். யாவரும் காணும்படித் தன் உண்மை வடிவைக் காட்டினர். ‘சிவகுமாரனுகிய சண்முகப்பெருமான் தூதன்’ என்று தெரிவித்துக்கொண்டார். சூரன் தனக்கு இருக்கை கொடாது இருக்க, ‘அறுமுகப்பெருமான் தூதனுகிய அடியேன் இவன்முன் நின்று பேசுதல் எம் தலைவன் பெருமைக்கு ஏலாது; அவன்பக்கலிலிருப்பதும் பாவியைத் தீண்டிய பாவத்தைப் பயத்தலின் ஆகாது’ என்று எண்ணி னர். முருகன்திருவடிகளைத் தியானித்தார். முருகன் அருளால் இரத்தின

சிம்மாசனம் ஒன்று வானவழியாக வந்தது. சூரபன்மனுக்கு முன்னிலையில் அதனையிட்டு அமர்ந்தார். சூரன் வீரவாகுதேவரைக் கண்டு அளவற்ற சீற்றங்கொண்டான். 'பித்தா! உன்னை வாளால் வெட்டிவிடுவேன்; உன் செயலை அறிந்துகொள்ளவே உனக்கு இப்போது உயிர்ப்பிச்சை கொடுத்தேன்; வந்தகாரியம் என்ன? சொல்' என்றான்.

வீரவாகுதேவர், தன் பெருமையையும், தலைவனாகிய முருகனது அளவிலாற்றலையும், தம்படையின் அளவு ஆற்றல் தவவலிமை இறைவன் கருணை முதலியவற்றையும், தாரகனைக் கொன்ற வரலாற்றையும், தாம் அறுமுகப்பெருமான் தூதாகவந்திருப்பதையும் உறுதிதோன்ற முறையாகத் தெரிவித்தார். சூரபன்மன் 'அப்படியா! அறுமுகக்கடவுள் என்னிடம் தூது அனுப்பக் காரணம் என்ன?' என்று வினவினான். வீரவாகுதேவர் வானுலகை எரித்தது முதல் தேவரைச் சிறையிட்டதுவரையுள்ள அநீதிகளை அறுமுகப்பெருமான் திருவுளங்கொண்டு, தேவர் குறைநீக்க பூதப்படைகளோடு திருச்செந்தில் வந்திருக்கிறார்; உன்னையும் குலத்தோடு நாளையே வந்தழிப்பார்; ஆயினும் உன்மீதுபிறந்த கருணையால் என்னைத்தூதனுப்பினார்; இந்த அளவற்ற செல்வங்களோடு நீ நெடுநாள்வாழ விரும்புவாயாயின் தேவர்களைச் சிறைவிடுக; இல்லையானால் இறப்பது உறுதி; இதுதான் என் தூதுரை' என்றார்.

சூரபன்மன் இந்த வார்த்தைகளைக்கேட்டுக் கண்களில் தீப்பொறி பறக்க, வாய்புகையக் கனன்று 'தேவர்களைச் சிறைவிடமாட்டேன்; குழந்தைப் பேச்சைக்கொண்டு நீயும் ஒரு தூதனாக வந்தாயே! நீ ஒரு முட்டாள்' என்று இகழ்ந்துரைத்தான். வீரவாகுதேவர் முருகன் ஆற்றலையெடுத்து மீண்டும் கூறிச் செந்திலுக்குப் புறப்பட்டார். இரத்தின சிங்காதனமும் அவருடன் மறைந்தது. வீரவாகுதேவர் சகத்திர வீரர்கள், சதவாகு, சதமுகன், வச்சிரவாகு முதலியவர்களைக் கொன்று காவலர்களையும் வதைத்து, அத்தாணி மண்டபம் உய்யானவனம் முதலியவற்றை யழித்து, இலங்கை திரும்பினார். அங்கே யாளிமுகன் எதிர்க்க அவனையும் வெட்டிக்கொன்று, திருச்செந்தில் வந்து செவ்வேள் திருவடியைப்போற்றி நிகழ்ச்சிகளைத் தெரிவித்துக்கொண்டார்.

**சூரன் ஆலோசனை :**

சூரபன்மன் வச்சிரவாகு அழிந்ததை ஒற்றர்கள் மூலம் அறிந்து மிக வருந்தினான். துன்முகன் என்னும் அமைச்சன் தேற்றத் தேறி, அழிந்த




மூலத்தானத்துமுதல்வன்.



ஆறுமாமுக அண்ணல்.

தன்னகரை மீட்டும் அழகுபடுத்தினுன். அத்தாணி மண்டபத்தில் அரசு வீற்றிருந்தான். அப்போது பகன், மயூரன் என்ற ஒற்றர்கள்வந்து முருக னுடைய ஆற்றலேயும், சேனைப்பெருக்கத்தையும், துணைவர் ஆற்றலேயும், போருக்குவரும் செய்தியையும் தெரிவித்தார்கள். சூரபன்மன் தன் மந்திரி களோடும், தம்பியரோடும், தனயரோடும்கூடி ஆலோசித்தான். அனைவரும் தம் ஆற்றலேயே பெரிதாகச்சொல்லிப் போருக்குத்தூண்டி நியாயத்தை மறைத்தனர். சிங்கமுகனுகிய தம்பிமட்டும் 'அவரைப் பாலன் என்று இகழாதே; அவர் சீலம் இல்லாதவர்க்கு உணரவொண்ணுச் சிற்பரர்; அவர் அருவுமாகுவர்; உருவுமாகுவர்; உருவமில்லதோர் தன்மையும் ஆகுவர்; ஊழின் கருமமாகுவர்; அவர் ஆடலே யாரால் மதிக்கமுடியும்; ஆதலால் அவர் சொல்லியனுப்பியவண்ணம் தேவர்களைவிட்டுப் பலயுகம் வாழ்க' என்று வேண்டிக்கொண்டான். சூரன் அவனையிகழ்ந்து 'நீ உன் நகருக்குப்போ; நான் போருக்குச்சென்று அறுமுகச்சிறுவனை வென்று மீளுவேன்' என்ருன். சிங்கமுகன், முட்டாளுக்குப் புத்திசொல்பவன் முட்டாள்; கெடுமதி கண்தோன்ருது; விதிவழி மதி என்று தனக்குள் எண்ணி, 'என்பிழையைப் பொறுத்துக்கொள்; உன் மனவுறுதி அறியவே இவ்வாறு கூறினேன்; இப்போதே போருக்குச்சென்று வென்றுவருவேன் விடைகொடு' என்ருன். சூரபன்மன் மகிழ்ந்து 'உன்பெருமை எனக்குத் தெரியாதா; சிவகுமாரன் இங்குவந்தால் அழைக்கிறேன்; அப்போது உன் சேனைகளோடுவந்து வெற்றியைத் தேடித்தா; போய்ச் சுகமே இரு' என்று அவனை அனுப்பிவிட்டு ஏனையோரையும் தத்தம் நகரங்களுக்கு அனுப்பினுன்.

## முருகன் எழுந்தருளல்:

திருச்செந்தூரில் எழுந்தருளியிருந்த முருகக்கடவுள், சூரியோதய மானதும் திருமால் முதலிய அனைவரும் கேட்க, வீரவாகுதேவரைநோக்கி, 'இப்போதே நாம் வீரமகேந்திரபுரிக்குச் செல்லுதல்வேண்டும்; தேரைக் கொண்டுவருக' எனப் பணித்தனர். வீரவாகுதேவர் 'மனவேகம்' என் னும் தேரைக்கொண்டுவந்து திருமுன் நிறுத்தினுர். முருகப்பெருமான், ஆரோகணித்துக்கொண்டு, பூதப்படைகள் புடைசூழ விண்வழியாகக் கடலைத்தாண்டி, வீரமகேந்திரபுரிக்கு அருகில் வந்தருளினுர். நான்முகன் முதலிய தேவர்கள் செவ்வேட்பெருமான் திருமுன்வந்து 'அசுரர்கள் இருக்கும் நகரிலேயேசென்று தங்குதல் அத்துணைச்சிறந்ததன்று; அதற்கு அணுமையானதும் அடுத்துள்ளதுமாகிய இங்கேயே பாசறையொன்றைச்

சமைத்துத் தங்கலாம்' எனத் தெரிவித்துக்கொண்டனர். முருகனிடம் ஆணைபெற்றுத் தேவத்தச்சனைக்கொண்டு ஏமகூடம் என்ற பெயருடன் பாசறையொன்றை நிருமித்து அதில் எழுந்தருளும்வண்ணம் வேண்டிக் கொண்டனர். முருகனும் அவ்வாறே எழுந்தருளியிருந்தார்.

**பானுகோபன் யுத்தம் :**

நாரதர் சூரபன்மனிடம் சென்று முருகன் பூதவெள்ளம் புடைசூழ ஏமகூடத்தில் தங்கியிருப்பதைத் தெரிவித்தார். சூரபன்மன் சினங்கொண்டு 'முனிவரே! இந்நகர்க்குவர திருமால்முதலிய தேவர்களே அஞ்சுவர்; அப்படியிருக்கச் சிவகுமாரனு என்னோடு சண்டையிட வல்லவன். நீரே பாரும்; நமது பானுகோபனையனுப்பி அவன் சேனையையும் அழித்து, அவனையும் வென்றுவரச் செய்கிறேன்' என்று வீரமொழிவிளம்பினன். முனிவர் 'அரசர் பெரும! அப்படியேசெய்; உங்களுக்கு வெற்றியுண்டாகவேண்டியே தவம் செய்யப்போகிறேன்' என்று சொல்லிப் புன்முறுவல் பூத்துக்கொண்டே புறப்பட்டார்.

சூரபன்மன் கோரன், உற்கோரன் ஆகிய ஒற்றர்களையழைத்து இக் கணமே சென்று அவர்களுக்கு வழிவிட்ட வருணனைக் கொண்டுவாருங்கள் எனப் பணித்தான். வருணனும் வந்தான். சூரன் நீ வழிவிடலாமா? என்று வினவினன். 'பூதவெள்ளங்களைத்தடுக்க அடியேனால் முடியவில்லை; அரசே! பொறுத்தருள்க' என்று மன்றாடினன் வருணன். உடனே சூரபன்மன் தன்மகன் பானுகோபனைப் போருக்கு அனுப்பினன்.

நாரதர் முருகனிடம் சென்று திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் 'பானுகோபன் போருக்குப்புறப்பட்டு வந்துவிட்டான்; அவனைத் தாங்களும், சிவபெருமானுமன்றி வேறு யாராலும் வெல்லமுடியாது' என்று தெரிவித்தனர். முருகன் வீரவாகுதேவரை விளித்துப் படைகளோடு போருக்குச்செல்லப் பணித்தார். வீரமகேந்திரபுரியின் வடக்குவாயில் வழியாகவந்த அசுரசேனைகள் பூதசேனைகளைப்பார்த்து, இவர்கள் தோற்றோடிய தேவர்கள் அல்லர் மிகவலியர்போலும் என்றெண்ணிக் கலந்து பொருதனர். பூதர்கள்புரிந்த போருக்கு ஆற்றாது அவுணர்கள் அழிந்தனர். அதுகண்ட அனலி எனும் அசுரப்படைத்தலைவன் வந்தெதிர்த்தான். சிங்கன் என்ற பூதப்படைத்தலைவன் அவனோடு போர்செய்து அவனைக்கொன்றான். இதுகண்ட சண்டனுக்கும், சிங்கன் என்னும் பூதப்படைத்தலைவனுக்கும்

போர் நடந்தது. சண்டன் அழிந்தான். பின்னர் மாயனுக்கும் நீலனுக்கும், அசமுகனுக்கும் மதுவுக்கும் போர் நடந்தது. அசுரப்படைத் தலைவர்களாகிய மாயனும், அசமுகனும் மடிந்தனர். பானுகோபன் தன் படை அழிந்ததையும் படைத்தலைவர்களில் பலர் இறந்ததையும் பார்த்து, கோபத்தீ கனற்ற பூதவெள்ளங்களின்மேல் ஆயிரங்கணைகளைத் தூண்டினான். அவர்கள் அனைவரும் அழிந்தனர். எஞ்சிய சிலர் வீரவாகுதேவரிடம் சென்று விண்ணப்பித்தனர். இதுகண்ட உக்கிரன் என்னும் பூதத்தலைவன் பானுகோபனை எதிர்த்தான். பானுகோபன் பல ஆயிரம் பாணங்களை அவர்மேல் ஏவியும் அவை நுனிமழுங்கின. பின்னர் எழுப்படை ஏவினான். உக்கிரன் தண்டால் எற்றி அதனை ஒடித்தார்; பானுகோபன் குதிரைகளைக்கொன்று, தேரையெடுத்து வானில் வீசினார். பானுகோபன் தேரிலிருந்து குதித்து உக்கிரனைக் கையாற்பற்றி எழுகடலுக்கும் அப்பால் வீசினான்; மீண்டும் சூலத்தை ஏவினான். சூலம்தாக்கி உக்கிரன் மூர்ச்சையானார். பானுகோபன் பிறகு தண்டியோடும், பிங்கியோடும், இலக்கத்தெண்மரோடும், வீரகேசரி, வீரமார்த்தாண்டர், வீரராக்கதர், வீரராந்தகர் முதலானவர்களோடும் சண்டையிட்டு அவர்களில் சிலரையழித்தும் புறமுதுகிட்டோடச்செய்தும் மயங்கி விழச்செய்தும் வென்றான்.

பின்பு வீரவாகுதேவர் வந்து எதிர்த்தார். இருவரும் கணைமழைகளைப் பொழிந்தனர். இருபக்கத்துச் சேனைகளுள் அழிந்தன பல. சிதறின சில. இந்நிலையில் பானுகோபன் வீரவாகுதேவர் விடுத்தகணைகளை யறுத்து நூறுகணைகளையேவி அவர் கைவில்லையறுத்து ஆரவாரித்தான். வீரவாகு தேவரும் வேறொருவில்லை நாணேற்றி ஆயிரம் கணைகளை எய்து அவன் வில்லைமுறித்தார். பானுகோபன் வேறுவில்லெடுத்து வீரவாகுதேவர் மார்பில் எய்தான். வீரவாகுதேவர் அவன் முடியைத்தள்ளினார்; அவன் கவசத்தையும் உடைத்தார். பானுகோபன் ஆயிரம் கணைகளை வீரவாகுநெற்றியில் அழுத்தினான். வீரவாகுதேவர் அவற்றைப்பறித்து வீசிவிட்டு, பானுகோபனுடைய முகம், தோள், மார்பு இவற்றில் பதிய, பல பாணங்களையேவினார். பானுகோபன் இரத்தம்பெருக வலிகுன்றி நின்றான். இதனையறிந்த அவுணப் படைத்தலைவர்கள் வீரவாகுதேவரை வளைத்துக்கொண்டு பொருதழிந்தனர். மயக்கந்தெளிந்த பானுகோபன் தன்படைகள் பிணமாகக் கிடத்தலையறிந்து வீரவாகுதேவரை எதிர்த்து, எழுநூறு கணைகளை ஏவி, அவர் மார்பைத் துளைத்தான். வீரவாகுதேவர் சிறிது வருந்திப் பதினான்கு பாணங்களையேவி அவன்வில்லையும், ஆயிரம் பாணங்களால் அவன் தேரையும் குதிரைகளையும்

அழித்தார்; மார்பையும் துளைத்தார்; அம்பறுத்துணியையும் அறுத்தார். பானுகோபன் இவரை வில்லால் வெல்லமுடியாதெனக்கருதி வானவெளியிற்சென்று மோகாஸ்திரத்தைப் பிரயோகித்தான். வீரவாகுதேவர் உட்பட அனைவரும் மயங்கிவீழ்ந்தனர். முருகக்கடவுள் இருந்த நிலையிலே இதனை உணர்ந்து அமோகப்படையைப் படைத்து ஏவினர். அது வந்ததும் அனைவரும் தெளிந்தெழுந்தனர். பானுகோபன் அமோகப்படை வந்ததையும், தன்படை வலிகுன்றியதையும், வீரவாகுதேவர் தன்மீது ஏவ சிவப்படைக் கலத்தைச் செலுத்தியதையும் உணர்ந்து இனி இங்கிருந்தால் நாம்அழிவது உறுதி; நம்மிடம் சிவப்படைக்கலம் இன்று இல்லை; ஊருக்கு ஓடுவோம் என்று விண்ணில் மறைந்து ஓடிவிட்டான். பூதப்படைகள் ஆரவாரம் செய்தன. பானுகோபன் ஒளி குன்றி குரல் கம்மி, துக்கம்தொண்டையை யடைக்கத் தனியாகக் கவலையுடனிருந்தான். போர் நிகழ்ச்சியை ஒற்றர்கள்மூலம் அறிந்த சூரபன்மன் பொழுதுவிடியட்டும் நாமேபோருக்குச் செல்வோம் எனத் திட்டமிட்டவனாக உறக்கமின்றி இரவைக் கழித்தான்.

**சூரபன்மன் யுத்தம்:**

போர்தொடங்கிய இரண்டாம் நாள்; பொழுது விடிந்தது. சூரனே போர்க்கோலம்கொண்டு புறப்பட்டான். அதிசூரனும், அசுரேந்திரனும் படைத்தலைவர்கள் ஆயினர். சூரபன்மன் போருக்குவருதலை அறிந்து இந்திரன் முருகப்பெருமானிடம் விண்ணப்பித்துக்கொண்டான். வாயுதேவனால் செலுத்தப்பெறும். தேரின்மேல் முருகன் ஏறிப் பூதவெள்ளம் சூழப் போருக்குப் புறப்பட்டார்; வந்தடைந்தார். இருதிறத்துச் சேனைகளும் போர்புரிந்தன. படைத்தலைவர்களுள் அதிசூரனுக்கும் உக்கிரன் என்னும் பூதப்படைத்தலைவருக்கும் சண்டைமூண்டது. அதிசூரன்விட்ட தெய்வப் படைகளையெல்லாம் உக்கிரன்பற்றி விழுங்கினர். அதிசூரன் சிவப்படையை ஏவினன். உக்கிரன் நிராயுதபாணியாகப் பஞ்சாட்சரஜபம் செய்துகொண்டு சிவத்தியானத்திலிருந்தார். வந்த படைக்கலம் உக்கிரன்மீது பாயாமல் சிவபெருமான் பக்கல் சென்றுவிட்டது. அதிசூரன் தண்டாயுதத்தையெடுத்து உக்கிரன்தோளில் அடித்தான். உக்கிரன் அதனையே பிடுங்கிக்கொண்டு அதிசூரன் மார்பில் அடித்துக்கொன்றார்.

பின்னர் அசுரேந்திரனுக்கும் கனகனுக்கும் பெரும்போர் நடந்தது. அசுரேந்திரன் ஆயிரம் பாணங்களால் கனகரை மயங்கச்செய்து, உன்மத்தரோடு பொருதான். அவரையும் பாணங்களால் துளைத்தான். உன்மத்தர்



சிவகிரி முருகன் திருவுலாக் கொள்ள
நவந்தரு மேனியில் நண்ணிடுங் கோலம்.



செவ்வேள் எழுந்தருள் சிவகிரிமலை.

உதிரம் பெருக மயங்கினர். பின்பு மந்தர், சிங்கர், தண்டகர், சோமுகர், விசயர் என்பவர்களோடு முறையே பொருது தோற்கடித்தான். இப்படி பூதப்படைகளும் தலைவர்களும் மயங்கிவீழ்வதைக்கண்ட வீரவாகுதேவர் அசுரேந்திரனோடு எதிர்த்தார். வாட்படையால் அவனுடைய கையையும் சிரத்தையும் வெட்டிவீழ்த்தினர்.

தன் தம்பிகுமாரர்கள் இருவரும் இறந்ததையும் படைகள் சிதறி யோடுவதையும் கண்ட சூரபன்மன் இலக்கம் வீரர்களோடு எதிர்த்து ஆயிர மாயிரம் பாணங்களை ஏவி அனைவரையும் இளைத்துவிழச் செய்தான். பின்னர் வந்து எதிர்த்த வீரமார்த்தாண்டர், வீரராக்கதர், வீரமகேந்திரர், வீரதீரர், வீரமாமகேச்சுரர், வீரகேசரி முதலிய எட்டு வீரர்களையும் உணர்வழிந்து விழச்செய்தான். இதனையறிந்த வீரவாகுதேவர் வந்து எதிர்த்தார். சூரபன்மன் வீரமகேந்திரத்தை முன்பு அழித்த தூதன் என்றறிந்தும் சினமிக்கு ஆயிர கோடி அம்புகளை அவர்மீது ஏவி ஆர்வாரித்தான். அவர் அவைகளை விலக்கி விட்டு, சூரன் நெற்றியைக் குறிவைத்து நூறு அம்புகளை அனுப்பினர். அவை வயிரமலையில் பட்ட ஊசிபோல நுனிமழுங்கி விழுந்தன. இருவரும் தெய்வப்படைகளை ஏவிக்கொண்டனர். பின்னர் வீரவாகுதேவர் மாயப் படை அசுரப்படைகளை ஏவினர். அவையும் பயனற்றுப்போயின. பின் சிவப்படைக்கலத்தைச் செலுத்தினர். சூரபன்மனும் செலுத்தினன். இரு படைகளும் தம்முட்பொருது ஒன்றையொன்று வெல்லமாட்டாமையால் திரும்பவும் செலுத்தியவர்களிடமே சென்று சேர்ந்தன. பின் இருவரும் ஒருவர்மீது ஒருவர் தண்டாயுதத்தைச் செலுத்தினர். சூரபன்மன் தண்டம் வீரவாகுதேவர் தண்டத்தை முறித்து வீழ்த்தி வீரவாகுதேவர் மார்பிற் சென்று தாக்கிப்பிளந்தது. வீரவாகுதேவர் குருதி கொப்புளிக்க மயங்கித் தேர்மீது விழுந்தார். விசாலியென்ற வீரவாகுதேவருடைய தேர்ப்பாகன் அவரைத் தெளிவிக்கத் தேரையோட்டிக்கொண்டு ஒருபுடைசென்றான். சூரபன்மன் வீரவாகுதேவர் அழிந்தார் என்ற உறுதியுடன் பூதகணங்கள்மீது அம்புகளைச்சொரிந்து அழித்தான். அவர்களுள் சிலர் அஞ்சியோடினர்.

இதனைத் திருவுளங்கொண்ட சண்முகப்பெருமான் தேர்ப்பாகனை நோக்கிச் சூரபன்மன்மீது தேரைச் செலுத்துக என்று பணித்தார். தேர் சூரபன்மன் முன்வந்து நின்றது. சூரன் சண்முகப்பெருமானுடைய திரு வுருவத்தைக் கண்ணாரக்கண்டான். வீரமொழி விளம்பினன். முருகனும் புன்சிரிப்பு சிரித்துக்கொண்டே 'மதியிலாய்! அறிவுடை முதியர் என்றும்,

ஆண்டிளேயோர்களென்றும், சிறியவர் பெரியர் என்றும், திருத்தகுவளத்தர் என்றும், வறியவர் என்றும் வீரர் மதிக்கிலர்; யாவரேனும் விறல்வலி படைத்து நேரின் வெஞ்சமர் விளேப்பர்; உன் ஆற்றலே இப்போதே அழிப்போம்' என்று திருவாய்மலர்ந்தார்.

இவற்றைச் செவிமடுத்த சூரபன்மன் வில்லேவளேத்துப் பல்லாயிரம் பாணங்களே ஏவினன். எதிராக முருகனும் ஏவினர். ஒன்ருேடொன்று மோதி அம்புகள் மடிந்தன. - சூரன்மேற்பட்ட அம்புகளும் நுனிமழுங்கி விழுந்தன. சூரன் முருகன்தோள்மீது ஏழு கணேகளே ஏவி ஆரவாரித்தான். முருகன் பத்துக் கணேகளால் அவன் வில்லேயும், ஆயிரம் கணேகளால் அவன் தேரையும் அவனேப் பின்தொடர்ந்துவந்த பதினன்கு லட்சம் பாது காப்புத் தேர்களேயும் அழித்தார். சூரன் முத்தலேச் சூலத்தை முருகன்மீது ஏவினன். அதனே நான்கு கணேகளால் மாற்றி ஏழுகணேகளே சூரன்மீது ஏவி அவன் அணிகளே அகற்றினர். சூரபன்மன் வலியொடுங்கி நின்ருன். இதனே அறிந்த அசுரப்படைத் தலேவர்களும் படைகளும் முருகனே வளேத்துக்கொண்டு பொருதன. முருகன் சக்கரப்படையை ஏவினர். அது அனேவரையும் அழித்து மீட்டும் திருக்கரத்தில் வந்துசேர்ந்தது.

சூரன் தன்படைகளேக் காணுது, இப்பாலகன் எப்படி அழித்தான் என்று வியந்து கோதித்து நான்முகனின்படையை முருகக்கடவுள்மீது ஏவினன். முருகன் கரத்திருந்த வேற்படை அதனே விழுங்கிற்று. உடனே திருமாலின்படையை ஏவினன், அதனேயும் வேல் விழுங்கியது. சிவப் படையை ஏவினன். முருகன் அதனேத் தம் தந்தையின் படையென்று திருக்கரத்தால் ஏற்றுக்கொண்டார். தன் தெய்வப்படைகள் பயனற்றுப் போனதைக்கண்ட சூரன் 'இவன் சிவகுமாரன் என்பதைக் காட்டினன்; என்னேடு பொருதற்கு இவனேயன்றி வீரர் வேறு எவரும் இல்லே' என்று வியந்து மௌனமாக நின்றுகொண்டிருந்தான்.

முருகக்கடவுள் அவனேநோக்கி, 'சூரபன்மனே! நீ அளவில்காலம் அமரரைச் சிறையிலிட்டு வதைத்தாய்; நாம் அனுப்பிய தூதன் சொல்லேக் கேட்கவில்லே. போருக்கு வந்தோம். தாரகனே அழித்ததுபோல இன்றே உன்னேயும் அழிப்போம். உன்னுடைய இலட்சம் வெள்ளம் சேனேகளும் அழிந்ததைக் கண்டாய். வில்லின் ஆற்றலேயும் தெய்வப்படைகளின் வலிமையையும் கண்டாய். நிராயுதபாணியான உன்னேக் கொல்வது தகாது.

இப்போதாவது கேள். தேவர்களை விட்டுவிடு. உன் எண்ணம் என்ன?' என்று வினவினர். சூரன் 'இவன் சிறுபிள்ளைத்தனத்தால் நம் ஆற்றலை அறியாமல் இப்படிப் பேசுகிறான். நாம் இவனை வெல்லமுடியாது. இவன் நம்மை அழிக்கவும் முடியாது. இன்று சென்று நாளை பெரும்படையுடன் வந்து வெல்ல முயற்சிக்கலாம். இது வீரத்திற்கும் இழுக்கன்று' என்று மாயத்தால் மறைந்து அரண்மனை சென்றான். பூதப்படைத் தலைவர்கள் வீரமகேந்திரபுரியை அழித்தனர்; சூரன் போரில் தோற்று ஓடியதைக் கண்டு ஆரவாரித்தனர்.

அரண்மனை சென்ற சூரபன்மன் பதுமகோமளையின் கோயிலை அடைந்து, யாரோடும் பேசாமல் மறுநாட்போருக்குரிய திட்டங்களிட்டுக் கொண்டிருந்தான். சூரபன்மன் தோற்றுவந்ததை ஒற்றர்வாயிலாக அறிந்த பானுகோபன் தந்தையிடம் சென்று, 'தந்தையே! நான் நாளை போருக்குப் போகிறேன். ஆறுமுகனை வெல்வேன். வெல்லேனாயின் திரும்பிவரமாட்டேன். அரசாட்சியையும் ஏற்கமாட்டேன். இது சத்தியம்' என்றான். சூரபன்மன் பானுகோபனைப் போருக்கு அனுப்பிவிட்டு, பண்டுபோல் இன்புற்றிருந்தான்.

**பானுகோபன் யுத்தம் :**

பானுகோபன் அவுணத்தச்சனை அழைத்து அழிந்தநகரைச் சீர்படுத்துக என்றும், மகாகாயனை வடக்குவாயிலைப் பாதுகாக்க என்றும் பணித்தான். மறுநாள் பொழுது புலர்ந்தது. பானுகோபன் நாட்கடன்களை முடித்துக்கொண்டு நீராடி, தன் பாட்டியாகிய மாயையை நினைத்தான். அவள் வந்தாள். அவளிடம் தனக்கு ஏற்பட்ட தோல்விகளைச் சொல்லி வருந்தினான். ஒரு மாயப்படைக்கலந்தந்து இன்றைக்காவது வெற்றியோடு வரத் துணைசெய் என்று வேண்டிக்கொண்டான். அவளும் அவன் செய்த அநீதிகளை எடுத்து இடித்துக்கூறிப் படைக்கலத்தையுந்தந்து இன்றைய வெற்றி உன்னதே என்று ஆசிகூறி மறைந்தாள். பானுகோபன் போர்க்கோலங்கொண்டு தான் போருக்குப் புறப்பட்டு வருவதை வீரவாகுதேவரிடம் தெரிவிக்கும்படித் தூதனுப்பினான். வீரவாகுதேவரும் முருகன் ஆணைபெற்றுப் போர்க்களம் அடைந்தார். பூதப்படைகளும் அவுணப்படைகளும் பொருதன. பானுகோபனோடு வீரவாகுதேவர் பொருதார். பானுகோபன் பிரமன்படை, திருமால்படை இவற்றை ஏவினான், வீரவாகுதேவர் நந்திப்படை, வீரபத்திரப்படை இவைகளை ஏவி அவற்றை அழித்தார்,

பானுகோபன் சிவப்படையை ஏவினன், வீரவாகுதேவரும் அதனை ஏவினர். இரண்டு சிவப்படைகளும் உருத்திர கணங்கள், யானைமுகத்தர் சிங்க முகத்தர் காளிகள் இவர்களை உண்டாக்கிக்கொண்டும், நெருப்பைக் கக்கிக் கொண்டும் தம்முட்பொருதன; ஏவியவர்களிடமே திரும்பிச்சென்றன. பானுகோபன் தன்படை மீண்டதையும், சேனைகள் அழிந்துவிட்டதையும் கண்டு, இங்கிருப்பின் நாமும் அழிவது உறுதியென்று மாயத்தால் விண்ணில் மறைந்தான். அதனைக்கண்ட தேவர்கள் இன்றும் பானுகோபன் தோற்றோடினன் என்று ஆரவாரம் செய்தார்கள். சூரியனும் அத்தமித்தான். பானுகோபன் இன்றும் மாயத்தால் மறைந்தான்; இனி நாம் செய்வதென்ன என்று வீரவாகுதேவர் தன் துணைவர்களுடன் ஆலோசித்து, அவர்கள் தெரிவித்துக்கொண்டவண்ணம் பாசறைக்குச்சென்று முருகப் பெருமானைத் தரிசிப்போம் என எண்ணினர்.

பானுகோபன் 'இன்றும் தோற்று ஓடுவது பெரிய அவமானம், முதுகுகாட்டி வந்தவனை மனைவி, தாய், தம்பி ஒருவரும் மதியார்கள். ஆதலால் சூழ்ச்சியாலாவது வீரவாகுவை நாம் வெல்லுதல்வேண்டும்' என்று மாயப்படையை ஏவினன். மாயப்படை பூமியை வந்தடைந்து அனைவரையும் மயக்கியது; கட்டி எடுத்துக்கொண்டுபோய், புறவாழிச் சமுத்திரத்தில் அமுக்கித் தானும் அங்கேயே காத்துக்கொண்டிருந்தது. பானுகோபன் தன் சூழ்ச்சி பலித்ததை எண்ணி மகிழ்ந்து அரண்மனைசென்று தன் வீரத்தைத் தந்தையிடம் சொல்லி ஆசியும் பாராட்டும்பெற்று, மறுநாள் முருகப்பிரானோடு சண்டைக்குப்போகவும் அனுமதி பெற்றுக்கொண்டு தன்கோயிலையடைந்து மட்டற்ற மகிழ்ச்சியில் திளைத்திருந்தான்.

மாயப்படையால் மயங்கித் தன் தம்பியரும், பூதப்படைகளும் புறவாழிக்கடலிலிருப்பதை நாரதர் சொல்லக்கேட்ட முருகப்பெருமான், தன் திருக்கரத்திலுள்ள வேற்படையைப்பார்த்து 'நீ சென்று அவர்களை விடுவித்து விரைவில் வருக' என ஆணைதந்து அனுப்பினர். அது அவ்வாறே சென்று அனைவரையும் மீட்டுவந்து முருகன் திருக்கரத்தில் அமர்ந்தது.

**இரணியன் யுத்தம் :**

வேற்படையைப் பின்தொடர்ந்து வீரமகேந்திரபுரியை அடைந்த வீரவாகுதேவர்க்குச் சினம்பொங்கியது. 'வஞ்சகப்போரால் வென்ற பானுகோபனைக் கொன்றல்லது முருகப்பெருமான் திருவடியைத் தரிசிக்கமாட்டேன். முடியாதாயின் நெருப்பில் வீழ்ந்திறப்பேன்' எனச் சபதம்செய்து

துணைவர்களுடனும் சேனைகளுடனும் நகரையழிக்க உறுதிகொண்டார், மேற்குவாயிலைபடைந்தனர். அங்கு புலிமுகன் காவல்செய்தான். அவனுக்கும் சிங்கன் என்ற பூதத்தலைவருக்கும் போர்மூண்டது. இருவரும் சூலத்தாற் பொருதனர்; மல்யுத்தம் செய்தனர். இறுதியில் சிங்கர் அவனை உதைத்துக் கொன்றார். பூதகணங்கள் வீரமகேந்திரபுரியை அழித்தன. ஒற்றர்கள், நகர் அக்கினியால் அழிவதையும், நாரதர் வாயிலாக அறிந்த முருகன் வேற்படையேவி வீரர்களை மீட்டதையும் தெரிவித்தனர். சூரன் ஏழுமேகங்களையும் அழைத்துத் தீயையணைக்க ஆணையிட்டான். மேகங்கள் சூரன்சிறையிலிருந்து அழிவதைக்காட்டிலும் வீரவாகுதேவர் கோபத்தால் அழிவதே சிறப்பு என்று கருதி மழைபொழிந்தன. வீரவாகுதேவர் வடவாமுகாக்கினியை ஏவி வற்றச்செய்தார். மேகங்கள் வலியொடுங்கிப் புறக்கடலை அடைந்தன. இந்நிகழ்ச்சியை அறிந்த சூரன் தானே போருக்குப் புறப்பட்டான். சூரனுடைய மகனாகிய இரணியன் என்பவன் தந்தையை வணங்கிச் சிவபராக்கிரமத்தையும், செங்கோலாட்சியின் சிறப்பையும் எடுத்துக்கூறி, தேவர்களைச் சிறைவீடு செய்தால் நாம் நீண்டகாலம் வாழலாம் என்று விண்ணப்பித்துக் கொண்டான். சூரபன்மன் அவற்றை யேலாது கடிந்துசொல்ல இரணியனே போருக்குப்புறப்பட்டான்.

நாரதர் இரணியனுடைய ஆற்றலையும் வஞ்சனையையும் வீரவாகு தேவர்க்கு அறிவித்தார். வீரவாகுதேவர் தன் தம்பியரையும் பூதசேனைகளையும் நான்குதிசைகட்கும் அனுப்பிப் போர்செய்யும்படிப் பணித்தார். தான் இரணியன்வரும் மேற்றிசையை நோக்கிச்சென்றார். நாணேற்றிப் பல கணைகளை அசுரப்படைகளின்மீது பொழிந்தார். இரணியனும் பல அம்புகளை ஏவிப் பூதகணங்களைக் கொன்றான். பூதகணங்கள் உடைந்து ஓடுவதைக்கண்ட நீலர் என்னும் பூதப்படைத்தலைவர் இரணியனை எதிர்த்துப் போரிட்டு அவன் முடியை இடறி, மார்பைப்பிளந்து குருதி கக்கச்செய்தார். இரணியன் மாய வடிவங்கொண்டு நீலரோடு வந்து பலவகையில் போரிட்டான். நீலர் தண்டாலடித்தார். அது வானில் எழும்பிற்று. நீலர் அதனைத் தொடர்ந்து சுற்றிக் களைத்தார். இரணியன் தீக்கணையினை நீலர்மீது எய்து சோர்வடையச் செய்தான். இதனைக்கண்ட வீரவாகுதேவர் இரணியனோடு எதிர்த்து அவன் தேரைத் தூளாக்கினார். இரணியன் கடலிற்சென்று ஒளிந்தான். 'என்தந்தை இறப்பது உறுதி. இறுதிக்கடன் செய்ய நான் ஒருவனாவது உயிருடனிருப்பேன்' என்று எண்ணியவனாய் கடலில் மறைந்தேயிருந்தான். அப்போது சூரியன் கீழ்க்கடலில் உதயமானான்.

**அக்கினிமுகாசுரன் வதை :**

ஒற்றர்கள் ஓடிப்போய் நிகழ்ந்ததைச் சூரபன்மனுக்குத் தெரிவித்தார்கள். சூரபன்மன் வருந்தியிருக்கும்போது அவன் குமாரர்களில் ஒருவனுகிய அக்கினிமுகன் அங்குவந்தான். சூரபன்மன் நிகழ்ந்தவைகளைக் கூறினுன். அரசே! நான் சென்று வென்று வருவேன் என்று விடைபெற்று, சோமகண்டன், சோமன், சூரியசித்து, மேகன், பிங்கலன் முதலான படைத் தலைவர்கள்புடைசூழப் போர்க்களம்சென்றுன். இருபடைகளும்பொருதன. அசுரகணம் சிதறி ஓடுதலைக்கண்ட அக்கினிமுகன் படைத்தலைவர்களை அனுப்பினுன். வீரபுரந்தரர் எதிர்த்து அவர்கள் தேர்களையும், குதிரைகளையும், படைகளையும் பாணங்களால் அழித்தார். சோமகண்டன் தலையைக் கொய்தார். எல்லாரும் வீரபுரந்தரரை வளைத்துக்கொண்டனர். மேகன் தண்டாயுதத்தை ஏவி வீரபுரந்தரரது தேர்ப்பாகனைக்கொன்றுன். வீரபுரந்தரர் வேற்படையை ஏவி மேகனைக்கொன்றுர். பின்னர் அக்கினிமுகன் வந்து அவரோடு எதிர்த்தான். அம்புகளைத்தூவித் தேரையும், வில்லையும் அம்பறுத் தூணியையும் அறுத்தான். மீட்டும் நூறு பாணங்களை ஏவி அவர் மார்பைத் துளைத்தான். ஆரவாரித்தான். பின்பு ஏழு வீரர்களும் வந்து எதிர்த்தனர். அவர்களையும் அம்புகளால் சோரச்செய்தான். அவர்கள் அக்கினிமுகனுடைய தேர் குதிரைகளை அழித்தனர். மார்பைத் துளைத்தனர். அக்கினிமுகன் சிவப்படையை ஏவினுன். அது தீயைக் கக்கிக்கொண்டு சென்றது. ஏழு வீரர்களும் அக்கினிப்படை என்றெண்ணி வருணப்படையை ஏவினர். அது வருணப்படையை விழுங்கி எழுவர் உயிரையும் கவர்ந்துமீண்டது. வீரவாகுதேவர் தம்பியர் இறந்தமை அறிந்து அவனேடு எதிர்த்தார். வீரவாகு தேவரும் அக்கினிமுகனும் கணைக்குக்கணை தொடுத்தும் வெற்றி ஒருவர் பக்கமாகாமையால், அக்கினிமுகன் தண்டத்தை ஏவினுன். வீரவாகுதேவர் மொட்டம்பை ஏவி அதனைத்தள்ளினுர். பின் தெய்வப்படைகளை ஏவிக் கொண்டனர். பிறகு வீரவாகுதேவர் நஞ்சுதோய்ந்த நூறு அம்புகளை அக்கினிமுகன் மார்பில் அழுத்தினர். அவன் மயங்கிவீழ்ந்தான். தெளிந்து எழுந்து, தன் வழிபடுதெய்வமாகிய காளியைவந்து உதவும்படி துதித்தான். காளி தன் பரிவாரங்களுடன் வந்து போர்செய்தாள். பூதர்களைக் கொல்ல மூவிலைச்சூலத்தை ஏவினுள். வீரவாகுதேவர் பதினுன்கு பாணங்களை ஏவி அதனைப் பொடியாக்கினுர். காளி 'உன்னை உயிரோடு விழுங்கிவிடுகிறேன் பார்' என்று கூறிக்கொண்டே சிங்கவாகனத்தின்மீது வந்து மற்றொரு சூலம் வைத்திருக்கிறேன் அதனையும் விடுகிறேன் பார் என்று விட்டாள்,

வீரவாகுதேவர் அதனையும் ஆயிரம் கணைகளால் பொடியாக்கினார். வாட் படையொன்றைத் தாங்கி வீரவாகுவின் தேரையணுகினாள். வீரவாகுதேவர் பெண்ணைக்கொல்லுதல் வீரத்திற்கிழுக்கும் பாவமுமாகும் என்று எண்ணி அவள் எட்டுக் கைகளையும் பிடித்து, அவள் மார்பில் உதைத்து, குருதி கக்கச்செய்தார். அவள் சோர்ந்து வீழ்ந்து உமக்கு வெற்றியுண்டாகுக என்று வாழ்த்தி மன்னிப்புக் கேட்டுச்சென்றாள்.

காளி தோற்றுப்போனதைக்கண்ட அக்கினிமுகன் 'வீரவாகுவைக் கொன்றன்றி ஊர் திரும்பேன்' என்று சபதங்கூறி வீரவாகுதேவர்மேல் நூறு கணைகளைத் தூவினான். வீரவாகுதேவர் பதினான்கு கணைகளால் அவன் வில்லைமுறித்தார். அவன் வேறுவில்லை எடுத்து நான்முகன் படையை ஏவினான். வீரவாகுதேவர் வீரபத்திராஸ்திரத்தை ஏவினார். அது அவன் படைவலியை வாட்டி அவனையும் கொன்றது. பின் இருபத்துநாலாயிரவர் வீரவாகுவோடு போரிடவந்தனர். வீரவாகுதேவர் அவர்கள்மீது நூறாயிரம் பாணங்களை ஏவிக்கொன்றார். குருதி வெள்ளம் குடை கொடி வில் வேல் வாள் முதலியவற்றை அடித்துக்கொண்டு கடலிற் பாய்ந்தது. பின்னர் வீரவாகுதேவர் தம் தம்பியர் எழுவரையுந்தேடினர். உக்கிரர், வீரபுரந்தரர் நீங்கலாக ஆறு தம்பியர்களும் இறந்தனர் என்றனர். வீரவாகுதேவர் புலம்பி, தெளிந்து, கூற்றுவனும் விபூதி உருத்திராக்கமணிந்த இவர்கள் உயிரைக் கொண்டுபோயினனா? என்று கூற்றுவனைச் சினந்தார். அம்பறாத்தூணியி லிருந்து ஒரு கணையை எடுத்து எமனுக்கு ஓலைவிடுத்தார். யமன் கண்டு, வீரவாகுதேவருடைய தம்பியர்கள் இங்கு வந்திலர்; எங்குப்போனார்களோ என்று சிந்தித்து, திருக்கயிலையில் இருப்பதாகத் தெரிந்து, கயிலையை அடைந்து, எழுவரையும் வீரமகேந்திரபுரிக்குச் செல்ல வேண்டிக்கொண் டான். அவர்களும் அவ்வாறே வந்தனர். சூரபன்மன் அக்கினிமுகன் அழிந்ததைக்கேட்டு வருந்தினன். அரசி பதுமகோமளையும் துயருற்றாள்.

**மூவாயிரவர் வதை:**

சூரபன்மன் மக்களாகிய மூவாயிரவரும் போருக்குச்செல்ல விடை கேட்டனர். சூரபன்மன் சென்று வென்று வாருங்கள் என வாழ்த்தி வழி கூட்டி அனுப்பினான். அவர்கள்வந்து சண்டையிட்டார்கள். பூதப்படைத் தலைவர்கள் தளர்ந்து வருந்தினர். இலக்கம் வீரர்களுள் ஓராயிரவர் இதனை உணர்ந்து மூவாயிரவரோடு எதிர்த்தனர். மூவாயிரவர் மரங்களையும் மலை களையும் வாரிப்பொருதனர். விசயரை யொழிந்த ஆயிரவர்கள் போருக்கு

உடைந்து தளர்ந்தனர். பின்னர் விசயரும் மூவாயிரவரும் பொருதனர். விசயர் பல படைகளை ஏவி அவர்கள் கைகால்களை அறுக்கவும் அவை மீட்டும் மீட்டும் வளர்ந்தன. அதனால் மனமுடைந்த விசயர் ஆறுமுக வள்ளலைத் தியானித்துத் துதித்தார். கருணைக்கடலாகிய கந்தப்பெருமான் விண்ணில்தோன்றி 'விசய! கவலற்க. அவர்கள் பிரமனிடம்பெற்ற வரம் அத்தன்மையது. அதனை அழிக்க இந்த வைரவப் படைக்கலம் ஒன்றால் தான் இயலும். இதனை அவர்கள்மேல் ஏவி வெல்லுக' என்று அருளி, படைக்கலத்தையும் கொடுத்து மறைந்தனர். அங்ஙனமே விசயர் வைரவப் படையை ஏவி, உன்மத்தன் ஏவிய மாயப்படையையும் அழித்து மூவா யிரவரையுங்கொன்றார். தூதர்கள் இந்நிகழ்ச்சியையும் ஓடிச் சூரனுக்குத் தெரிவித்தனர். சூரன் அலறினான். அனைவரும் புலம்பினர். கதிரவன் மறைந்தான்.

### தருமகோபன் வதை:

சூரனது தலைமை அமைச்சனாகிய தருமகோபன் வந்து 'அரசே! அனைவர்க்கும் அரணாக உள்ள தாங்களே வருந்தின் யாங்கள் செய்வது என்ன? எனக்கு ஆணை வழங்குங்கள்; சென்று வென்றுவருவேன்' என விண்ணப்பித்துக்கொண்டான். சூரனும் ஆணைதர அளவற்ற சேனைகளோடு போர்க்களம் அடைந்தான். பூதகணங்கள் ஆரவாரஞ்செய்தன. இருதிறப் படைகளும் பொருதன. அவுணப்படைகள் அழிந்தன. தருமகோபன் கண்டான். கணைமாரி பொழிந்தான். புண்டரீகம் என்னும் தன் யானை யாலும் பூதர்களைக்கொன்றான். இதனைக்கண்ட வீரமார்த்தாண்டர் அவனை எதிர்த்தார். அக்கினிக்கணைகள் பலவற்றை அந்த யானைமீது செலுத்தினர். தருமகோபன் வீரமார்த்தாண்டர் நுதலில் நூறு அம்புகளைச் செலுத்தினான். அவர் அயர்ந்தார். வீரபுரந்தரர் வந்து பொருதார். அவர் ஏவிய கணைகளை அவன் மாற்றினான். தண்டாயுதம் ஒன்றை ஏவி வீரபுரந்தரரை மயங்கி விழச்செய்தான். இதனையுணர்ந்த வீரவாகுதேவர் எல்லாரையும் விலக்கிக் கொண்டு தருமகோபன் முன்வந்து ஒரு வேற்படையை அவன்மேல் ஏவினர். வேற்படை அவன்விட்ட பாணங்களை விலக்கிக் கொண்டுவந்து அவன் மார்பை ஊடுருவி வெளியேசென்றது. தருமகோபன் அறிவிழந்து விழ்ந்தான். புண்டரிகம் அதனை உணர்ந்து வீரவாகுதேவரைக் கொல்ல எண்ணியது. வீரவாகுதேவரின் தேரைக் கொம்பால்தாக்கி அவர்பாகனைக் கீழேகிடந்த எழுப்படையால் தாக்கிக்கொன்றது. வீரவாகுதேவர் வேறொரு தேர்மேல் ஏறிக்கொண்டு, யானையின் துதிக்கையைப் பிடித்திழுத்துக்



வில்லேந்திய வேல்முருகன்.

கன்னத்தில் அறைந்து வானில் தூக்கி எறிந்தார். வந்துவீழ்ந்தது. ஒருபக்கம் ஒதுங்கிச்சென்றது. தருமகோபன் தண்டு குலிசம் இவற்றை ஏவினன். வீரவாகுதேவர் தண்டத்தை வாளால் வெட்டியும், குலிசத்தைப் பிடித்து அதைக்கொண்டே அவன் மார்பிலடித்தும் துன்புறுத்தினர். அவன் கீழே விழுந்தான். வீரவாகுதேவர் அவன் மார்பிலுதைக்கவே அவன் இறந்தான். புண்டரீகம் மெல்ல எழுந்து வீரவாகுதேவரை அடைந்து, மன்னிப்புக் கேட்டு, தன்திசையாகிய தென்கிழ்த்திசையை அடைந்தது. சூரபன்மன் இந்நிகழ்ச்சிகளையும் கேட்டுத் துன்பக்கடலில் ஆழ்ந்திருந்தான்.

**பானுகோபன் வதை :**

மறுநாள் பொழுதுபுலர்ந்தது. தூதர்கள் சிலர் பானுகோபனிடம் சென்று 'இளவரசே! தேவரீர் மாயப்படையைக்கொண்டு வீரவாகு முதலிய வர்களை மயக்கிப் புறவாழிச் சமுத்திரத்திலே அமிழ்த்தினீர் அல்லவா! முருகன் பாசறையிலிருந்தபடி வேற்படையை ஏவி அவர்களை மீட்டுவந்து விட்டார். பின்னர் வீரவாகுதேவர் தருமகோபனைக் கொன்றுர். அதனுல் அரசர் பெருந்துயரத்தோடு சித்திரப்பதுமைபோல அயர்ந்துள்ளார்' என்று அறிவித்தனர். பானுகோபன் இவற்றைக்கேட்டு 'நமது வாழ்வுக்கு முடிவுகாலம் அருகே வந்துவிட்டதுபோலும்' என்று எண்ணிக்கொண்டே சூரபன்மன்கோயிலை அடைந்தான். 'அருமைத் தந்தையே! அரசர்க்கரசே! நான் அன்று வீரவாகு முதலியவர்களைக் கட்டிப் புறவாழியில் அமிழ்த்தி வந்தேன். அறுமுகக்கடவுள் இருந்த நிலையிலிருந்தே அவர்களை மீட்டு விட்டாராம். முன்னரே தாரகனைக் கொன்றுர். கிரவுஞ்சத்தையும் துளைத்தார். பூத சைனியங்களையும் அழித்தார். அன்று, தாங்களும் அவர்முன் போருக்குப் போய் எல்லாம் இழந்து திரும்பவில்லையா? ஆதலால் அவர் அளவிலாற்ற லுடையவர் என்பது புலனுகின்றதே ; ஆகவே தேவர்களைச் சிறைவிட்டு வாழ்வதேமேல்' என்று கூறினன். சூரபன்மன் இதனைக்கேட்டு 'மானமழிந்து தொல்லை வலியிழந்து, உலகில் வைகும் ஏனையர் வசையின்மாற்றம் ஏழுபிறப்பிலும் அகலுமோ ? நான் தேவதேவனிடம் வரம்பெற்றேன். நீ போய்ச்சுகமாகத் தூங்கு. நானே போருக்குப்போகிறேன்' என்று எள்ளி நகையாடினன்.

பானுகோபன் 'கெடுமதி கண் தோன்றுது; விதியினை யாவரே வெல்லு நீர்மையார்' என்று எண்ணி, 'அரசே! நான் அறியாது கூறிய வார்த்தைகளை

மன்னித்தருள்க. சிறியோர்செய்த பிழைகளைப் பெரியோர்கள் பொறுப்பது கடமையன்ரு! இன்றே நான் போருக்குச்சென்று வென்று மீளுவேன்' என்று விடைபெற்றுக்கொண்டு, போர்க்கோலம் பூண்டு, பொருகளம் சென்ருன். இருசேனைகளும் கலந்து பொருதன. பிணக்குவியல் எங்கும் பரந்தது. கழுகுகள் வானமண்டலத்தை மறைத்தது. தன் படைகள் மிகுதி யாக அழிந்ததைக்கண்ட பானுகோபன் பூதப்படைகளை நோக்கி அம்பு மாரியைத் தூவினுன். பூதகணங்கள் மலைகளையும், மரங்களையும், சூலம் எழு முதலிய ஆயுதங்களையும் ஏவின. பானுகோபன் அவற்றைத் துணித்துத் துகளாக்கி அக்கினிக்கணையை ஏவ, அது பூதருடலங்களைத் துளைத்தது. பூதகணங்கள் குருதிகொப்பளிக்கச் சோர்வடைந்தன. உடைந்தோடிய அவுணசேனைகள் பானுகோபன்பக்கல் வந்து குவிந்தன.

பானுகோபன் கொண்ட வெற்றியை வீரவாகுதேவர் கண்டார். தேரிலேறிப் பானுகோபன்முன் சென்ருர்; முருகனைத் தியானித்து, வில்லை வளைத்து, அம்புமாரியை அவுணர்சேனைமீது தூவினுர்; தலை, கை, கால் முதலிய உறுப்புக்களைக் கொய்தார். அவுணப்படைகளும் அவர்மீது உலக்கை, சூலம், தண்டம் முதலிய ஆயுதங்களை ஏவின. அவர் அவைகளை மாற்றி, பகைவரின் குதிரைகளையும் யானைகளையும் கொன்ருர். காலாட் படையும் அழிந்தன. இவற்றையெல்லாம் கண்ட பானுகோபன் கோபா வேசத்துடன் 'ஏடா! என் சேனைகளையெல்லாம் கொன்ருய். இன்று நீ உயிரோடு திரும்பப்போவதில்லை. உன்னைக்கொன்ருலன்றி வீடு திரும்புவ தில்லை என்று சபதம் செய்துகொண்டுதான் இங்குவந்தேன்' என்று கூறி வில்லை வளைத்து ஆயிரம் அம்புகளை ஏவி வீரவாகுதேவர் மார்பைத் துளைத் தான். வீரவாகுதேவர் துன்பத்துடன் ஆயிரம் அம்புகளை ஏவி அவன் தோள்களைத் துளைத்தார். அவன் நூறுகணை ஏவி வீரவாகுதேவர் வில்லை முறித்தான். வீரவாகுதேவர் வேற்படையை எடுத்து அவனுடைய நெற்றி யில் ஏவினுர். அதனுல் அறிவிழந்து வீழ்ந்த அவன் மீட்டும் தெளிந்து எழுந்து வாயுப்படையை ஏவ, வீரவாகுதேவரும் வாயுப்படையை ஏவினுர். இரு வரும் அக்கினிப்படை முதலிய தெய்வப்படைகளை ஏவிக்கொண்டனர்.

பானுகோபன் கடைசியாகத் திருமாலின் படையை ஏவினுன். அதனை யும் வீரவாகுதேவர் விலக்கினுர். செயலற்ற பானுகோபன் மாயத்தால் வெல்லுவேன் என்று எண்ணி, வீரவாகுதேவரைச்சூழ நாற்புறமும் கணை மாரியைத் தூவினுன். அவைகள் வீரவாகுதேவர் மேனியிற்பட்டு இரத்தம்

பெருகச்செய்தன. இதனைக்கண்ட வீரவாகுதேவர் ஞானஸ்திரத்தை ஏவி அவன் மாயையை வென்றார். பானுகோபன் வீரவாகுதேவரது போர்த் திறத்தைப் போற்றி வானமண்டலத்தில் கிளம்பிப் பொருதான். வீரவாகு தேவரும் அங்ஙனமே செய்தார். இறுதியாகப் பானுகோபன் வாட்போர் தொடங்க, இவரும் வாட்போர்செய்தனர். வீரவாகுதேவர் அவன் வலது தோளை வெட்டி வீழ்த்தினார். பானுகோபன் இடதுகையால் வாளைப்பிடித் துக்கொண்டு பொருதான். மாயப்படைக்கலத்தை எடுக்க எண்ணினான். இதனையுணர்ந்த வீரவாகுதேவர் அவன்தலையை வாளால் வெட்டி வீழ்த் தினார். பானுகோபன் இறந்தான். வீரவாகுதேவர் வெற்றியுடன் அறுமுகக் கடவுள் எழுந்தருளியுள்ள பாசறைக்குச்சென்று நிகழ்ந்ததை விண்ணப்பித் துக்கொண்டார். முருகனிடம் என்றென்றும் திருவடி மறவாத அன்பை வரமாகப்பெற்றார். அவரவர்களும் தத்தம் இருப்பிடம் சென்றனர்.

சூரபன்மன் போர்ச்செய்திகளைக் கேட்டான். பலவாறு புலம்பினான். பதுமகோமளையும் தன்மகன் இறந்தமைகேட்டு, எல்லையில்லாத் துன்பக் கடலுள் ஆழ்ந்தாள். சூரபன்மன் தான் தேறி, பதுமகோமளை முதலியவர் களுக்கும் தேறுதல் கூறி இருப்பிடம் அனுப்பிவிட்டுத் தூதர்களை அழைத்து, 'நீங்கள் ஆசுரநகரம் சென்று என் தம்பியாகிய சிங்கமுகனை அழைத்துவருக' என உத்தரவிட்டான். அவர்களும் அங்ஙனமே சென்று அழைத்துவந்தனர்.

**சிங்கமுகாசுரன் வதை :**

சிங்கமுகன் சூரபன்மனின் திருமுன் வணங்கிநின்றான். சூரபன்மன் அவனை மார்புறத்தழுவி, நிகழ்ந்தவற்றை அறிவித்தான். சிங்கமுகனும் 'நீ அறுமுகங்கொண்ட அண்ணலைப் பாலன் என்று எண்ணாதே; இன்று நான் சொல்லும் உரைகள் உனக்கு விஷம்போலத்தானிருக்கும். வெள்ளம் பெருகிய பிறகு யார் என்னசெய்ய முடியும்? இப்பொழுதே போகிறேன்; வென்றால் மீண்டும் உன்னைக் காண்பேன்; இல்லையேல் அனைவரோடும் யானும் அழிவேன்' என்று கூறி விடைபெற்றுச் சென்றான்.

சென்ற அவன் மலைமலையாகக் குவிந்துள்ள உணவையும் ஊனையும் உண்டு, குடங்குடமாக உள்ள மதுவையும் குடித்துப் போர்க்கோலங் கொண்டு இலட்சம்வெள்ளம் படைசூழப் பொருகளத்தை அடைந்தான். தேவர்கள் கண்டு அஞ்சினார்கள். இருபடைகளும் பொருதன. பூதப் படைகள் உடைந்தன. இதனைக்கண்ட சிங்கர் என்னும் பூதத்தலைவரோடு, தசமுகன் என்னும் அசுரன் எதிர்த்தான்; சிங்கர்மீது கணைகளை ஏவினான்.

அவர் அவற்றைக் கதையால் விலக்கவே அவன் மேலும் ஒரு கதையை ஏவினன், அது அவர் மாற்பிற்பட்டுத் தூளாயிற்று. பின் மழுவை ஏவ, சிங்கர் அதைக் கையால் பிடித்து ஒடித்தார், அவன் வேலொன்றை ஏவினன். சிங்கரும் சக்கராயுதத்தை ஏவினர். வேலழிந்தது. தசமுகன் சிங்கரைக் கதையால் அடித்தான். சிங்கர் மார்பில் குருதி வழிய ஓடிப்போய் அவன் மார்பில் அறைந்தார். அவன் வீழ்ந்திறந்தான். அப்போது அவுணப் படைகள் சிதறின. அநகர் என்னும் இலக்கவீரர்களில் ஒருவர் அவுணப் படைகளை அழித்தார். அதனைக்கண்ட துன்முகன் என்னும் அவுணன் உடைந்தோடும் அவுணப்படைகளுக்கு உற்சாகமூட்டி ஒன்றுசேர்த்தான்; பூதப்படைகள்மீது கணைகளைத் தூவினன். கணைகள் சூரியன்முன் பனி போலப் பயனற்றுப்போகவே மாயத்தால் வெல்வதே தகுதியென மாயா வடிவு தாங்கித் தாக்கினன். வீரவாகுதேவர் ஞானப்படையை ஏவி மாயத்தை மாற்றினர். துன்முகன் தோற்று ஓடினன்.

சிங்கமுகாசுரன், தனது படைகள் தோற்றோடுதலைக் கண்டதும், முன்னேறிவந்து பொருதான். பூதப்படைகள் மலைகளையும் மரங்களையும் எறிந்து, விண்ணில் கதிரவனொளியும் மறையும்படி வீசின. சிங்கமுகன், தேரினின்று இறங்கிக் காலாலும், கையாலும் சிதைத்தான். அள்ளி அள்ளிக் கடலில், வானில், வைகுந்தத்தில் வீசினன். எங்கும் பூதவெள்ளத்தின் குருதிவெள்ளம். இதனைக்கண்ட அழற்கண்ணர் என்னும் பூதத்தலைவர் சிங்கமுகன் முன்சென்று சூலத்தை ஏவினர். அது செயலற்றுப்போகவே தண்டத்தை ஏவினர். அது அவன் தேர்ப்பாகன் தலையைச் சிதற அடித்தது. இதைக்கண்ட சிங்கமுகன், தன் தண்டாயுதத்தை ஏவி, அழற்கண்ணர் மூக்கிலும் மார்பிலும் முகத்திலும் குருதி பெருகச்செய்தான். அழற் கண்ணர் அயர்ந்து நின்றார். சிங்கமுகன் பூதப்படைத் தலைவர்மீது போர் புரியச் சென்றான். இதனைக்கண்ட சுமாலி என்பவர் பெரிய மலையைப் பிடுங்கி எறிந்தார். சிங்கமுகன் அதைப் பந்துபோல் பிடித்துச் சுமாலி மேலேயே திருப்ப, அவர் செயலற்று நிலத்து வீழ்ந்தார். இதனைத் தண்டி என்பவர் பார்த்து, சிங்கமுகன்தேரில்பாய்ந்து தன்கைத்தண்டால் அவன் மார்பில் தாக்கினர். தண்டம் அழியவே கையால் ஓங்கி அறைந்தார். அவன் காலாலெற்றவே அவர் விண்ணிற்சென்று அவன் தோள்மீது குதித் துத் துவைத்தார். சிங்கமுகன் அவரைக் கொசுகுபோல உருட்டி, திரட்டிக் கொன்றான். அங்ஙனமே இலக்கத்தெண்மர் சண்டைக்குவர அவர்களையும் உதைத்தும், கசக்கியும், பொடிசெய்தும், கிள்ளியும் கொன்றான்.



குமரகோயில் மெய்கண்ட வேலவர்.
(முன்தோற்றம்)

இதை வீரவாகுதேவர் கண்டு 'பூதப்படை பாதியழிந்தன. இலக்கத் தெண்மர் பட்டனர். சும்மா இருந்தால் எல்லாம் அழிந்துவிடும்போலும்' என்று எண்ணிப் பல கணைகளைத் தூவினர். அவுணப்படைகள் அழிந்தன. சிங்கமுகனுடைய மக்களாகிய நூற்றுவர் இதனைக்கண்டு கூட்டமாகச் சென்று பொருதனர். வீரவாகுதேவர் நூற்றுவரையும் வாளால் வெட்டிக் கொன்றார். சிங்கமுகன் தன் புதல்வர்கள் அழிந்ததைக்கண்டு வருந்தி வீரவாகுதேவர் திருமுன்வந்தான்; பலவாறு எள்ளி நகையாடினான்; வீர மொழிகளும், சூளுரைகளுமாகப் பலவற்றைக் கூறினான். வீரவாகுதேவர் வில்லை வளைத்துப் பதினெட்டுக் கணைகளைச் சிங்கமுகன்மார்பில் செலுத் தினர். பாணங்கள் பயனற்றன. சிங்கமுகன் தண்டத்தை ஏவினான். நான்கு கணைகளால் அதனை அழித்தார். ஆயிரங்கணைகளை அவன் தலையைக் குறி வைத்து ஏவினர். அவை தலையிற்பட்டு மழுங்கி வீழ்ந்தன. சிங்கமுகன் வீரவாகுதேவர்மீது சூலத்தை ஏவ வீரவாகுதேவர் வாளால் வெட்டினர்.

சிங்கமுகன் சிவப்படையை ஏவவே. வீரவாகுதேவரும் ஏவினர். இரண்டும் பொருது அவரவர் கரத்தை அடைந்தன. வீரவாகுதேவர் பதினன்கு கணைகளை ஏவி, சிங்கமுகன் தேர்ப்பாகனை அழித்தார். ஆயிரங் கணைகளை ஏவி அவன் தேரைப் பொடிசெய்தார். சிங்கமுகன் ஆயிரங் கைகளாலும். ஆயிரங்கணைகளைத்தூவி, எங்கும் அம்புமயமாகச் செய்து, குருதி வெள்ளம் பெருக்கெடுத்தோடக் கொன்று குவித்தான். வீரவாகு தேவர், வில்லை வளைத்து அம்புமாரியைத்தூவி, அவன் விடும் அம்புகளை மாற்றினர். சிங்கமுகன் ஆயிரம் வில்லைவளைத்துப் பத்துலட்சம் கணைகளைத் தூவினான். வீரவாகுதேவர் அவற்றை மாற்ற, அவனும் மாற்றினான். சிங்கமுகன் தன் கணைகள் பயன்படாது ஒழிதலை அறிந்து, மாயாபாசத்தை எடுத்து வீசி, வீரர்கள் அனைவரையும் மயக்கி, உதயகிரியில் கொண்டுபோய் உயிர்ப்பின்றி உறங்கவைத்தான். இந்த நிகழ்ச்சியை வாயுதேவன் முருக னிடம் தெரிவிக்க, முருகனே பூதப்படைசூழச் சிங்கமுகனோடு போருக்குப் புறப்பட்டார். இருதிறப் படைகளும் பொருதன. சிங்கமுகன் பேருருவங் கொண்டு பூதசேனைகளை விழுங்கினான். தூதர்கள், போர் நிகழ்ச்சிகளைச் சூரபன்மனிடம் சொன்னார்கள். சூரபன்மன் மகிழ்ந்து, இருக்கிற சேனை களையும் அறுமுகனோடு போர்புரியும் சிங்கமுகனுக்குத் துணையாகச் செல்க என அனுப்பினான். பெரிய மலையொன்றில் ஏறித் தம்பியின் பேருருவத்தை யும், பூதப்போர்க்களம் சூனியமாக இருப்பதையும், அறுமுக அண்ணல் மட்டும் தனியே நிற்பதையும் கண்டு களிப்புற்றான்.

இந்நிலையில், சிங்கமுகன் முருகன்முன் சென்று, 'நாம் அரசர்க்குத் தக்க காரியம் செய்கின்றோம். பகைவரைச் சிறையிடுதலில் பாவமில்லை. உமக்கும் எமக்கும் பகையில்லையாகவும் எம்மொடு போர் செய்யவந்த காரணம் என்ன?' என்று வினவினன். முருகன் 'எளியாரை வலியார் வாட்டினால் வலியாரைத் தெய்வம் வாட்டவேண்டியது அவசியந்தானே! தேவர்களின் சிறை மீட்கவே போருக்கு வந்தோம்' என்று அருளினர். சிங்கமுகன் கேட்டு நகையாடி 'உன் துணைவர்கள் உதயகிரியிற்சென்று இறந்தார்கள். ஏனைய சேனைகள் என் வயிற்றிலிறந்தன. நீ தனியாக நிற்கிறாய்' என்று ஏளனம் செய்தான். பேச்சுவேண்டாம் என்றுகூறி, ஒரு கணையை அவன் மார்பில் ஏவினர். அது அவன் மார்பைத் துளைத்து, குருதிவெள்ளம் பீறிடச் சென்று தைத்தது. வயிறும் மார்பும் திறந்தன. அதன்வழியாக வயிற்றிலிருந்த பூதர்கள் வெளிவந்தனர். இதைக்கண்ட சிங்கமுகன் கைகளால் துளைகளை மறைத்துக்கொண்டு, ஓர் தண்டாயுதத்தை எடுத்து முருகன்மேல் ஏவினன். முருகக்கடவுள் நான்கு கணைகளால் அதனைத் தூளாக்கி அவன் நெற்றியிலும் சென்று தைக்கச் செய்தார். மிச்சமிருந்த பூதகணங்களும் மலைக்குகையிலிருந்து புறப்படும் பறவைகளைப்போல வெளிப்பட்டன. பின்னர் முருகன் ஒரு கணையை ஏவி, உதயகிரியில் மாயா பாசத்தால் கட்டுண்டு கிடக்கும் வீரவாகுதேவர்கள் முதலியவர்களையும் மீட்டார். பின்பு ஒரு கணையை ஏவி அவுணவெள்ளத்தை அழித்தார்.

சிங்கமுகன்மட்டும் மாயப்பேருருவம்மடிய பண்டுபோலத் தேர்மீது தனித்து நின்றான். விற்போர் செய்தான். முருகன் அவன் எய்யும் ஆயிரங் கணைகட்குப் பத்துக்கணை விழுக்காடு ஏவி, அதனை மாற்றிக்கொண்டே வந்தார். அதைக்கண்ட சிங்கமுகன் சூலப்படையை ஏவினன். அதனை முருகன் பதினன்கு பாணங்களால் மாற்றவே, தண்டத்தை ஏந்தினன். முருகன் ஏழு பாணங்களை ஏவி, அவனது தண்டேந்திய கையையறுத்தார். சிங்கமுகன் தண்டம் கீழே விழுவதற்குமுன் மற்றொருகையால் எடுத்து முருகன்மேல் வீசினன். முருகன் அதனை ஆயிரம் கணைகளால் அழித்தார். யமபாசத்தை ஏவினன். முருகன் அதனையும் பொடிசெய்தார். பின் அவரைப் பிடிக்கலாம் என்றெண்ணிக் கைகளை நீட்டிக்கொண்டேவந்தான். கண்ட முருகன் இரண்டாயிரம் கணைகளால் அவன் இரண்டாயிரம் கைகளையும் வெட்டினர். அவை மீட்டும் முளைத்தன. பின் முருகன் அவன் தலைகளையும் கைகளையும் மூவாயிரம் கணைகளைக்கொண்டு அறுத்தார். அவை மீண்டும் முளைத்தன. சிங்கமுகன் அறுமுகப்பெருமானிடம் தன் தவவலிமையையும்,

அழியாத் தன்மையையும் எடுத்துக்கூறினுன். முருகன் அதனைக்கேட்டுப் புன்முறுவல்பூத்து. கணைகளைச் செலுத்தி, அவனுடைய ஒரு தலையையும், இரு கைகளையும் மட்டும் நிறுத்தி ஏனையவற்றைக் கொய்தார். வெட்டுண்ட உறுப்புக்கள் மீட்டும் முளைத்தன. முருகன் அதட்டவே அவை அடங்கின. ஒரு முகத்தையும், இருகைகளையும் கொண்டே அவன் மலைகளைப் பிடுங்கி முருகன்மீது வீசினுன். அம்மலை முருகனுடைய ஒரு கணைக்கு ஆற்ருது உதிர்ந்தது. சிங்கமுகன் தண்டத்தை ஏவ முருகன் வேற்படையை ஏவி அதனையும் துகளாக்கி அவன் மார்பையும் துளைத்தார். சிங்கமுகன் பதை பதைக்க வீழ்ந்திறந்தான். சூரபன்மன் போர்ச்செய்தியை ஒற்றர்மூலங் கேட்டு வருந்தினுன்; வாய்விட்டுப் புலம்பினுன். என்னையுடைய இளை யோனே! இப்பிறப்பில் உன்னை இனிப் பெறுவதுண்டோ? என்று அரற்றி னுன். திருமால் முதலிய தேவர்கள் நிகழ்ச்சி அறிந்து ஆரவாரித்தனர்.

**சூரபன்மன் வதை:**

சூரபன்மன் ஆயிரத்தெட்டண்டங்களிலும் உள்ள படைகளையும் அழைத்து ஒருங்கு திரட்டிக்கொண்டு பெரியதேரில் ஏறிப் போருக்குப் புறப்பட்டான். முருகக்கடவுளும் மனவேகம் என்னுந் தேரின்மீது ஏறிக்கொண்டு போருக்குப் புறப்பட்டார். தேவர்கள் கலங்கினர். போர் தொடங்கிற்று. அவுணர்கள் ஆறுமுகப்பெருமானைச் சூழ்ந்துகொண்டு தண்டு, வேல், வாள் முதலியவற்றையும் தெய்வப்படைகளையும் சிந்தினர். வீரவாகுதேவரும் பிறரும் வருந்தி மீண்டதையும், பூதசேனைகள் உடைந் தோடியதையும் முருகன் கண்டார். வில்லைவளைத்து நாணெலி செய்தார். அந்த நாணெலியாலேயே அவுணப்படைகள் சிதறின. முருகனும் சில கணைகளால் அவுணப்படையனைத்தையும் அழித்தார். மற்ற அண்டங்களி லிருந்து வரும் அவுணப்படைகளையும் அழித்தார். மேலும் வாராதபடி அண்டங்களின் வாயிலைக் கணைகளால் அடைத்தார். பானுகம்பன் என்னும் பூதத்தலைவன் வெற்றிச்சங்கு ஊதினுன். பாஞ்சசன்யமும் திடீரென முழங் கியது. தேவர்கள் யாவரும் முருகன்தேர்மீது கொடியில்லாமை அறிந்து, அக்கினிதேவனைப்பார்த்து, 'நீ கோழிக்கொடியாகி முருகன்தேர்மீது இருக்க' எனப் பணித்தனர். அவனும் அவ்வாறே கொடியாயினன். சூரபன்மன் கடுங்கோபங்கொண்டு விண்ணிற்சென்று, கூடிநின்று ஆரவாரிக்கின்ற தேவர் கூட்டங்கள்மீது அம்புமாரி பெய்தான். முருகன் மண்ணிலிருந்த படியே அம்புகளை ஏவி அவற்றை மாற்றி, வாயுதேவனைப்பார்த்து, நமது தேரையும் விண்ணுலகத்துச் செலுத்துக எனப் பணித்தார். அவனும்

அவ்வாறேசெய்ய முருகக்கடவுள் விண்ணுலகிலே சூரனோடு எதிர்த்தார். ஒருவர் கணைகளை ஒருவர் அழித்துப் போர்செய்தனர்.

விண்ணிற்செய்யும் அவர்கள் போரால் திசைகள் எரிந்தன. உலகம் நடுங்கின. இங்ஙனம் இடசாரி வலசாரியாகப் போர் நடக்கும்பொழுது சூரபன்மன் முருகக்கடவுள்மீது மழு, வச்சிரம், சூலம், வேல், எழு முதலிய வற்றைச் சொரிந்தான். முருகக்கடவுளும் முறை முறையாக அவற்றை அழித்தார். பிறகு பதினான்கு கணைகளைச் செலுத்தி, சூரபன்மன் தேரையும் குதிரைகளையும் அழித்தார். சூரபன்மன் வில்லோடு பூமியில் குதித்துப் பல கோடி கணைகளைச் சொரிந்தான். முருகன் அவற்றை அழித்து, அவன் தோள்மீது ஆயிரம் கணைகளை எய்தார். அவை மலைமீதுவீழ்ந்த கல்மழை போலச் சிதறியோடின. அதனையறிந்த சூரபன்மன் முருகனது தோள்மீது இரண்டாயிரம் அம்புகளையெய்தான். அவை வெந்தொழிந்தன. அவன் மாயமாய் விண்ணில் மறைந்தான். மண்ணில் வந்தான். முருகனும் அவ் வாறே அங்கங்குச்சென்று எதிர்த்தார். நன்னீர்க்கடலிற்சென்றான். அங்கும் சென்றார். மேருமலை, வைகுந்தம், அண்டகோளகை முதலிய இடங் களுக்குச் சென்றான். முருகனும் அங்கங்குச்சென்று பொருதார். சில கணை களால் அவன் ஏறியிருந்த பொற்றேரையழித்தார். சூரபன்மன் இந்திரமா ஞாலத்தேரையழைத்து அதன்மேலேறிப் பொருதான். அப்போது அண்ட வாயில் அடைபட்டிருப்பதையும், அதனால் தன்படைகள் வாராமையையுங் கண்ட சூரபன்மன் சில கணைகளால் அண்டவாயிலைத் திறந்தான். படை கள் அவன்பக்கத்தில் வந்து குவிந்தன. முருகன் தீக்கண்ணை விழித்து நோக்கினார். அப்படைகள் சாம்பராயின. பல அண்டங்களிலும் இருந்து அவுணசேனைகள் வந்து முருகனைத் தாக்கின. முருகன் தமது திருக்கரத்தி லுள்ள கதை, கட்கம், சூலம் முதலிய படைகளைநோக்கி 'நீங்கள் சென்று எங்கெல்லாம் அவுணச்சேனைகள் இருக்கின்றனவோ அங்கெல்லாம் அவை களை அழித்துவாருங்கள்' என்று ஏவினார். அங்ஙனமே ஆயிரத்தெட்டு அண்டங்களினும் சென்று அழித்து உலாவின. இதனையறிந்த சூரபன்மன் முருகன்மீது சக்கரப்படையை ஏவினான். முருகப்பெருமான் ஒரு கரத்தை நீட்டி 'வா' என்று பற்றினார். சூரபன்மன் மனங்கலங்கிப் பல வடிவங் கொண்டு, தேரின்மீதிருந்து கணைமழைகளைப் பொழிந்தான். முருகக்கடவுள் புன்முறுவல்பூத்து ஞானாஸ்திரத்தை விட்டார். அது அவன் மாயங்களை அழித்தது. சூரபன்மன் வலியொடுங்கித் தேரின்மீது தனித்து நின்றான். தேவர்கள் பூமாரி பொழிந்தனர். இதனைக் கண்டு பொறுக்கமாட்டாத



திருவிடைக்கழியில் திருக்குரா நீழலில்
திருவமர் முருகன் சேர்ந்தருள் காட்சி.

அவுணர்கோன் அண்டபித்திகையின் வாயிலையடைந்து அறைகூவினுன். முருகன் அங்கும்சென்ருர். பிருதிவியண்டம்முழுதும் சென்ருன். முருகனும் அங்கங்குச்சென்று பொருதார். தேவர்கள் சிலகணம் முருகனைக் காணுமை யால் கவலையுற்றனர். சூரபன்மன் மீண்டும் மகேந்திரபுரிக்கு வந்தான். முருகக்கடவுளும் விடாது பின்தொடர்ந்து வந்தார். அவுணசேனைகள் அறுமுகக்கடவுளைச் சூழ்ந்துகொண்டு ஆரவாரம் செய்தன. முருகன் புன் முறுவல் பூத்தார். அவை வெந்து சாம்பராயின.

மனம் உடைந்த சூரபன்மன் தன் தாயாகிய மாயையை எண்ணி ஞன். மாயையும் வந்தாள். அவளிடம் தனது குறைகளையெல்லாம் கூறி, இறந்தவர் அனைவரும் எழ ஒருவழி கூறுக என வேண்டினுன். மாயை, 'மைந்தா ! இந்நிலை எய்தியும் தேவரைவிட நீ விரும்பவில்லை; பன்னிருகரத்து அறுமுகக்கடவுளோடு மேலும் சண்டைசெய்ய விரும்புவாயாயின் உன் செல்வமெல்லாம் தொலையப்பெற்ருய்; அவரைப் பாலனென்று எண்ணுதே; அவர் கரத்திலுள்ள ஞானசக்தி உன்னைக் கொல்லப்போகிறது; இன்று நான் சொல்வது உன்காதில் ஏருது; உன் விருப்பம்போல இறந்தவர்கள் எழும்ப வேண்டுமாஞல் பெரும்புறக்கடலின் அருகில் அமுதசீதமந்தரகூடம் என்ற ஒரு மலையிருக்கிறது; அதனைக் கொணர்ந்தால் அனைவரும் எழுவர்' என்று கூறி மறைந்தாள். சூரபன்மன், மகிழ்ந்து தேரிலிருந்தும் இறங்கிச் சிங்க வாகனத்தில் ஏறிக்கொண்டு, இந்திரமாஞாலத்தேரை நோக்கி 'நீ சென்று அம்மலையைக் கொணருக' எனப் பணித்தான். அது அங்ஙனமே சென்று கொணர்ந்தது. அனைவரும் உயிர்பெற்றெழுந்தனர். சிங்கமுகன் முதலியோர் மீண்டும் அறுமுகப்பண்ணவனை வளைத்துப் போரிட வந்தான். முருகன் புன்முறுவல் பூத்து, உருத்திரபாசுபதத்தை ஏவி, அனைவரையும் அழித்தார்.

சூரபன்மன் இந்திரமாஞாலத்தேரை நோக்கி 'நீ வீரவாகுதேவர் முதலிய வீரர்களையும், பூதசேனைகளையும், தலைவர்களையும் வாரிக்கொண்டு போய் அண்டத்தினுச்சியிலே வைத்துக்கொண்டிருப்பாயாக' என ஆணை தந்தான். அதுவும் அவ்வண்ணமே செய்தது. முருகன் ஒரு கணையை ஏவி, 'நீ அதன் ஆற்றலையழித்து இங்கேகொணர்க' என, அந்தக்கணையும் அவ் வாறே செய்து திருமுன் கொணர்ந்தது. வீரவாகுதேவர் முதலியோர் முருகனை வணங்கி அவர்பக்கலை அடைந்தனர். இந்திரமாஞாலத்தேர் மீண்டும் சூரபன்மன்பக்கம் செல்ல எழுந்தது. 'முருகன் அவன் அழிவது உறுதி; அங்கே போகாதே; இங்கேயே நில்' என்று அதட்டினுர். அதுவும்

அவ்வண்ணமே நின்றுவிட்டது. இதுகண்ட சூரபன்மன் பெருங்கோபங் கொண்டு கணேப்போர் புரிந்தான். முருகனும் ஆயிரங்கணேகளே அனுப்பி அவன் வில்லேத்துணித்தார். சூரன் முத்தலேச் சூலத்தை ஏவினுன். அதனேயும் முருகன் ஆயிரகோடி கணேகளால் பயனற்றெழியச் செய்து குலிசப் படையை ஏவி அதனேப் பிடித்துவரச் செய்தார். சூலம் வலியொடுங்கி முருகன் கரத்திலிருந்தது. முருகன் இரண்டாயிரம் கணேகளே ஏவி அவன் ஏறியிருந்த சிங்கத்தைக் கொன்ருர். சூரபன்மன் மாயத்தால் சக்கரவாகப் பறவையாகமாறி ஆகாயத்தில் பறந்து திரிந்து போர்செய்தான். இந்திரன் ஒரு மயிலாக வடிவெடுத்து முருகனுக்கு வாகனமாயினன். முருகன் அதன் மீது ஏறி ஆகாயத்திற்சென்று சண்டையிட்டார். சக்கரவாகப் பறவை யாகிய சூரபன்மன் முருகனுடைய வில்லேக்கடித்துத் துணிக்கவந்தான். முருகப்பெருமான் ஞானவாளால் அவனே வெட்டினுர். அவனுடைய பறவை வடிவம் மாய்ந்தது.

சூரபன்மன் விசுவரூபமெடுத்துக் கடல்களேத் தூர்த்தான்; கதிர்கள் வரும் வழிகளே அடைத்தான். முருகன் ஏழு கணேயால் அவன் செய்யும் மாயத்தை அழித்தார். நீருரு எடுத்தான்; தீயுருவெடுத்தான்; புயல்வடிவா ஞன். எல்லாவற்றையும் இறைவன் கணேகளே சென்று அழித்தன. பின்னும், சூரபன்மன் பல தேவவடிவங்கொண்டு பொருதான். அவற்றை யும் அம்பாலேயே அழித்தார். சூரபன்மன் போர்க்களத்திலே தனித்து நின்ருன். முருகக்கடவுள் உலகெலாம் தானுய்நிற்கும் உயர்பெரு வடிவங் கொண்டார். சூரபன்மன் வியந்து நோக்க, முருகன் அவனுக்குச் சிறிது நல்லுணர்ச்சியை நல்கினுர். முருகனேப் பலவாறு போற்றிப் புகழ்ந்தான். உண்மை ஞானம் சிறிது கைவரப்பெற்ருன். அதனுல், 'என்றும் மீளா ஆளாகவேயிருக்க எனக்கு ஆசை; ஆனுல் என் மானம் என்னேத் தடுக் கிறது; என்செய்வேன்' என்று பலவாறு தோத்திரித்துத் தன்குற்றத்தை உணர்ந்து வருந்தினுன். அப்போது முருகன் மீட்டும் மயில்வாகனத்தின் மீது பண்டைய பாலக உருவில் காட்சியளித்தார். சூரபன்மனும் முன் போல அறியாமைமிக்கவனுகி மாயை மந்திர வலியால் கதிரவனும் ஒளி மழுங்கும் பேரிருள் வடிவாக வானிற்கிளம்பித் தேவர்களே வருத்தினுன். தேவர்கள் 'தேவர்கள் தேவே! ஓலம்; மூவரும் ஆகின்ற மூர்த்தியே! ஓலம் ஓலம்' என்று ஓலமிட்டனர். முருகன் தமது திருக்கரத்திலுள்ள வேற் படையை நோக்கி, 'சூரன் மார்பைப் பிளந்து விரைவில் மீளுதி' என்று ஏவினர். அது சென்று அவன்கொண்ட இருள்வடிவத்தை அழித்தது.

சினங்கொண்ட சூரபன்மன் கடல் நடுவில் ஒரு பெரிய மாமரமானன். வேற் படை அங்கும் சென்று மாமரமாக இருந்த அவனை வெட்டிவீழ்த்தியது. சூரபன்மன் கீழேவிழுந்து அரற்றினன். மீட்டும் எழுந்து வாட்போர் செய்ய வந்தான். வேற்படை அவன் மார்பைப் பிளந்து உடலை இருதுண்டாக்கிக் கடலில் தள்ளியது. தேவகங்கையில் மூழ்கித் தேவதேவன் திருக்கரத்தை அடைந்தது.

சூரபன்மன் அழியாவரம் பெற்றவனுதலின், மீண்டும் எழுந்தான்; போர்ச்செருக்குக் கொண்டான்; கோழியும் மயிலும் ஆனன்; முருகன் முன்பு வந்தான். முருகக்கடவுள் ஞானநோக்கருளினர். பரிசவேதியால் இரும்பு பொன்னனதுபோல, முருகப்பெருமானின் பார்வையால் சூரன் பகைமைநீங்கி நல்லறிவுபெற்ருன், கொடியாகவும், ஊர்தியாகவும் இருக்க அருள் வேண்டினன். முருகனும் அவ்வாறே நல்லருள் புரிந்தார். கோழி யைக் கொடியாகவும், மயிலை ஊர்தியாகவும் கொண்டார். தேவர்கள் ஆரவாரம் செய்தனர்; தோத்திரித்தனர். போர்க்களத்திலேயே முருகக் கடவுள் அனைவருக்கும் அருள் வழங்கினர்.

சூரபன்மன் இறந்த செய்தியை அரண்மனை அரசியர்கள் அறிந் தனர். பதுமகோமளை உயிர்துறந்தாள். இரணியன் என்னும் சூரபன்மன் மகன் அரற்றிப் புலம்பிச் சுக்கிராசாரியிடம் சென்று, தந்தைக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களை எல்லாம் செய்து, செல்வத்தை வெறுத்துச் சிவஞானம் பெற்றுய்யத் தவமேற்கொண்டு, ஓரிடத்தை அடைந்தான்.

**தேவர்களைச் சிறைமீட்டல் :**

முருகன் வீரவாகுதேவரை நோக்கி, வீரமகேந்திரம் சென்று தேவர் களைச் சிறைமீட்டு வருக என ஆணைதந்தனர். அவரும் அவ்வாறே செய்யச் சிறைப்பட்ட தேவர்கள் அனைவரும் வந்து செவ்வேள் திருவடி யைப் போற்றினர். அன்றுவரை அழிந்த பூதகணங்கள் உயிர்பெற்று எழுந்தன. முருகப்பெருமான் ஆணையின்வண்ணம் வருணன் மகேந்திர புரியை அழித்தான். முருகன் திருச்செந்தூருக்கு எழுந்தருளினர். தேவர்கள் முருகன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, 'பெருமானே! அடியேங்கள் தேவரீரை அருச்சித்து உய்யவேண்டுகிறேம்' என வேண்டிக்கொண்டனர்; அவர் அநுமதிபெற்று நீராட்டிப் பூசித்து வழிபட்டுய்ந்தனர். முருகக் கடவுள் தேவத்தச்சனைக்கொண்டு திருக்கோயில் செய்வித்து, சிவலிங்கப் பெருமானைத் தாபித்து வழிபட்டனர்.

## திருப்பரங்குன்று சேர்தல் :

முருகப்பெருமான் சிவபூசை முடித்தபின்பு தேவர்கள் முனிவர்கள் முதலிய அனைவரும் புடைசூழத் திருச்செந்தூரைவிட்டுப் புறப்பட்டார். திருமால் முதலான தேவர்கள் அவரவர்கள் வாகனங்களில் புறப்பட்டனர். அனைவரும் மதுரைக்கு மேல்பாலுள்ள திருப்பரங்குன்றத்தை அடைந்தனர். அங்குத் தவஞ்செய்து கொண்டிருந்த பராசரமுனிவன் புத்திரர்கள் ஆறு பேரும் முருகனை வணங்கி 'இந்த இடம் மிகச் சிறந்தது; தேவரீர் இங்கேயே எழுந்தருளவேண்டும்' என வேண்டிக்கொண்டனர். முருகன் அவர்கள் வேண்டுகோட்கிணங்கி, நகரமும், வாவியும், கோயிலும் அமைக்கும்வண்ணம் தேவத்தச்சனுக்கு ஆணைதந்தனர். தேவத்தச்சன் அவ்வாறே அமைத்தான். முருகக்கடவுள் தேவர்கள் அனைவரும் மருங்கில்வர, சிற்சபையில் அமைக்கப்பெற்ற திவ்ய சிம்மாசனத்தில் எழுந்தருளியிருந்தார். பிரமன் முதலிய தேவர்களை அவரவர்கள் உலகிற்குச் செல்லும்படி உத்தரவனுப்பினார். வீரவாகுதேவரும், ஏனைய தம்பியரும் இலக்கம் வீரர்களும், பூதப் படைத் தலைவர்களும் ஏவல்வழி நின்றனர். பராசரமுனிவரின் புதல்வர்கள் வணங்கினார்கள். அவர்களுக்கு முன்னொருகாலத்துச் சிவபெருமான் அளித்த வாக்கின்படி முருகன் ஞானோபதேசம் செய்தருளினார்.

## தெய்வயானை திருமணம் :

இந்திரன் விண்ணுலகாட்சியைத் தமக்களித்த முருகக்கடவுளுக்குத் தன் மகளாகிய தெய்வயானையம்மையாரைத் திருமணம் செய்து கொடுக்க எண்ணினான். திருமால் முதலிய மற்றத் தேவர்களுக்கும் தெரிவித்தான். அவர்களும் 'உன்மகள் முன்னரே சரவணப்பொய்கையில் முருகனையே கணவனாக அடையும்வண்ணம் தவஞ்செய்தவள்; அதன்பயன் இப்போது கைகூடுகிறது; ஆதலால் திருமணத்திற்குரிய ஏற்பாடுகளை விரைந்துசெய்க' எனக் கூறி அங்கேயே இருந்தனர். இந்திரன் ஓர் ஒற்றனை அழைத்து 'நீ மேருமலைக்குச்சென்று இந்திராணியையும், தெய்வயானையம்மையாரையும் அழைத்துவா' என உத்தரவிட்டான். அவனும் அவ்வாறே சென்று சூரபன்மன் அழிந்ததையும், தேவர்கள் விடுதலைபெற்றதையும் கூறி அவர்களைத் திருப்பரங்குன்றத்திற்கு அழைத்துவந்தான். இந்திராணி சயந்தனைக் கண்டு களிப்புற்றாள். இந்திரன் இந்திராணியைக்கண்டு அகமகிழ்ந்தான். பிறகு இந்திரன் தன்மனைவியோடும், தேவர்களோடும் அறுமுகப்பண்ணவன் திருமுன் சென்று, தனது அவாவைத் தெரிவித்துக்கொண்டான். உடனே

பொருப்பர் அங்குணர்வுறப் புதல்விதன்மிசை
விருப்புடன் அமர்ந்தருள் திருப்பரங்குன்றம்.



பணிபவர் உய்ந்திடப் பாரெலாம் மகிழத்
தணிகையில் அமர்ந்தருள் தனியதைக் காண்மின்.

முருகன் 'முன்னரே அவள் நம்மையடையத் தவஞ்செய்தவள் ஆதலால் நாளையே நாம் அவளை மணமுடித்துக்கொள்வோம்' என்று திருவாய் மலர்ந்தார். எல்லாரும் களிப்புக்கடலில் மூழ்கினர். திருமண ஏற்பாடுகள் செய்யச் சோழமன்னனாகிய முசுகுந்தனுக்கு ஆணைதந்தனர். எல்லா ஏற்பாடு களும் நடைபெற்றன. மதுரைமாநகரே மகிழ்ச்சிவெள்ளத்திலாழ்ந்தது.

தெய்வப்பெண்கள் தெய்வயானையம்மையாருக்குத் திருமணக்கோலம் செய்வித்தார்கள். தேவர்கள் முருகக்கடவுள் திருமுன்சென்று திருமண மண்டபத்திற்கு எழுந்தருளும்வண்ணம் வேண்டிக்கொண்டனர். பெரு மானும் திருமணக்கோலப்பெருமானாக மணப்பந்தரையடைந்தார். இந்தி ராணி அரம்பையர்களோடு எதிரேவந்து, காமதேனுவின் பாலால் திருவடி யைக்கழுவி, ஆலத்தியெடுத்து வரவேற்றாள். முருகப்பெருமான் இரத்தின சிம்மாசனத்தில் வீற்றிருந்தார். எல்லோரும் வந்து வணங்கினர். முருகக் கடவுள் அனைவருக்கும் அருள் வழங்கினார். சிவபெருமான் உமாதேவியா ரோடும் பூதகணங்கள் புடைசூழ எழுந்தருளினார். முருகப்பெருமான் இருக்கைவிட்டு எழுந்தார். தேவர்கள் முனிவர்கள் முதலிய அனைவரும் எழுந்துநின்று கைகூப்பி வணங்கி வரவேற்றனர். உமாதேவியார் தமது அருமைத் திருக்குமாரரை வாரித் தழுவி உச்சிமோந்தார். திருமால், 'எங்கள் வேண்டுகோளின்வண்ணம் அசுரரை அழித்து, எங்களைச் சிறைவீடு செய் விக்கத் திருக்குமாரரைத்தந்தீர்; தங்கள் குமாரர் எங்களையெல்லாம் ஈடேற்றி னார்; அவருக்கு நாங்கள்செய்யுங் கைம்மாறு என்ன இருக்கிறது? இந்திரன் மகளைக் கொடுக்க எண்ணினோம்; தேவரீர் இத்திருமணத்திற்கு எழுந்தருளி யதால் திருமணம் சிறப்புற்றது' என்று பணிவுரை வழங்கினர். சிவபெரு மான், 'திருமணச்சடங்கு உரியகாலத்து நடைபெறுக' என ஆணையிட்டனர். தெய்வயானையம்மையாரையும் முருகனுடன் சிம்மாசனத்தில் ஏற்றினர். உமாமகேசர் அருள்வழங்கினார். இந்திரன் தாராதத்தஞ்செய்துகொடுத்தான். முருகன் ஏற்றருளித் தெய்வயானையம்மையாருடைய கழுத்திலே திருமங் கல்யதாரணம் செய்தார். திருமணம் இனிது நிறைவேறியதும், முருகன் தெய்வயானையம்மையாரையும் கூட அழைத்துக்கொண்டு தமது கோயிலை யடைந்தார். முசுகுந்தன் வந்திருந்தோர் அனைவருக்கும் உணவும் உடையும் வரிசையும் வழங்கிச் சிறப்புச்செய்தான். அனைவரும் தத்தம் இருப்பிடம் சென்றனர்.

அறுமுகக்கடவுள், பானுகோபனால் அழிந்த விண்ணகரத்தைப் புதுக்கித் தேவேந்திரனுக்கு முடிசூட்டித் தேவர்களைக் குடியேற்றினார்.

இந்திரன் இந்திராணியோடு கலந்து மகிழ்ந்து அரசுசெலுத்தினன். முருகக் கடவுள், விண்ணுலகில் சிலநாள் தங்கியிருந்து, பின் தெய்வயானையம்மையாரோடும் திருக்கயிலை சென்றார். அங்குச் சிலநாள் தங்கியிருந்து தந்தைதாயர் ஆணையைப் பெற்றுக்கொண்டு, கந்தவெற்பை அடைந்தார்; இரத்தின சிம்மாசனத்தில் திருவோலக்கங்கொண்டருளினார்.

இந்திரன், பழைய துன்பங்களை எண்ணியெண்ணி, இந்திரபதவியாற் பயன் என்ன ? எல்லாவற்றையும் விட்டுத் தவஞ்செய்வதே மேல் என்று உவர்ப்புக்கொண்டான். இதனை அறிந்த வியாழபகவான் உலோகாயத மதத்தை உபதேசித்து உலக ஆசையை உண்டுபண்ணினார். இந்திரன் அரசியலைத் தன்மகன் சயந்தனிடம் ஒப்பித்துவிட்டு, இந்திராணியோடு இந்திரபோகத்தில் ஆழ்ந்தான்.

சயந்தன் தேவகுருவைப்பார்த்து 'குருநாதா! யாங்கள் சூரபன்மாவால் ஏன் அவதிப்பட்டோம்? அதனைத் தெரிவித்தருளவேண்டும்' என்று வினவினன். தேவகுரு, 'நீங்கள் யாவரும் சிவநிந்தகனான தக்கன்செய்த யாகத்தில் அவியுண்டபாவத்தால் இத்துணையவதிக்கு ஆளானீர்கள்' என்று பார்வதிகல்யாணமுதல் அவனைச் சிறைமீட்டவரையில் உள்ள வரலாறுகளையெல்லாம் சுருங்கச்சொன்னார்.

**வள்ளியம்மை திருமணம் :**

தொண்டைநாட்டிலே மேற்பாடியென்னும் ஊருக்கு அருகில் வள்ளிமலை என்ற ஒரு மலையுண்டு. அதனை நம்பி என்னும் வேடர்குலத் தலைவன் அரசாண்டுவந்தான். அவனுக்குப் பல புதல்வர்கள் இருப்பினும் புதல்வி இல்லையே என்ற கவலை வாட்டியது. தம் குலவழக்கப்படி முருகனுக்கு வெறியாடிப் பூசித்து வழிபட்டுவந்தான். அப்போது அம்மலைச் சாரலில், ஐம்பொறிகளையும் அடக்கியாண்ட சிவமுனிவர் என்னும் முனிவர் பெருமான் சிவபெருமானைநோக்கிக் கடுந்தவம் புரிந்துவந்தார். முருகக் கடவுளின் அருளால் ஓரிளைய அழகான பெண்மான் ஒன்று அவர்முன் வந்துலாவியது. அதனைக் கண்டதும் அம்முனிவர் காதல்வயப்பட்டுச் சிறிது கலங்கினார். தெய்வப்புணர்ச்சியாக நோக்கினார். நோக்கில் இன்பம் பிறந்தது. மான் கருவுற்றது. திருமாலின் புத்திரியாகிய சுந்தரி என்பவள் முருகனையே கணவனாகப்பெறத் தவஞ்செய்தவள் அந்த மானின் கருவிலேபுகுந்தாள்.

கருமுற்றி வள்ளிக்குழி ஒன்றில் மான் தெய்வக்குழந்தையைப் பெற்றது. மான் தன்னினமான குட்டியாக இல்லாமல் குழந்தையாக இருந்ததைக் கண்டு அஞ்சி ஓடியது.

பரிவாரங்கள் புடைசூழக் கொடிச்சியாகிய தன் மனைவியோடு அவ்வழியே வந்த நம்பிராசன் அக்குழந்தையைக்கண்டு 'முருகன் அருள்' என்றெண்ணி வாரி எடுத்து உச்சிமோந்து தன் மனைவிகையிற் கொடுத்து மகிழ்ந்தான். அனைவர்க்கும் விருந்தளித்தான். அந்த மலையிலுள்ள குறவர்களில், முதியோர்கள் அனைவரும் வள்ளிக்குழியில் எடுத்த காரணத்தால் வள்ளி எனப் பெயர் சூட்டினர். குழந்தை வள்ளி குறுகுறு நடந்தும், குறும்புபல செய்தும், சிறுசோறுக்கியும் விளையாடி, பெற்றோர்களை மகிழ்வித்தாள். வள்ளியம்மைக்கு வயது பன்னிரண்டாயிற்று. பெற்றோர்கள் குலவழக்கப்படி தம்மகளைத் தினைப்புனம் காவல்செய்ய நியமித்தனர். அப்போது முருகப்பெருமான் கந்தவெற்பை நீங்கிச் சுந்தரிதேவியார்க்கு அருள் வழங்கத் தணிகைமலையை அடைந்தார். அவ்வமயம் நாரதமுனிவர் வாயிலாக வள்ளிநாயகியாருடைய பேரழகைச் செவிமடுத்த அப்பெருமான் மானிடமகளாகிய அவளைப்பெறுதற்கு மானுடவடிவந்தாங்கினர். கையில் வில்லும் அம்பும் வேலுந்தாங்கி வள்ளிமலையை அடைந்தார். வள்ளிநாயகியாரோடு காதன்மயக்கு உற்றவர்போல நடிக்கலானர். அப்போது வள்ளியம்மையாரின் தந்தையாகிய நம்பிராசன் பரிவாரங்களுடன் அங்குவந்தான். உடனே முருகக்கடவுள் வேங்கைமர வடிவாகிப் பக்கத்திலேயே நின்றார். நம்பிராசன் வள்ளியம்மையாருக்குத் தேனும் தினைமாவும் நல்லாவின்பாலும் அளித்து, 'இம்மரம் ஏது? இதற்குமுன் இங்கே இல்லையே' என்று வினவினன். வேடர்கள் வெட்ட முயன்றனர். முருகக்கடவுள் அருளால் மனம் மாறி வழியே சென்றனர்.

வேடர்கள் மறைந்ததும், முருகன், மீண்டும் மானிடவடிவு தாங்கி, 'எனக்கு நின்னிரு பூங்கழல் அல்லது புகலொன்றில்லை; நீங்கலன் நீங்கலன் நின்னை என்றுமே; எனக்கு உய்திறம் இல்லை; உன் கையது என்னுயிர், காத்துக்கொள்' என்று குறையிரந்து கூறினர். வள்ளிநாயகியார் 'புலியது பசியுறின் புல்லுந்துய்க்குமோ? குறத்தி நான்; தாங்கள் உலகருள் இறைவர்; ஆதலால் என் கலவியை விரும்புதல் முறையாகாது' என்று மறுத்துரைத்தாள். இந்தச்சமயத்தில் மீட்டும் நம்பிராசன் தமது பரிவாரங்களுடன் வந்து சேர்ந்தான். அதனைக்கண்ட வள்ளிநாயகியார் வருந்தி 'ஐயோ வேடர்கள்

கொடியவர்கள்; உயிரையே குடித்துவிடுவார்கள்; விரைந்தோடுங்கள்' என்று வேண்டிக்கொண்டாள். இதனைக்கேட்டு, இவளுக்கு நம்மீது இருக்கும் காதன்மை என்னே! என்று மகிழ்ந்து, வேடர்கள்முன்பு விருத்த வேதிய வேடம் தாங்கிச் சென்றார். நம்பிராசனுக்கும் மற்றவர்களுக்கும் விபூதி கொடுத்தார். பெற்றுக்கொண்ட நம்பிராசன், சுவாமிகள் இங்குவந்த காரணம் யாது? என்றான். முனிவர் ஈண்டு நும்வரைக் குமரியாட வேண்டி வருகின்றனன் மெலிந்து கடிதென்றார். நம்பிராசன் அப்படியா! மகிழ்ச்சி; நித்தலும் குமரியாடுங்கள்; என்பெண் தனியாக இருக்கிறாள் அவளுக்கும் துணையாக இருங்கள் என்று சொல்லிச்சென்றான்.

முருகன், நம்பிராசன் சென்றதும் வள்ளிநாயகியையணுகி அம்மா எனக்குப் பசிக்கிறது என்றுகூற, அவள் தேனும் தினைமாவுங்கலந்து கொடுத்தாள். வாங்கியுண்டார். வெய்யில் மிகுதியாக இருப்பதால் தாகம் வாட்டுகிறது என்றார். வள்ளியம்மையார் அதோ அந்த ஏழுமலைகளுக்கு அப்பால் ஒரு சுனை இருக்கிறது; அங்கே சென்று தண்ணீரருந்தி வாரும் என்றாள். முனிவர் எனக்கு வழிதெரியாது என்ன, வள்ளிநாயகியார் அழைத்துச் சென்று நீர்பருகச்செய்தார். பருகிக் கரையேறிய விருத்தவேதியர் வள்ளி நாயகியாரைப் பார்த்து 'ஆகத்தை வருத்துகின்ற அரும்பசி தவிர்த்தாய்; தெண்ணீர்த் தாகத்தை அவித்தாய்; இன்னும் தளர்ச்சி நீங்கவில்லை; என் மோகத்தையும் தணித்தால் என்குறை முடிந்தது' என்றார். இவ்வார்த்தையைக் கேட்டவுடனே வள்ளிநாயகியார் சீறி 'வேடத்திற்கேலாதன விளம்பினீரே! இனியும் நீர் இங்கு நின்றால் வேடர்களால் தீமைவிளையும்' என்று கூறித் தினைப்புனத்தை அடைந்தாள். அப்போது முருகப்பெருமான், தம் தமையனுகிய விநாயகப்பெருமானை வேண்டிக்கொண்டார். விநாயகர் ஆனையாகவந்து வள்ளியை வெருட்டினார். வள்ளியும் பொய்வேடங்கொண்டு நின்ற புனிதனையடைந்து அடியேனை இவ்வானையினின்று காத்தருள்க என வேண்டிக்கொண்டார். யானை சென்றது. பின்னர் முருகன் தமது உண்மைத் தெய்வவடிவை வள்ளிநாயகியார்க்குக் காட்டினார். வள்ளிநாயகியார் பெருமானே! இந்தவடிவை முன்னேயேகாட்டி முயங்கி இருக்கக்கூடாதா? இப்படியும் அடியேனை ஏமாற்றலாமா? அடியேன் செய்த பிழைகளைப் பொறுத்தருள்க என வேண்டிக்கொண்டாள். முருகன் அவளைத்தழுவி, நீ போய் தினைப்புனத்தைக் காவல்செய் என்றனுப்பினார்.

மறுநாள் முருகன், வள்ளிநாயகியாரின் தோழியர்களைக்கண்டு இந்தப் பக்கமாக என் அம்புபட்ட யானைவந்ததா? மான்வந்ததா? புலிவந்ததா?



மறுவெலாம் அகற்றி மக்களைக் காத்தருள்
குறுக்குத்துறையின் முருகன் ஆலயம்.



காவளம் பழுனிய கண்கவர் சிறப்பின்
ஆவிநன் குடியெனும் அழகிய கோயில்.

என்று கேட்டுக்கொண்டே வந்தார். பாங்கியர் இவரைக் கண்டதும், 'நன்ருயிருக்கிறது; தலைவி தினைப்புனம் காப்பதும், இவர் வேட்டையாடுவதும்; ஐயா தலைவரே! எங்கள் குலத்திற்கே பெரும்பழியைத் தேடிவிட்டீர்! உங்களைப்போன்ற பெரியவர்கள் குறப்பெண்ணைக் கொள்ளலாமா! தகாது தகாது; போம் போம்' என்று விலக்கினுர்கள். தலைவனுகிய முருகன் 'முடியாது; மடலேறியாவது இவளை மணப்பேன்' என்ன, தோழியர் 'மடலேறுதல் நும்போன்ருர் கருணைக்குத் தகாது; நீர் இந்தக் குருக்கத்திநிழலில் மறைந்திரும்; யாம் தலைவியை அழைத்துவருவோம்' என்று கூறிச் சென்ருர்கள். வள்ளியோடு திரும்பிவந்தனர். 'அம்மா தலைவி! இங்கே இரு; நாங்கள் பூக்கொய்து வருகிருேம்' என்றுசொல்லி நழுவினர். அறுமுகப்பெருமான் அங்கு எழுந்தருளினுர். வள்ளிநாயகியார் அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுர். அறுமுகக்கடவுள் அம்மையாரைத் தழுவிக்கலந்து, 'நின்பெற்ருேர்கள் உன்னைத் தேடுவார்கள்; நீ விரைந்து தினைப்புனம் செல்க' என்று பணித்தனர். பாங்கியரும் வந்து வள்ளியை அழைத்துச்சென்றனர்.

குறவர்கள் தினை முற்றியதைக்கண்டு வள்ளிநாயகியைச் சிற்றூரில் சிறு குடிலிலேயே தங்கும்படிச் சிறையிருத்திக் காத்தனர். வள்ளிநாயகியார் உடல் மெலிந்தது கண்ட சுற்றத்தார் சூரணங்கிற்று என்றுகூற, வேலனைக் கொண்டு வெறியாடச் செய்தனர். வேலன்மீது ஆவேசமாகவந்த அறுமுகப் பண்ணவன், 'யாம் தினைப்புனத்து இவளைத் தீண்டினேம்; எம் மனம் மகிழச் சிறப்புச் செய்யுங்கள்; குறை நீங்கும்' என்ருர். வள்ளிநாயகியார் தெளிந்து எழுந்திருந்தார். வேடர்கள் பூசையிட்டார்கள்.

முருகன் வள்ளியையும் உடனழைத்துச்சென்ருர். வள்ளிநாயகியாரின் தந்தை தனயர்களுக்கும் முருகனுக்குமிடையில் போர் நிகழ்ந்தது. அவர்கள் அனைவரும் மடிந்தார்கள். வள்ளிநாயகியார் வேண்டிக்கொள்ள அனைவரும் திரும்ப உயிர்பெற்றெழுந்தனர். எழுந்த அவர்கள் 'ஏதோ தேவரீர் எங்குலத்திற்கே பழிதேடித் தந்துவிட்டீர்! போனதுபோகட்டும்; எம் சிற்றூருக்குவந்து அக்கினிசாட்சியாகத் திருமணஞ்செய்துசெல்லும்' என்று வேண்டிக்கொண்டனர். அவர்களது விருப்பப்படியே அறுமுகப் பெருமான் எழுந்தருளினுர். வேடர்கள் வள்ளியம்மையாரையும், முருகப் பெருமானையும் புலித்தோல் ஆசனத்தில் இருக்கச்செய்தனர். நாரதர் விதிகாட்ட, நம்பி திருமணஞ்செய்து கொடுத்தான். முருகப்பெருமான்

திருவருள்நிறைந்த நோக்கால் வள்ளியை நோக்கினர். வள்ளியார் தெய்வத் திருக்கோலம் பெற்ருர்.

சிவபெருமான் உமையம்மையாரோடு தேவகணங்கள் புடைசூழ வானவீதியில் வந்து, திருமணக்கோலத்தைக்கண்டு மகிழ்ந்தார். நம்பிராசன் தன் மகளையும் மருமகனையும் கண்டு மட்டற்ற மகிழ்ச்சிகொண்டான். 'மணமக்கள் இன்றுபோல் என்றும் இன்பமுடன் இருக்க' என வாழ்த்தினர் முதுமக்கள். முருகப்பெருமான் வேடர் வேண்டுகோளின்படி கனியும், கிழங்கும், தேனும் விருந்துண்டபின் திருத்தணிமலைக்கு எழுந்தருளினர். தேவதச்சன் நிருமித்த கோயிலில் எழுந்தருளியிருந்து அங்கிருந்தும் புறப்பட்டுக் கயிலைமலைச்சாரலிலுள்ள கந்தவெற்பை அடைந்து. தெய்வயானையம்மையார் எதிர்கொள்ள இருபெருந்துணைவியரோடு அணைமேல் எழுந்தருளினர். அப்போது தெய்வயானையம்மையாரின் விருப்பிற்கிணங்க வள்ளிநாயகியாரின் வரலாற்றைக் கூறியருளினர். தெய்வயானையம்மையார் முருகன் வல்லபத்தை வியந்து பாராட்டினர். இருபெருந்தேவிமார்களும் மலரும் மணமும்போல விளங்கினர்கள்.

சேவலும் கொடிமான் தேரும் சிறைமணி மயிலும் தொன்னுள்
மேவரும் தகரும் வேலும் வேறுள படைகள் யாவும்
மூவிரு முகத்து வள்ளல் மொழிந்திடு பணிகள் ஆற்றிக்
கோவிலின் மருங்கும் முன்னும் குறுகிவீற் றிருந்த மன்னே.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியார் எல்லாம்.

# கந்தபுராணதத்துவம்

உயிர்கள், முன்னைய பலபிறவிகளில் செய்த புண்ணிய விசேடத்தால் குன்றாத தவ ஒழுக்கமும் தூய உள்ளமும் தெய்வத்தன்மையும் பெற்று, நற்சார்பினாலே விரதம் தியானம் இவற்றை மேற்கொள்ளும்; சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும்; சாணை தீட்டப்பட்ட மணியைப்போலத் தவ சித்திகளைப் பெற்று, எல்லாம்வல்ல சித்தராக விளங்கும். அத்தகைய உயிர், தன்னிலையில் தாழாது சிவத்தையே சார்ந்து நிற்பின் சிவமாய் விளங்கும்; மாயையைப்பற்றிநிற்பின், மாயேயங்களைப் பொருந்தி, இந்திரியவயமயங்கித் தன்னிலைகெட்டுத் தடுமாறும். அப்போது ஆணவமலம் நேரே உயிரில் தொழில்புரிய, அதன் குணமாகிய காமமும் பிறவும் உயிரினிடமாகத் தோன்றும். பின்னர், காமத்திற்கு இடையூறாகிய வெகுளியும் மயக்கமும் விளையும். இங்ஙனம், புண்ணியத்தில் சிறந்த புனித உயிர் மாயையில் தோய்ந்து மயங்கிச் சிலந்திபோலத் தளைக்குமேல் தளையிட்டுக்கொண்டு அவதிப்படும். இவ்வுண்மையை மாயைப்படலம், அசுரர்தோற்றுபடலம் இவற்றின் வரலாறாகிய, காசிபர் மாயையைப்புணர்ந்து மயங்கி, தேவ உரு முதல் விலங்கு உருவரை எடுத்து அசுரத்தன்மையோடு விலங்குத்தன்மையும் வாய்ந்த மக்கள் பல்லாயிரவரைப் படைத்தார் என்ற நிகழ்ச்சி நன்கு அறிவிக்கும்.

சிறப்பாகச் சூரபன்மன் ஆணவமலத்தின் உரு; சிங்கமுகன் கன்ம மலத்தின் வடிவு; தாரகன் மாயாமலத்தின் வடிவம்; அயமுகி, இந்திராணி யின் அழகை எடுத்துக்கூறிச் சூரபன்மனுக்கு இதஞ்செய்வாள்போல அவனை அடக்குவித்தலின் திரோதாயிமலம் என்பது உய்த்துணரத்தக்கது.

இறைவன், அந்தந்த ஆன்மாக்களுடைய பரிபாக விசேடங்களுக் குத் தக, வினைகளுக்கு ஏற்ப ஆணவாதி மலங்களில் அழுத்தி, வினைப்போகங் களை ஊட்டி, நல்லறிவு சற்றேபெற ஞானதீபத்தை ஏற்றுவித்து, படிப்படி யாக உயர்த்துவார் என்பதை அசுரர் யாகப்படலம் வரம்பெறுபடலம் ஆகிய இவற்றின் வரலாறுகள் வகுத்துக்காட்டுகின்றன.

மூர்க்கரை மூர்க்கரே முகக்குமாறுபோல மாயையால் மயங்கும் ஆன்மாக்களுக்கு மாயாவாதியே ஆசாரியனுகக்கிடைப்பன்; 'நாம் பிரமம்; எல்லாம் மித்தை' என்று கூறி மாயையிலேயே அழுந்தச்செய்வன் என்பதைச் சுக்கிரன் உபதேசப்படலம், மாயை உபதேசப்படலம் என்ற இவற்றின் வரலாறுகள் உணர்த்தும்.

இறைவன், சுத்தமும் அசுத்தமும் பிரகிருதியுமாகிய மாயைகளைக் கொண்டு, ஆன்மாக்கள் செய்த வினைக்கு ஈடாகத் தனு கரண புவன போகங் களைப் படைக்கின்றுர் என்பதனை அண்டகோசப்படலம் அறிவிக்கிறது.

மும்மலச் சேட்டையினுல் மூடமான உயிர்கள், மட்டுப்படாத ஆசையும் கட்டுக்கடங்காத காமமுங்கொண்டு எல்லா அண்டங்களையும் அடக்கியாள எண்ணும்; எல்லாச் சுகபோகங்களையும் தனக்கே உரிமை யாக்கிக்கொள்ள உன்னும்; எருத்துநோவு காகம் அறியாதவாறுபோலத் தம்மின்பம் ஒன்றே கருதிப் பிறர்வருத்தம் பாராமல் தகாதனசெய்து தண் டனையும் தந்து அடிப்படுத்தும் என்பதனைத் திக்குவிசயப்படலம்முதல் தேவரை ஏவல்கொள்படலம்வரையுள்ள வரலாறுகள் வகுக்கின்றன.

நச்சுப்பாம்பிற்குப் பிறந்தவை நச்சுப்பாம்பாகவே இருத்தல்போல, மலத்தில் ஊறி மாயாகாரியமான உடலை எடுத்த உயிர்கள், பிறந்த விடத்தின் புன்மை குன்றுதவாறு பொல்லாங்குகள் செய்யும் என்பதைப் புதல்வரைப்பெறுபடலம், கிரவுஞ்சப்படலம், அசமுகிப்படலம் முதலிய வற்றின் வரலாறுகள் அறிவிக்கின்றன.

இறைவன் ஆணைவழி நில்லாது, பாவங்களைச்செய்த உயிர்கள், நுகர்ந்தே வினைகளுக்குக் கழிவு தேடிக்கொள்ளவேண்டும் என்பதனைத் தேவர் புலம்புறுபடலம், சூரன் தண்டஞ்செய்படலம், தேவர் சிறைபுகு படலம் என்பவைகள் தெரிவிக்கின்றன.

மூலமல முனைப்பு அடங்கி, அஞ்சியாயினும் அன்புபட்டாயினும் முதல்வன் திருவடிக்கு அடிமைபூண்ட ஆன்மாக்களை இறைவன் ஆட் கொண்டு அருள் வழங்குவார்; ஏதுக்களாலும் எடுத்தமொழியாலும் முன் னின்றும் உள்நின்றும் உணர்த்துவார்; அப்படி உணர்த்தியும் உணராத உயிர்களைச் சுட்டும் அறுத்தும் நோய்நீக்கும் மருத்துவன்போல மறக் கருணைகாட்டி ஆட்கொள்ளுவார் என்ற உண்மைகளைக் கயமுகன்வதை, சதமுகன்வதை முதலான வதைநிகழ்ச்சிகள் வகுக்கின்றன.

ஆணவத்தின் கொட்டத்தை அடக்க, முதற்கண் ஆணவம் பற்றுக் கோடாகக் கொண்டியங்கும் மாயாமலத்தை மாய்விப்பதே இறைவன் செய்யும் உபகாரம் என்பதனைத் தாரகன்வதைப்படலம் சொல்லுகிறது.

மாயையின்வழியதாய் மாயை, மாயேயங்களின் அழிவை உணர்த்தி, ஆணவத்தை வலிகுன்றவைக்கும் உபகாரமலத்தின் உதவியை அசுரேந் திரன் மகேந்திரஞ்செல் படலம் அறிவிக்கிறது.

சிவபரம்பொருள், ஆன்மாக்களுடைய பரிபாகத்தைத் திருவுள்ளத் தில் எண்ணி மாயை கன்மங்களை வீட்டி மலத்தை வாட்டி, ஆன்மாக்களை உய்யக்கொண்டருள, கைம்மாறு வேண்டாத கருணையால் தாமே வழிக் கொள்ளும் என்பதனை வழிநடைப்படலம், குமாரபுரிப்படலம், சுரம்புகு படலம், திருச்செந்திற்படலம் ஆகிய இவைகள் விளக்குகின்றன.

இறைவன் கருணை இருந்தால் அணு அண்டமாகும்; அண்டம் அணுவாகும்; ஐந்தொழில் நீங்கலாக ஏனையவற்றையெல்லாம் உயிர்கள் இயற்றும் என்பதனை வீரவாகு மகேந்திரஞ்செல் படலம் முதல் நகர்புகு படலம் வரையிலுள்ள பகுதிகள் அறிவிக்கின்றன.

சுத்தமாயாகாரியமான தனு கரண புவன போகங்களைப் பெற்ற விஞ்ஞானகலராகிய ஆன்மாக்கள், வினைசெய்தும் வினைபற்றாதவர்களாய், சிவப்பணி செய்தலையே தம் குறிக்கோளாகக்கொண்டு, அரன் ஆணையின் வழி நடப்பர்; அரனடியார்க்கு இன்னல் செய்பவற்றை வதைத்தும் வலிவாட்டியும் உண்மை உணர்த்தியும் உபதேசித்தும் அருளுவார்கள் என்பதனை வீரவாகு சயந்தனைத்தேற்றுபடலம் முதல் வீரவாகு மீட்சிப் படலம் வரையிலுள்ள வரலாறுகள் நன்கு விளக்கும்.

மூலமலம் வலி ஒடுங்காத நிலையில், குரு ஆணையின்வழி நின்று கடைத்தேறாமல், காமமும் குரோதமும் கிளர்ந்தெழத் தீயனவே செய்ய எண்ணுவிக்கும் என்பதனை, வீரவாகுதேவர் குருவாக எழுந்தருளி முருக னாகிய இறைவனுடைய பொது இயல்புகளையும், சூரபன்மனாகிய முனைப் புண்ட ஆன்மாவினுடைய மாட்டாமையையும் சிற்றறிவு சிறுதொழில் உடைமையையும் தெரிவிக்கவும், சூரபன்மன் தனது துர்ப்புத்தி மந்திரிக ளாகிய மகிடன், துர்க்குணன், தருமகோபன், காலசித்து, சண்டன், அனலி முதலியவர்களையும் சிங்கனாகிய தம்பியையும், பானுகோபன் இரணியன்

முதலான மக்களையும் ஆலோசித்து அமருக்குப் புறப்பட்டான் என்ற வரலாறு தெரிவிக்கிறது. இதில் கன்மமல வடிவாகிய சிங்கமுகன் நல்வினை யின் வடிவாக நண்ணிய சிறுபொழுதில் உணர்த்திய உபதேசங்கள் சிந்தை கவரும் பகுதிகளாம்.

யுத்தகாண்டம் முழுமையும் அளவிலா ஆற்றலும் அறிவும் கருணையு முடைய இறைவன் மலகன்மங்களின் வலியைவாட்டி, பருப்பூதங்கள் நுண்பூதங்களுளடங்க, நுண்பூதங்கள் தத்தம் தன்மாத்திரையுள் ஒடுங்க எல்லாவற்றையும் தன்னகத்தடக்கி இறை தற்சிவமாகிய பரம்பரமாய் இருக்கும் நிலையை எடுத்தியம்புகிறது.

இவ்வண்ணம் வினைகளை வீட்டி, மலங்களை வாட்டி, திருப்பெருகு சிவஞானத்தை அளித்த சிவம், ஆன்மாக்கள் அங்கங்கே உணர்ந்துணர்ந்து உயர மனங்கொண்டு வரங்கொடுத்து வாழ்வளித்து, பரங்குன்று முதலிய தலங்களில் இருந்து, அரு அருவுரு உரு என்ற மூன்று திருமேனிகளைத் தாங்கி அருள்செய்யும் என்பதைத் தேவகாண்ட, தக்ககாண்ட வரலாறுகள் தெரிவிக்கின்றன.

சகலான்மாக்களாகிய நமக்குக் குருமேனி தாங்கிவந்து ஆட்கொள் ளும் நிலையை, வேடர்குலத்துப் பிறந்த வள்ளியாகிய உயிர், வேடர்சூழலி லேயே வளர்ந்து தன்னை வேட்டுவமகளாகவே எண்ணியிருந்தும், அதனைத் தெளிவிக்க முருகன் வேடனுகி, வேதியனுகி, தன்னுடைய உண்மை வடிவு காட்டி ஆட்கொண்டு, திருமணஞ்செய்துகொண்டு, இணையிலா இன்பவாரியில் தோய்ந்திருந்தார் என்ற வரலாற்ருல் விளங்கும் பகுதி மிகச் சிறப்பாக அறிந்துய்யவேண்டுவது ஒன்ருகும்.

இவ்வண்ணம் கந்தபுராணவரலாறு முழுமையுமே சைவசித்தாந்தக் கருத்தமைந்ததாக இருத்தல் எண்ணி உணர்ந்து உய்தற்குரியது.

# பிறவரலாறுகள்

**வியாக்கிராசுர சங்காரமூர்த்தி :**

திருமால் பிரமன் இருவரும் 'நாம் பெரியம்' எனப் பொருதனர். இருவரும் முடிவுகாண முடியாமையால் திருமால் யாகாக்கினியினின்று வியாக்கிரன் என்னும் அசுரனையும், பிரமன் யாகாக்கினியிலிருந்து மகிடாசுரனையும் எழுப்பிப் பொரச்செய்தனர். இருவரும் பொருது வெற்றிகாண முடியாமையால் தம்முள் ஒத்து வியாக்கிரன் அரசனாகவும், மகிடன் மந்திரியாகவும் இருந்து அரசாண்டு அனைவருக்கும் துன்பம் விளைத்தனர். இது கண்ட தேவர்கள் சிவபெருமானிடம் விண்ணப்பித்துக்கொண்டார்கள். பெருமான் ஆணையின்வண்ணம் வியாக்கிரனை முருகனும், மகிடனைத் துர்க்கையும் வென்றனர் என்பது வரலாறு. ஆதலால் முருகப்பெருமான் புலிமுகத்தரக்கனைக் கொன்ற கடவுளாயினர்.

**கஜாரூடர் :**

வாமனவதாரம் கொண்ட திருமால், தாரகாசுரனைக் கொன்ற நன்றிக்காகத் தவம்செய்து முருகனுக்குப் பிணிமுகம் என்னும் யானையாயினர் என்பது வரலாறு.

**மாதங்காரி :**

ததீசிமுனிவர் குபன் என்னும் அரசனோடு நட்பாக இருந்தார். குபனுக்கும் அவருக்கும் ஒருநாள், அந்தணவலியோ அரசவலியோ சிறந்தது என்ற வாய்ப்போர் மூண்டது. குபன் வச்சிராயுதத்தால் அடிக்கத் ததீசி முனிவர் இறந்தார். சுக்கிரனார் சஞ்சீவினி மந்திரத்தால் எழுப்பிக் குபனை நோக்கி, 'அரசகுமாரா! அந்தணர் பிழைசெய்யின் அவர்களைக் கொல்லுதல் தகாது; அரசநீதி தவறிக் கொன்றதால் நீ மதயானையாகுக' எனச் சபித்தனர். குபன் உவா என்னும் காட்டிலே மதயானையாகத் திரிந்தான். தேவர்முதல் அனைவரும் அஞ்சினர். சற்புத்திரன் என்ற வணிகன் ஒருவன் விதிப்படி கந்தவிரதங்களை அனுட்டித்து முருகன் ஆணையின்வண்ணம் கதிர்காம

வழிபாட்டிற்காகப் புறப்பட்டுச்சென்ருன்; நடுக்காட்டில் குபயானையைச் சந்தித்தான்; அஞ்சினன். முருகன் அக்கணமே வேடரூபத்துடன்தோன்றி அந்த யானையைக்கொன்று வணிகனைக் காப்பாற்றினர்.

**சீகரமூர்த்தி :**

உச்சயினியில் சந்திரசேனன் என்ற அரசனிருந்தான். அவனிடம் சிந்தாமணி என்னும் இரத்தினம் இருந்தது. அதனைப் பிடுங்கிக்கொள் வதற்காக அவனியில் அரசர் அனைவரும் படை எடுத்து வந்தனர். சந்திர சேனன் சிறிதும் அஞ்சாமல் மாகாளேசுவரப்பெருமானைப் பூசித்துவந்தான். அங்ஙனம் இருக்கையில் இடைமகன் ஒருவன் சந்திரசேனமன்னனைப் போலவே தானும் சிவலிங்கபூசனை செய்ய எண்ணினன்; மணலால் சிவலிங்கம் செய்து வழிபட்டான். தாய், அச்சிவலிங்கத்தைக் கலைத்துச் சென்ருள். இடைக்குமரன் மூர்ச்சையாயினன். தெளிந்து எழுந்ததும் அவ்விடத்தில் சிறந்த சிவாலயமும் சோதிவடிவான சிவலிங்கமும் இருக்கக் கண்டு பூசித்தான். அவன் தாயும், இதைக்கண்டு வியந்து அரசனிடம் அறிவித்தாள். அந்த நகரை முற்றுகையிடவந்த மாற்ருர்கள் அனைவரும் கண்டு வியந்து, சந்திரசேனனை வணங்கிச் சீகரன் என்னும் அவ்விடைக் குமரனையும் போற்றித் திரும்பிச் சென்றனர். இச்சீகரனே கண்ணனுடைய எட்டாந்தலைமுறைப் பாட்டன். இச்சீகரன் முருகனை நோக்கித் தவம் செய்து அருள்பெற்ருன். ஆதலால் இம்மூர்த்தி சீகரமூர்த்தி என வழங்க லாயிற்று என்று பிரமோத்தரகாண்டத்தும், திருச்செந்தூர்ப்புராணத்தும் அறிவிக்கப்படுகிறது.

**யாகரட்சக மூர்த்தி :**

திதியின் வேண்டுகோளுக்காகக் காசியபர் புத்திரகாமம் என்னும் தலத்தையடைந்து, தேவர்களை அழிக்கத்தக்க புதல்வனை விரும்பி யாகம் செய்தார். யாகத்தினின்றும் முருகன் தோன்றி, காசியபருக்கு அருள் செய்தார். காசியபர், அவ்விடத்திலேயே முருகனை என்றும் எழுந்தருளும் படி வேண்டிக்கொண்டார். முருகனும் அங்ஙனமே எழுந்தருளி, அந்தணர் செய்யும் வேள்வியைக் காத்திருக்கிருர்.

**நல்லியக்கோடனுக்கு அருள்செய்தது :**

ஏறுமாநாட்டு நல்லியக்கோடனைக்கண்டு பொருமையுற்ற மூவேந்தர் களும் அவனுடைய நகரங்களாகிய எயிற்பட்டினம், ஆமூர், வேலூர்,



அழகர்கோவிலும் - பழமுதிர்சோலைமலையும்.



மழவிடை ஏறி மகிழ்வோன் குமரன்
கிழமுதிர் இளநளங் காட்டிய பழமுதிர்சோலை.

மூதூர், இலங்கை இவைகளை முற்றுகையிட்டனர். அப்போது கோடன் ஆமூர்க்கண் தங்கி இருந்தான். கடும்போர் நடந்தது. கோடனுடைய அமைச்சர்களுள் ஒருவன் மாற்றூர்பக்கல்சார்ந்து உளவுகூறுவானுயினுன். அதனுல் இவன்படை தோற்றது. கோடன் மனம் வருந்தி, இரவே தன் மனைவியுடன் புறப்பட்டு. வேலூர்க்கோட்டை சென்று, அங்கு முருகனை வழிபட்டு வந்தான். முருகக்கடவுள் அவன்கனவிற்றேன்றி 'அன்பனே! அஞ்சற்க; நீ நீராடும் கேணியிலுள்ள பூவைப்பறித்து நம் மந்திரத்தைக் கூறிப் பகைவர்மேல் செலுத்துக; வெற்றி உனதாகும்' என்றருளி மறைந்தனர். நல்லியக்கோடனும் அங்ஙனமேசெய்து வெற்றிகண்டான். தான் இருந்த இடத்திற்கு வேலூர் எனப் பெயரிட்டு முருகனுக்கும் ஆலயம் கட்டிவைத்தான். சிறுபாணுற்றுப்படையில் "திறல்வேல் நுதியிற் பூத்த கேணி விறல்வேல் வென்றி வேலோர் எய்தின்" என வரூஉம் பகுதியும் அதற்குரிய நச்சினுர்க்கினியருரையும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கன.

**இலை வேலானது :**

சிகண்டி என்னும் முனிவர் செந்தமிழுணரவேண்டி, திருவேங்கட மலைக்கண் உள்ள செவ்வேட்பெருமானைப் பூசித்தார். செவ்வேட்பெருமான் வெளிப்பட்டு 'நம் மாணுக்கன் அகத்தியனிடம் அறிக' என்று அறிவுறுத்தினுர். சிகண்டி அகத்தியரிடம் முத்தமிழ் கற்று, அனுகுலன் மகனுகிய சயந்தகுமரனுக்காக "இசைநுணுக்கம்" என்னும் ஓர் நூலைச்செய்தார். அகத்தியர் ஆணைப்படிச் சிகண்டி கதிர்காமவழிபாட்டிற்குச் செல்லும் போது யானையொன்று வழிமறித்தது. சீடர்களும் பிறரும் அஞ்சினர். சிகண்டி ஒரு வெற்றிலையை எடுத்து, 'இது வேலாகச்சென்று முருகன் திருவருளால் யானையை வெல்லுக' எனவிடுத்தார். வெற்றிலை வேலாகச் சென்று தைத்தது. இறந்த யானையிலிருந்து ஒரு கந்தர்வன் வந்துதோன்றி, 'என்பெயர் ஐராவசு; வியாழன் சாபத்தால் யானையாயினேன்; முருகன் திருவருளால் பழைய வடிவடைந்தேன்' என்றனன். அதுமுதல் முருகன் இலைவேற்கடவுளாயினர். இவ்வரலாறு காதிர்காம மான்மியத்து விரிவாகக் கூறப்பெற்றுள்ளது.

**ஓங்காரமலையின் உச்சியில் எழுந்தருளியது :**

வேதங்கள் சிவபெருமானை வழிபட்டுத் தாம் ஒரு மலையாகித் தாங்க வரம்பெற்றதை அறிந்த பிரணவம், தனக்கும் அப்பதவிவேண்டும் என

விரும்பிற்று. சிவபெருமான் அவற்றைநோக்கி 'நம் குமரனுடன் செல்க' என ஆணைதந்தார். அங்ஙனமே பிரணவம் திருப் பாரூரிற் சென்று முருகனை வழிபட்டது. முருகன் 'எல்லாமந்திரவடிவாகவும் எமது பிற்பக்கத்தில் சூழ்ந்து மலைவடிவாக இருக்க; நாம் நும் உச்சியில் வீற்றிருந்தருளுகிறோம்; உம்மை வேதங்களெல்லாம் நாடோறும் சேவிக்கும்' என்று திருவாய் மலர்ந்தார். பிரணவம் திருப்போரூர் மலையாகி முருகனோடு என்றும் விளங்கு கிறது. இவ்வரலாற்றைத் திருப்போரூர்ப்புராணம் நன்கு விளக்கும்.

**முட்டைப்பேர் ஏற்றது :**

சோழநாட்டிலே தஞ்சைவாணன்கோவையைப் பாடிய பொய்யா மொழிப்புலவர், சிவபெருமானையன்றி வேறு யாரையும் துதியாதவராய் இருந்தார். அவரிடம் முருகனடியார் ஒருவர் சென்று முருகனைப்பற்றிப் பாடவேண்டினர். புலவர் 'கோழியைப்பாடிய வாயால் குஞ்சைப்பாடேன்' என்றார். அடியவர் வருந்தி, செவ்வேட்பெருமானிடம் சென்று அதனை விண்ணப்பித்தார். முருகன், 'எங்ஙனமாவது அவர் வாயிலிருந்து உம் விருப்பப்படி நம்மைப்பற்றிக் கவிதைவரச் செய்வேன்; கவலற்க' என்று கூறி அவரைப்போக விடுத்தார். பின் ஓர்நாள் பொய்யாமொழியார் பாலை வனத்தின்மேல் போய்க்கொண்டிருக்கிறபோது முருகன் ஒரு வேடராய் வந்தார்; புலவரைநோக்கி நீர் யார்? என அதட்டினர். அஞ்சிய பொய்யா மொழியார் 'நான் ஒரு புலவன்' என்றார். வேடர் நகைத்து 'எம் குல தெய்வமாகிய முருகனையன்றி வேறு யாருக்குப் புலவன் என்ற பெயருண்டு? நீ புலவனாயின் பாடவருமோ?' என்று உரப்பினர். அதுகேட்ட புலவர் துணிவுபிறந்து 'ஆம்' என்றார். உடனே வேடமூர்த்தி, 'அங்ஙனமாயின் என் பெயர் முட்டை என்றமைத்து, தாய் மகளைச்சுரம்போக்கிய துறையில் ஒருவெண்பாப் பாடுக' எனப் பணித்தார். பொய்யாமொழிப்புலவர்,

> பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும் கானலிலே
> என்பேதை செல்லற் கியைந்தனளே - மின்போலும்
> மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
> கானவேல் முட்டைக்கும் காடு.

எனப் பாடினர். கேட்ட முட்டைவேடன் நகைத்து, கள்ளிப்பொறி பறக்கும் கானலிலே வேல்முள் குத்துமோ? என்றனர். 'அங்ஙனமாயின் நீயே பாடு பார்க்கலாம்' எனப் புலவர் சினந்தனர். உடனே வேடன்.

விழுந்ததுளி அந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடும் என்றும் – செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்திற் பெய்வளையும் சென்றனளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்.

என்று பாடினர். பாடலின்சுவை உணர்ந்த புலவர் வணங்கினர். முருகன் தன் உண்மை வடிவுகாட்டி 'அன்று எம் அன்பர் ஒருவர் கேட்டதற்குக் கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப் பாடேம் என்றீரே; குஞ்சைக் காட்டிலும் முட்டை பெரிதோ? என்று வினவினர். புலவர் தம் தவறு அறிந்து 'சிவமே முருகன்; முருகனே சிவம்' என்பதை உணர்ந்து அருள் பெற்று உய்ந்தார்.

**ஆயிரவரைக்காத்தது :**

சிவபூசையில் சிந்தையைப் பிறிதொன்றில் செலுத்திய குற்றத்திற்காக நக்கீரரைத் திருப்பரங்குன்றத்துக்குகையொன்றில் பூதம் அடைத்தது. இதே குற்றத்திற்கு முன் அடைபட்டிருந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பதின்மரும் நக்கீரரைக்கண்டு 'நம் ஆயிரவர் வாழ்வும் இன்றோடு முடிந்தது' என வருந்தினர். நக்கீரர் முருகனை நோக்கித் திருமுருகாற்றுப்படை பாடி எல்லோரையும் உய்வித்தார். இந்தவரலாற்றைத் திருப்பரங்கிரிப் புராணமும், திருக்காளத்தி புராணமும், திருவிளையாடற் புராணமும் தெரிவிக்கும்.

**வரதராசமூர்த்தி :**

காசிபரும் கபிலரும், பிரமனே முதற்கடவுள்; திருமாலே முதற்கடவுள் எனத் தம்முள் மாறுபட்டனர். துருவாசர், அவர்கள் முதற்கடவுள் அல்லர்; உலகத்திற்கு எவன் சங்காரகாரணனோ அவனே முதற்கடவுள் என வாதித்தனர். வாதித்தும் அவ்விருவர் மனமும் தெளியாமையால் இலஞ்சி முருகனே அவர்களுக்கு அறிவிக்கவேண்டும் என்று முருகன் சன்னிதியில் முறையிட்டார். முருகக்கடவுள் வெளிப்பட்டு முதல்வன் சிவனே என்பதைத் தெளிவித்தார். மேலும் சிவமே தானாகிய நிலையையும் அவர்களுக்குத் தெரிவித்தார். இந்த வரலாற்றைத் திருச்செந்தூர்ப் புராணத்தால் அறியலாம்.

**ஐம்படைகொடுத்தது :**

திருமால் தாரகனுலும் ஏனையோராலும் தன் படைக்கலமிழந்து வருந்திப் பின்னர் நாரதர் உபதேசத்தின்படி குமாரக்கடவுளை நோக்கி நோற்று, ஐம்படையையும் அடைந்தார். இதனைத் தணிகைப்புராணத்து,

" சார்ங்கமும் மற்றவும் சாமி அளித்தான் "

என்ற பகுதி அறிவிக்கும்.

**யோகாசாரியர் :**

பிங்கலர் முதலிய முனிவர்கள் சித்திகளை அடையும் உபாயம் யாதென்று தம்முட் பிணங்கியபோது, நாரதர் குமாரக்கடவுளே யோக இயல்பு உணர்த்துபவர் என அறிவித்தார். முனிவர்களும் அவ்வாறே முருகனை வழிபட்டு யோக உண்மைகள் பலவற்றையும் அறிந்தனர். இந்த வரலாற்றை,

அக்கினியிற் பொறிவடிவா யுதித்தனில வனற்றேவ ரவரே தாங்க
மிக்கினிய சரவணத்திற் சார்ந்துவிளை யாடுமொரு வேலோன் காற்றைத்
தொக்கினிலேற் றெழுப்பியனல் சுவாலிக்கச் செயும்யோகத் துணைவர் முன்னர்
அக்கனிய கரக்கபிலன் முதலானோர்க்குப் போதித்தான் அவற்றை மன்னே.

என்ற யோகதரிசன செய்யுள்கொண்டு அறியலாம்.

**குழந்தை வேலப்பர் :**

பழனியில் சுவணகுத்தன் என்ற செட்டி ஒருவனிருந்தான். அவன் மனைவி மகேசை. அவர்கள் பிள்ளைப்பேறின்மையால் வருந்தி, நாராயணனை நோக்கித் தவம்கிடந்து, அவனருளால் ஒரு ஆண்குழந்தையைப் பெற்றனர். அந்தக்குழந்தை ஐந்துவயதளவில் நீராடச் சென்றபோது நீருள் மூழ்கித் திருமால் கைக்குச் சங்காயிற்று. நீராடச்சென்ற குழந்தை வாராமல் போனவுடன் பெற்றோர்கள் வருந்தி முருகனை வேண்டினர். முருகன் குழந்தைவேலப்பனாக வெளிப்பட்டார். செட்டியாரும் அவர் மனைவியும் இழந்த குழந்தையைப் பெற்றதால் பெருமகிழ்வு எய்தினர். முருகன், செட்டியாருக்கு உண்மை உணர்த்தத் திருவுளங்கொண்டு, கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே ஒரு திருமுருகனைக் காட்சியளித்தார். 'நீங்கள் எமக்கு வழிவழித் தொண்டுபூண்டமையால்

யாம் மகனுக வந்தோம்; நும்மகன் திருமால் திருக்கரத்துள்ள பாஞ்ச சன்னியம் ஆவன்; நீங்கள் பட்ட துயர்கண்டு யாம் உமக்குப் புத்திரனுக வந்தோம்' என்று கூறி மறைந்தருளினுர். வணிகனும் மனேவியும் சிலகாலம் முருகனே வழிபட்டு அவன் திருவடியடைந்தனர். இவ்வரலாற்றைப் பழநித் தலபுராணத்துச் சுவணகுத்தச் சருக்கத்தால் அறியலாம்.

**கோரனேக்கொன்றது :**

சூரியகுலத்துப் பகீரதன் அரசாளுங்காலத்துக் கோரன் என்னும் அரக்கன் அமரர் முதல் அனைவரையும் வென்று பகீரதனையும் எதிர்த்தான்; பந்துபோற்சுழற்றி வீசினுன். பகீரதன் கோரனேடு சண்டையிட முடியாது எனத் துணிந்து மனேவிமாரோடும் வனங்கள்தோறும் சென்று வசித்தான். பிருகுமுனிவரைக் கண்டான். அவர் ஆணையின்வண்ணம் சுக்கிரவார விரதத்தை அனுஷ்டித்தான். முருகன் வெளிப்பட்டு அரக்கனே அழித்துப் பகீரதனுக்கு அரசு அளித்தார். இந்த வரலாறு கந்தபுராணத்துக் கந்தவிரதப் படலத்தில் கூறப்பெற்றுளது.

**இடும்பனே ஆட்கொண்டது :**

இடும்பன் என்பவன் சூரபன்மன் முதலியவர்கட்கு வில்வித்தை யளித்த அசுரர்குலத்தலைவன். சூரபன்மன் அழிந்த பிறகு தனது மனேவி இடும்பியோடு பொதியமலைக்கு வந்தான். அகத்தியரைக் கண்டான். அவர் 'திருக்கேதாரத்துக்குப் பக்கலிலுள்ள பூர்ச்சவனத்திலே சக்திசிகரம் சிவ சிகரம் என இரு மலைகள் உள்ளன; அவற்றை இங்குக் கொண்டுவருவா யாயின் உனக்கு எல்லா நன்மையும் உண்டாகும்' என்று கூறி முருக னுடைய மூலமந்திரத்தையும் உபதேசித்தார். இடும்பன் அவர் உபதேசப் படி வடக்கே சென்று இரு மலைகளையும் காவடியாகத் தூக்கிக்கொண்டு பொதிகைக்குப் போகின்றபோது, இடையில் பழனியை அடைந்தான். முருகன் திருவிளையாடலால் மலைகள் மிக்க சுமையுடையனவாகத் தோன் றின. காத் தண்டை அங்கேயே இறக்கிவைத்துவிட்டு, இடும்பி கொடுத்த பழம் முதலியவற்றை உண்டு இளைப்பாறினுன். மீண்டும் மலைகளைத்தூக்க முயற்சிக்கும்போது மலை மேலெழாமைகண்டு மிக்க சினத்துடன் சிவகிரி யின் உச்சியை நோக்கினுன். அங்கே அழகே வடிவாய் ஆயிரகோடி சூரிய ஒளியுடன் குமரக்கடவுள் நின்றுகொண்டிருந்தார். அசுரன் அவரைக்கண்டு நகையாடி 'இம்மலையைவிட்டு நீ இறங்கு' என்றுன். முருகன் மறுத்து 'உனக்கு வலியுள்ளதாயின் தூக்கிச்செல்லுக' என்றுர். அசுரன் சினந்து,

குராமரவடிவுடன் முருகன்மேற் பாய்ந்தான். உடனே சுடர்வேல் அவனைக் கொன்றது. இடும்பி முருகனிடம் மங்கிலியப்பிச்சை கேட்க, முருகன் அருளால் இடும்பன் உயிர்பெற்றெழுந்து அடிமையானான். இதனைப் பழநித்தலபுராணத்து மலைகள் பழநியடைந்த சருக்கத்தால் அறியலாம்.

**உலகமுழுவதையும் ஒருகணத்தில் சுற்றியது :**

நாரதர் இறைவன் புகழையமைத்து மகரியாழை வாசித்தார். அது கேட்டு மகிழ்ந்த பிரமதேவன் அவருக்கு ஒரு மாதுளம்பழத்தைக் கொடுத்தான். நாரதர் அதனைச் சிவபெருமான் திருவடிகளில் சேர்ப்பித்தார். பெருமான் 'எவன் ஒருவன் உலகத்தை ஒருகணத்தில் சுற்றிவருகிறானோ அவனுக்கு இப்பழத்தை அளிப்பேன்' என்றார். முருகன் மயில்வாகனத்திலேறி உலகை ஒருகணத்துள் வலம் வந்தார். விநாயகர் 'உலகமெல்லாம் இறைவன் திருமேனியன்றோ? அவனை வலம்வரின் உலகமுழுவதையும் வலம்வருவதையொக்கும்' எனவெண்ணி அவ்வாறே செய்து பழத்தைப் பெற்றார். முருகன் உலகமெல்லாம் சுற்றி, தாமே உலக உரு என்பதை அறிவித்தார். இவ்வரலாறு பழநித்தலபுராணத்துத் திருவாவினன்குடிச் சருக்கத்தால் அறியலாம்.

**தண்டபாணி :**

விநாயகப்பெருமான் பழம்பெற்றமையால் பிணக்குற்ற பிஞ்ஞகன் மகன், தண்டபாணியாக வெளிப்பட்டார். இதனைத் திருவுளம் கொண்ட இறைவனும் இறைவியும் 'சிவமாகிய யாமே நீ; நீயே யாம்; நம்மில் வேறுபாடில்லை; நின்னை வலம்வந்தவர் எம்மை வலம்வந்தவராவர்; பழம் நீ' என்று பாராட்டினர். இதனைப் பழநித்தலபுராணத்தில் விரிவாயறியலாம்.

**திருச்செந்தூர்ப்புராணத்தைச் சேமித்துவைத்தது :**

திருச்செந்தூரிலே முக்காணியந்தணர்மரபில் வென்றிமாலை ஐயர் என்பவர் ஒருவரிருந்தார். அவர் சிறிதும் கல்வி கல்லாமையால் திருக்கோயிற் பரிசாரகரானார். ஒருநாள் திருவமுது சமைக்கக் காலம் தாழ்த்தமையின் தலத்தார் கடுந்தண்டனை விதித்தனர். அதனால் வெட்கிய அவர் உயிர்விடக் கடலில் விழுந்தார். கந்தப்பெருமான் வெளிப்பட்டு "நீ மகாகவியாவாய்; இகழ்ந்தாரனைவரும் ஏத்துவர்; அஞ்சற்க; இத்தலபுராணத்தைச் செந்தமிழ்ச் செய்யுளால் இயற்றுக' எனக்கூறி அருள் வழங்கினர். வென்றிமாலைஐயர்

கந்தவேள் அறிவித்தவண்ணம் செவ்வல் கிருஷ்ணசாஸ்திரிகளிடம் சென்று வரலாறுகளைத் தெரிந்துகொண்டு, திருச்செந்தூர்ப் புராணத்தை இயற்றியருளினர். முக்காணிமாரும் பிறரும் 'பரிசாரகன் பாட்டை அரங்கேற்ற வொட்டோம்' என்று தடுத்தனர். கவியரசர், ஏட்டைக் கடலில் போட்டு விட்டுச் சிவயோகத்தமர்ந்து சிவபதமடைந்தார். அவ்வேடு யாழ்ப்பாணத்தின் வடபாகத்திலுள்ள 'உபய கதிர்காமம்' என்னும் புதுச்சன்னிதியை அடைந்தது. அங்கே முருகதாசர் என்பவர், கந்தப்பெருமான் கனவில் அறிவித்தவண்ணம் பலபடிகள் செய்வித்து முருகன் ஆலயங்களுக்கும், மடங்களுக்கும் அனுப்புவித்தார். ஒருகாலத்து அவ்வூர் முழுதும் தீக்காற்று வீசியது. அதனுற் பலரிறந்தனர். புராணம் இருந்த தெருமட்டும் தப்பியது. அதனை உணர்ந்த அத்தெருமக்கள் இல்லங்கள்தோறும் ஒவ்வொரு ஏடு எழுதிவைத்துப் பரிபாலித்தனர். இவ்வரலாற்றைத் திருச்செந்தூர்ப்புராணச் சிறப்புப்பாயிரத்தால் அறியலாம்.

**வாசுகிக்கு அருள்வழங்கியது :**

மந்தரமலையைச்சுழற்றி அமுதம் கடைந்தமையால் உண்டான புண் வாசுகிக்கு ஆருமலே இருந்தது. சிவபெருமானுக்கு நஞ்சூட்டிய பாவத்தால் வந்த நலிவு என்று வாசுகியானது எண்ணி, முருகனை வழிபட்டு அருள் பெற்றுத் துயர்நீங்கி உய்ந்தது. இதனைக் கந்தலகரியாலும், தணிகைப் புராணத்து நாகம் அருள்பெறுபடலத்தாலும் அறியலாம்.

**பிரமனுக்கு அருள்வழங்கியது :**

பிரமன், தான் செய்த சிவநிந்தைக்காக அவரால் ஒருசிரம் கொய்யப் பெற்று மூர்ச்சையானுன். மூர்ச்சை தெளிந்து முருகனைத் தலைப்பட்டு அவராணையின்வண்ணம் திருச்செந்தூர் சென்று திருச்சீரலைவாயில் மூழ்கி நாலாயிரம் யுகம் பூசித்துத் தவம் இருந்தான், செந்திலாண்டவனுக்கு விமானமாகப் பல்லாயிரம் யுகம் பணிபுரிந்தான். முருகன் அருளால் ஐந்து தலையும் படைப்புத் தொழிலும் போகங்களும் கைவரப்பெற்றுய்ந்தான். இதனைத் திருச்செந்தூர்ப்புராணம் விளக்கும்.

**செந்தமிழ்ச்சுவை கண்டது :**

தெய்வப்புலமை கைவரப்பெற்ற ஔவையார் ஒருமுறை வழி நடையால் வருந்தினர். அவள் வரும்வழியில் முருகப்பெருமானர், மாடு மேய்க்கும் சிறுவனுருக்கொண்டு ஓர் நாவன்மரத்தின்மேல் ஏறியிருந்தார்.

ஒளவையார் அச்சிறுவனைச் செவ்வேள் என்று அறியாது, 'குழந்தாய்! பசிநீங்கப் பழம் தா' என வேண்டினர். அதற்கு அச்சிறுவன், 'பாட்டி! சுடுகனிவேண்டுமா? சுடாக்கனிவேண்டுமா? என வினவினன்.

ஒளவை வியப்பும் திகைப்பும் மேலிட்டவளாய், கனியுள் சுடுகனி சுடாக்கனியென உண்டோ என்று மயங்கி, அவ்வாறு உளதாயின் அதனை அறிவோம் என்று எண்ணி, சுடுகனி தரவேண்டினுள். சிறுவனும் அளிந்த கனியொன்றை அறுத்துத் தரைமீது வீச, ஒளவை அக்கனிமேல் ஒட்டிய மண் நீங்குவதற்காக வாயால் ஊதினுள். அதுகண்ட அச்சிறுவன், பாட்டி! பழம் சுடுகிறதோ எனக்கூறி நகைத்தான். ஒளவை நாணம் அடைந்து 'சிறு கடலைக் குறுமுனிபருகினன்; சிற்றுளி பெருமலையைத் தகர்க்கிறது; சிறுவ னிடத்து உறுதியுடைய சொல் உண்டு; எவராலும் வெல்லப்படாத யான் இச்சிறுவனுல் வெல்லப்பட்டேன்' என்று தன் இறுமாப்பு நீங்கினுள். உடனே உலகமுய்விக்கும் உண்மைக்கடவுளாகிய முருகப்பெருமான் தன் உண்மையுருவம்காட்டி ஒளவையை ஆனந்தவெள்ளத்தாழ்த்தினுர்.

பின்பு, பைந்தமிழ்ச்சுவை பருக எண்ணிய முருகன் ஒளவையை நோக்கி இனியது எது? கொடியது எது? அரியது எது? பெரியது எது? என வினவ, அதற்கு ஒளவை,

இனியது கேட்கின் தனிநெடு வேலோய் !
இனிது இனிது ஏகாந்தம் இனிது
அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்
அதனினும் இனிது அறிவுள் ளாரைக்
கனவினும் நனவினும் காண்பது தானே.

என்றும்,

கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய்!
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினும் கொடிது இளமையில் வறுமை
அதனினும் கொடிது ஆற்றெணுக் கொடுநோய்
அதனினும் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினும் கொடிது
இன்புற அவள்கையில் உண்பது தானே.

என்றும்,



வேள் விருப்பகலா விண்பொழி கங்கை
வேங்கட மலையின் விளக்கம் இதுவே.



வெப்பந்தணிய மக்கள் வணங்குறும்
தெப்பக்குளஞ்சேர் திருப்பதி இதுவே.

அரியது கேட்கின் வரிவடி வேலோய்!
அரிதரிது மானுட ராதல் அரிது
மானுட ராயினும் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செயல் அரிது
தானமும் தவமும் தான்செய்வு ராயினும்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

என்றும்,

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்!
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன்
கரிய மாலோ அலைகடல் துயின்றோன்
அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம்
குறுமுனி யோகல சத்தில் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ அரவினுக் கொருதலை பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறைவர் பாகத் தொடுக்கம்
இறைவர் தொண்டர் உள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

என்றும் சமத்காரமாகவும் விரைவாகவும் விடையிறுக்க, விடையேறிய விமலன்மகன் கேட்டு மகிழ்ந்து, ஔவைக்கு அருள்செய்தனர். இந்த வரலாறு தமிழ்நாவலர்சரிதை முதலியவற்றாலறியப்படுகிறது.

**வித்துவமூர்த்தி :**

காஞ்சிபுரம் குமரகோட்டத்து அருச்சகராகிய கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள், கந்தனருளால் கந்தபுராணமியற்றி அறிஞர்பேரவையில் அரங்கேற்றச் சென்றபொழுது கந்தபுராணக் காப்புச்செய்யுளாகிய 'திகடசக்கரச் செம்முகமைந்துளான்' என்ற செய்யுளின் உரைகூற நேர்ந்தது. அவையில் உள்ள புலவர் ஒருவர் எழுந்து திகழ்+த சக்கரம் என்பது திகடசக்கரம்

என்று வருதற்கு விதியாது? என்று வினவினர். மெய்வழிநிற்கும் கச்சியப்ப சிவாசாரியர் 'இப்பகுதி எம் வாக்கன்று; இறைவன் வாக்கு' என்று உரைத்தனர். புலவர், 'இறைவன்மேலேற்றின் அது இறைவனுடைமைக்கு இழுக்கன்றோ! ஆதலால் இதற்கு விடையருளி மேலே தொடர்க' என்றனர். கச்சியப்பசிவாசாரியர் நாளை விடையிறுப்போம் என்று மறுமொழி கூறி, வழக்கம்போலப் பூசை முடித்துக்கொண்டு, அன்றிரவு ஒன்றுமருந்தாது அறுமுகக்கடவுளின் அடித்துணையை அகத்துட்பதித்து, அயர்ந்து உறங்கினர். குமாரக்கடவுள் கச்சியப்பர்கனவில் காட்சிதந்து 'கவலற்க; சோழ நாட்டுப் புலவன் ஒருவன் வருவான்; ஐயமகற்றுவான்' என்று அறிவித்து மறைந்தனர். சிவாசாரியர் வழக்கப்படியே பூசை முடித்துக்கொண்டு அவைக்கண் சென்று நிகழ்ந்தவற்றை அறிவித்தார். அனைவரும் அறுமுகன் அருளிய புலவர் வரவை எதிர்நோக்கியிருந்தனர். முருகன் புலவர்வேடந் தாங்கி எழுந்தருளிவந்து வீரசோழியம் சந்திப்படலம் பதினெட்டாம் செய்யுளை எடுத்துக்காட்டி நிறுவப் புலவர்கள் புலம் கண்டு மகிழ்ச்சி அடைந்தனர். புராணம் இனிது அரங்கேறியது.

பத்தித் திருமுகம் ஆறுடன்
    பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண்
    டேன்;செயல் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப்
    பெருகிப் புவனம்எற்றித்
தத்திக் கரைபுர ளும்பர
    மானந்த சாகரத்தே.

—*கந்தரலங்காரம்.*

# சில வழக்காறுகள்

முருகன், சுப்பன், சுப்பராயன் என்று தமிழ் தெலுங்கு கன்னட நாட்டு மக்களால் வழங்கப்படுகின்ருர். இவர் பாம்புகட்குத் தலைவன் ஆதலால் வீட்டில் பாம்புவந்தால் மக்கள் சாம்பிராணித்தூபமிட்டு ''சுப்பா ஓடிப்போ'' 'சுப்பராயா ஓடிப்போ' 'அச்சுறுத்தாது அகன்றுபோ' என்று இன்றும் வேண்டிக்கொள்ளுகிருர்கள். நாகங்களை வென்றடக்கும் ஆற்றலுக்காகவே இவருக்கு மயில்வாகனம் அமைந்தது என்று கருதுவதும் உண்டு. காடுகளிலும் மலைகளிலும் இன்றும் பாம்புவணக்கம் உண்டு. இதுபற்றி, பழமையான பாம்புவழிபாடே முருகன் வழிபாடு ஆயிற்று என்று கூறுவாரும் உளர்.*

இன்றும் தென்னிந்தியாவில் தண்டபாணியாயிருக்கும் பிரமசரிய மூர்த்தியை முன்னிட்டு, ஐப்பசிமாத ஸ்கந்தசஷ்டியில் பாம்புவழிபாடு செய்து பிரமசாரிகட்கு உணவும் உடையும் வழங்குவது வழக்கம்.

களவுப் புணர்ச்சியால் வள்ளியை மணந்த கந்தன், கர்ணீசுதர் என்னும் முனிவரைச் சீடராகப்பெற்றிருந்தான் என்று மிருச்சகடிக வியாக்கியானக் குறிப்பு கூறும். இந்தக் கர்ணீசுதரின் மாணுக்கர் கசர். கசரால் செய்யப்பெற்றது ஸ்தேயசாத்திரம் என்னும் களவுநூல் என்பதை ''ஈங்கு இவன் கொலைப்படு மகனலன்'' (சிலம்பு) என்று கூறும் வேற்காரரைப் பார்த்துக் கருந்தொழிற்கொல்லன் காட்டிய இலக்கண முறைமைக்கு ஐயர் அவர்கள் எழுதும் அடிக்குறிப்பாலறியலாம். மிருச்சகடிகத்தில் சர்விலகன் என்னும் திருடன், திருடப்போம்போது கந்தரை வழிபட்டுச்செல்கிருன் என்ற குறிப்பு காணப்படுகிறது. இதனுல் நல்லவர்கள் வெற்றிக்கும், வீரத்திற்கும், வித்தைக்கும் வணங்கும் முருகனை, மற்றவர்கள் களவுக்கும் வணங்கினுர்கள் என்பது அறியப்படுகிறது.

---

* In an unexplained way there exists an intimate connexion, between the worship of Subramanya and of the serpent. The day of lunar month (shashti) is held as peculiarly sacred to Subramanya, as to the serpent God.

—*''South Indian Images'' Pages 177 - 8.*

# முருகன் விரதங்கள்

விரதங்கள் மன ஒருமைப்பாட்டிற்காக மேற்கொள்ளப்படுவன. விரதங்கள் என்ற சொல்லுக்கே மேற்கொள்ளப்படுவன அல்லது வரிக்கப் படுவன என்பது பொருள். உடலிலுள்ள வலிமை உள்ளத்தைப் பொறி வழியாகப் புலன்வழிப்படுத்தும். உடலை வயப்படுத்த உண்டி சுருக்குதலும், உண்டி ஒழிதலும் வேண்டும். விரதங்கள் உடலின் வன்மைக்கு ஏற்ப மேற்கொள்ளப்படுவனவாகும். "உடலளவு விரதம்" என்பது பழமொழி.

ஊனினை உருக்க உள்ளொளி பெருகும். உள்ளொளியே இறை விளக்கம். இறைவிளக்கமே கருணையின் பொலிவு. மக்கள் எதிர்நோக்குவ தெல்லாம் கருணையின் பொலிவால் கவலையற்ற வாழ்வும், என்றும் மாறாத இன்பப்பேறுகளுமே. இவற்றை எளிதில் அடைவிப்பன விரதங்களே. விரதங்களில் முருகனைப்பற்றியன மூன்று. அவை வாரவிரதம், நாள்விரதம், பட்சவிரதம் என்பனவாம். முருகன் விரதங்களாகிய மூன்றும் எள்ளளவும் நெறி பிழையாமல் விதிப்படி அனுட்டிக்கத்தக்கன.

**வெள்ளி விரதம் :**

வார விரதங்களுள் வெள்ளி விரதம், ஐப்பசிமாதம் முதல்வெள்ளி தொடங்கி வெள்ளிதோறும் மேற்கொள்ளத்தக்கது. வைகறையில் எழுந்து காவிரி முதலிய புண்ணிய தீர்த்தங்களில் நீராடி, நாட்கடன்களை முறையாக முடித்துக்கொண்டு, முருகனைத் தியானித்தல் வேண்டும். வீட்டில் தூய்மை யானதோரிடத்தில் நெல்லைப் பரப்பி, அதன்மேல் நீர் நிறைந்த பொற் கலசத்தைவைத்து, மாவிலை, தருப்பை, கூர்ச்சம், மாலை, ஆடை முதலிய வற்றால் அலங்கரித்து, பொன்னாலியன்ற முருகன் திருவுருவத்தை அதன் மேல் எழுந்தருளப்பண்ணி, விதிப்படி பூசித்தல்வேண்டும். அன்றுமாலை ஆலயம்சென்று வழிபாடுசெய்து முருகனுக்கு நிவேதித்த பழம் முதலியன வற்றை அருந்துதல் வேண்டும். மறுநாள் நீராடி நாட்கடன்களை முடித்துக் கொண்டு, கும்பத்தையும் முருகனுருவையும் பூசித்து, அவைகளை அந்தணர் கட்குத் தானம் செய்யவேண்டும். பின், சிவனடியார்களுடனிருந்து ஒன்பது

நாழிகைக்குள்ளாகப் பாரணம் செய்தல் வேண்டும். இந்த விரதத்தை சித்திரைமாதம் முதல்வெள்ளிக்கிழமை தொடங்கி மேற்கொள்ளுதலும் உண்டு.

இந்த விரதத்தை மேற்கொண்டவர்களில் பகீரதன் சிறந்தவன். பகீரதன் ஆட்சிக்காலத்தில் உலகத்தைக் கோரன் என்னும் அசுரன் கவர்ந்து கொண்டான். பகீரதன், மனைவி மக்களோடு காட்டுக்குப் போனான். பார்க்கவர் என்னும் முனிவர் அவன் நிலையைக்கண்டு 'நீ மூன்றாண்டு வெள்ளிவிரதம் நோற்பாயாக; உன் பகை ஒழியும்; அரசு எய்தலாம்' என்று அறிவித்தார். பகீரதன் அங்ஙனமே வெள்ளி விரதத்தை முறைப்படி மேற்கொண்டு அரசு எய்தினான்.

**கார்த்திகை விரதம் :**

கார்த்திகைமாதக் கார்த்திகை முதலாக, கார்த்திகைநட்சத்திரங்க டோறும் பன்னிரண்டாண்டு மேற்கொள்ளத்தக்க விரதம். கார்த்திகைக்கு முதல்நாள் நண்பகல்மட்டும் உண்டு நாள்முழுதும் உண்ணாமலிருந்து மறுநாட்காலை ஒன்பது நாழிகைக்குள் உணவு உட்கொள்ளவேண்டும். இவ்விரதத்தை மேற்கொள்பவர் மேலானபதவிகளை எய்துவார்கள். நாரத முனிவர் இவ்விரதத்தைப் பன்னிரண்டாண்டுகள் மேற்கொண்டு, வெள்ளி விரதத்திற்குக் கூறியதுபோல விதிமுறைப்பூசனையாற்றி, எல்லா முனிவர் களினும் மேலான பதவியைப் பெற்றார். இவ்விரதகாலத்தில் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்கள்: ஒருகைத் தண்ணீரை உணவாகக் கொள்ளுதல், தருப்பையில் படுத்தல், புணர்ச்சி தவிர்தல், கந்தபுராணம் படித்தல் கேட்டல், கார்த்திகை முழுதும் தூங்காது விழித்தல் முதலியன. இந்த விரதத்தை அந்தணன் ஒருவன் நோற்று மனுமன்னனாகி உலகாண்டான். மற்றொரு மறையவன் நோற்று நினைத்தன யாவும் நிறைவேறப்பெற்றான். இங்ஙனம், கார்த்திகை விரதத்தை முறைப்படி நோற்றுக் கரையேறிய வர்கள் எண்ணிக்கை கணக்கிலடங்காதன.

**சஷ்டிவிரதம் :**

இவ்விரதம், ஐப்பசிமாதத்துச் சுக்கிலபட்சத்துச் சஷ்டி தொடங்கி ஓராண்டில் வரும் இருபத்துநான்கு சஷ்டிகளிலும் அனுட்டிக்கப்படுவது. ஐப்பசிமாதத்துச் சஷ்டியே ஸ்கந்தசஷ்டி எனச் சிறப்பித்துப் பேசப் படுவது. இது சுக்கிலபட்சப் பிரதமை முதல் ஆறு நாளும் உமிழ்நீரும்

உள்ளே விழுங்காதபடி அனுட்டிக்கத்தக்கது. இவ்வண்ணம் செய்ய இயலாதவர்கள், நண்பகலில் ஒவ்வொரு முறை ஆறு மிளகையும், ஆறு கை நீரையும் அருந்தலாம். உடல்வளம் பெருக்கும் இக்காலத்து உண்ணு விரதம் போலாது, உயிர் உணர்ச்சி வளர்க்கும் விரதமாதலின், உப்பு நீரை அருந்துதலும், எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, இளநீர் இவை களை அருந்துதலும் அறவே கூடாது. ஸ்கந்தசஷ்டி விரதநாட்களில் ஒவ் வொரு நாளும் விடியற்காலை நாலுமணிக்கே எழுந்து, நாட்கடன்களை முடித்துக்கொண்டு, திருநீறு பூசி, வடதிசைநோக்கியேனும் தென்திசை நோக்கியேனும் இருந்து, முருகனைத் தியானித்து, பின்னர் விதிப்படி சிவ தீர்த்தத்திலேனும், காவிரி கங்கைமுதலிய புண்ணிய ஆறுகளிலேனும் நீராடி, தோய்த்துலர்ந்த ஆடைகள் இரண்டை உடுத்திக்கொண்டு, அனுட்டானங் களைச்செய்து, முற்கூறியபடி, தம்பத்திலும், விம்பத்திலும், கும்பத்திலும் முருகனையே வழிபட்டு, இரவில் நெய்யிற்சமைத்த மோதகத்தை நிவேதித்து விதிப்படிப் பூசை செய்தல்வேண்டும். ஏழாம்நாட்காலையில் விதிப்படிச் சிறப்புவழிபாடுகள் ஆற்றி, சிவனடியாருடனிருந்து பாரணம் செய்தல் வேண்டும். இவ்விரதத்தை முறைப்படி நோற்றுப் பயன் எய்தினோர் பலர்; எய்துவோர் பலர். தேவர்கள் இங்ஙனம் வழிபட்டே இழந்த பதவியைப் பெற்றனர். இவ்விரதங்களை ஒருமனப்பாட்டுடன் மேற்கொள்ளுவோர் எல்லா இன்பங்களையும் எய்தி இன்புறுவர்.

மண்கம ழுந்தித் திருமால்
வலம்புரி ஓசைஅந்த
விண்கமழ் சோலையும் வாவியும்
கேட்டது; வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும்
பிள்ளைத் திருஅரையில்
கிண்கிணி ஓசை பதினு
லுலகமும் கேட்டதுவே.

—*கந்தரலங்காரம்.*

# முருகன் தலங்கள்

திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்று, திருச்சீரலைவாய், திரு ஆவினன்குடி, திருஏரகம், பழமுதிர்சோலை, குன்றங்கள் ஆகிய ஆறு படைவீடுகள் கூறப்படுகின்றன. படைவீடு - போர்மேற்சென்றூர் தங்கும் இடம். சிலப்பதிகாரத்தில் இந்திரவிழவூரெடுத்தகாதையில் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த கோயில்களைக் குறிக்கும்போது,

'' பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும் ''

என்றும், ஊர்காண்காதையில்,

'' கோழிச்சேவல் கொடியோன் கோட்டமும் ''

என்றும் முருகன்கோயில்கள் குறிக்கப்படுகின்றன. சிலப்பதிகாரக்காலத்தி லேயே முருகன் திருவுருவை வைத்து வழிபடுவதற்குப் பதிலாக வேலை வைத்து வழிபடும் வழக்கம் உண்மையை, கனாத்திறம் உரைத்தகாதையில் மாலதி என்னும் பார்ப்பனி மரித்தகுழந்தையைக் கையில் தூக்கிக்கொண்டு உயிர்ப்பிச்சைகேட்டு ஒவ்வொரு கோயிலாகச் சென்றபோது, 'வேற் கோட்டம்' சென்றூள் என்று கூறப்படுவதால் அறியலாம். கட்டுரைக் காதையில் வரும் 'நெடுவேள் குன்றம் அடிவைத்து ஏறி' என்ற பகுதி திருச்செங்கோடு அன்றும் முருகன்தலமாக இருந்தமையை அறிவிக்கும்.

மற்றும் காட்டிலும், காவிலும், ஆற்றிலும், குளத்திலும், நடுத் திட்டுக்களிலும், நாற்சந்திகளிலும், முச்சந்திகளிலும், கடம்பமரத்தடி களிலும், மன்றங்களிலும், பொதுவிடங்களிலும் முருகன் விளங்குவார் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

பரங்குன்றைப்பற்றிக் கலித்தொகையும், அகநானூறும், குறிஞ்சிப் பாட்டும், சிலப்பதிகாரமும், பரிபாடலும் பேசுகின்றன. திருப்பரங் குன்றத்தில் கடம்பமரத்தடியிலேயே முருகன் வீற்றிருந்தார் என்பதை,

"புகழ்பூத்த கடம்பமர்ந்து
அறுமுனிமரபின் ஆன்றவர் நுகர்ச்சி
இருநிலத்தோரும் இயைகென ஈத்த நின்
தண்பரங்குன்றத்து"

என்றவரிகள் தெரிவிக்கின்றன. பரங்குன்றின் அக்காலப்பண்புகள் அனைத்தையும், போகஞ்செய்வார்க்கும் யோகஞ்செய்வார்க்கும் அது இடமாதலையும் பரிபாடல் நன்கு தெரிவிக்கின்றது.

"சினமிகு முருகன் தண்பரங்குன்றத்து"

என அகநானூறும் தெரிவிக்கிறது. மேலும் அங்கு மயிற்கொடியை உயர்த்தி விழாக்கொண்டாடும் சிறப்பை,

"கொடி நுடங்கு மறுகிற் கூடற் குடாஅது
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஒடியா விழவின் நெடியோன் குன்றம்"

என்ற அகச்செய்யுட் பகுதியால் அறியலாம்.

திருச்செந்தூர் :

இத்தலம், நீலத்திரைக்கடல் ஓரத்திலே நித்தம் தவம்செய்வதற்குரிய வாய்ப்பமைந்து விளங்குவது. மிகப்பழமையான வரலாற்றுத் தொடர்புடைய இடம். "வெண்டலைப்புணரி அலைக்கும் செந்தில்" எனப் புறநானூறும், "திருமணிவிளக்கின் அலைவாய்" என அகநானூறும், "சீர்கெழு செந்தில்" எனச் சிலப்பதிகாரமும், "உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர், அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே" எனத் திருமுருகாற்றுப்படையும் இத்தலத்தின் சிறப்பையும் பழமையையும் தெரிவிக்கின்றன.

அலைவாய், செந்தில், செந்தி, செந்தூர் என்பன இத்தலத்தின் மறு பெயர்கள். முருகப்பெருமானுடைய கருணைநிறைந்ததலங்களில், கலியுகத்திலும் கைம்மேற் பயனளிக்கும் தலம் இதுவே. அலைவாயிலில் கந்தமாதன பருவதத்தைக் குடைந்து இக்கோயில் கட்டப்பெற்றுள்ளது. கந்தமாதன பருவதம் நுரைமணற் கல்மலையாகும். இக்கோயில் இப்போது கருங்கற் பணியாகப் புதுப்பிக்கப்பெற்றுள்ளது. செந்திலாண்டவன் நின்ற திருக்கோலமாக ஒரு திருமுகமும், அபயம், வரதம், பூ, செபமாலை இவற்றை ஏந்திய நான்கு திருக்கரங்களையுங்கொண்டு கிழக்குநோக்கிக் காட்சி வழங்குகிறார்.



திருச்சீரலைவாய் திகழ்தரும் கோயில்.



வேலினை ஏவுறும் விண்ணவர் தளபதி.

சூதமாய் நின்றழி சூரபன்மன்.

ஆறுமுகநயினுராகிய உற்சவர் தெற்குநோக்கித் திருமுகம் கொண்டருள்கிருர். இவரை வழிபட்டுத்தான் உட்செல்லுதல் வேண்டும். மூலவருக்குப் பின்னுல், வடமேற்கு மூலையில் பஞ்சலிங்கமூர்த்திகள் எழுந்தருளியுள்ளார்கள். இந்த இடம் ஒரு இருட்டறை. இம்மூர்த்திகளை முருகப்பெருமான் வழிபட்டுவந்ததாக வரலாறு. உட்பிராகாரத்தில் கோயிலுக்குள் இருமருங்கும் வள்ளிநாயகிக்கும், தெய்வயானை அம்மைக்கும் தனித்தனி ஆலயங்கள் உள்ளன. கோயிலுக்கு வடக்கே கடற்கரையோரத்தில் வள்ளி ஒளிந்துகொண்ட ஓர் அழகிய குகைக்கோயில் உண்டு.

பன்னீரிலை விபூதிப்பிரசாதமும் சந்தனமும் மிகச்சிறந்தவை. ஆண்டுதோறும் ஆவணியிலும் மாசியிலும் முருகனுக்கு விழாக்கள் நடக்கும். அவற்றுள் 7-ந்திருவிழா சிறந்தது. அன்றுதான் ஆறுமுகநயினுர் திருவுலாக் கொண்டருளுவர். பச்சைமாலை மரகத அணி பசும்பட்டாடை இவற்றை அணிந்து, பெருமான் வருகின்ற காட்சி, காண்போருள்ளத்தைக் கனிவிக்கும். அன்று, வீதியில், பெருமானுக்கு அபிஷேகிக்கப்பெறும் பன்னீர் ஆருகப் பெருகுவதை இன்றும் காணலாம். செந்தமிழ்நாட்டிலுள்ள சிறந்த அன்பர்குழு வைகாசி விசாகத்திருநாளிலும், ஐப்பசி ஸ்கந்தசஷ்டி நாட்களிலும் அன்ன ஆகாரமின்றி நோன்புநோற்று அன்புப்பூணகொண்டு ஆண்டவனுடைய கருணைவெள்ளத்தில் நீந்திக் களிப்பதை வேறெங்கும் காணமுடியாது.

இத்தலத்திலேயே குமரகுருபரசுவாமிகள் ஊமை நீங்கப்பெற்று கந்தர்கலிவெண்பாவைப் பாடியருளினர் என்பது தமிழுலகம் நன்கறிந்த செய்தி. முருகன் வீரமகேந்திரத்துக்கு வீரவாகுதேவரைத் தூதாக அனுப்பி அவன் முடிபு அறியும்வரையில் இங்கு எழுந்தருளியிருந்து பின்பு அங்குச் சென்று பொருதுவென்ருர் என்பது புராணவரலாறு.

திருக்கோயிலுக்கு முன்னுள்ள கடலுக்கு வதனுரம்பதீர்த்தம் என்று பெயர். இதற்கு வடக்கே கடலிலேயே தெய்வயானை தீர்த்தம், லட்சுமி தீர்த்தம், சித்ததீர்த்தம், அட்டதிக்குப்பாலகர்தீர்த்தம், காயத்திரிதீர்த்தம், சாவித்திரிதீர்த்தம், சரசுவதிதீர்த்தம், ஐராவததீர்த்தம், பைரவதீர்த்தம் என்ற ஒன்பது தீர்த்தங்கள் உள்ளன. வதனுரம்பதீர்த்தத்திற்குத் தெற்கே வள்ளி நாயகிதீர்த்தம், துர்க்காதீர்த்தம், ஞானதீர்த்தம், சத்தியதீர்த்தம், ரிஷி தீர்த்தம், தேவதீர்த்தம், பாபவிநாசதீர்த்தம், கந்தபுட்கரணி (நாழிக்கிணறு),

சேதுதீர்த்தம், தசகங்காதீர்த்தம், கந்தமாதனதீர்த்தம், மாதிருதீர்த்தம், பிதுருதீர்த்தம் என்ற பதின்மூன்று தீர்த்தங்கள் உள்ளன. இவற்றில் நியமப்படி மூழ்கி வழிபட்டால் எல்லாநன்மைகளையும் எய்தலாம்.

**சிதம்பரம் பாண்டியநாயகம் :**

வடக்குக் கோபுரத்தையடுத்து வெளிச்சுற்று வடமேற்கு மூலையில் உள்ள தனி முருகன் கோயில். கல்வெட்டுக்களில் இம்முருகன் சுப்பிர மணியப்பிள்ளையார் என்று அழைக்கப்படுகின்றார். திருவுருவம் மிகப் பெரியது. மயிலின்மீது ஆறுமுகமும் பன்னிருகையுமுடையவராக முருகன் வீற்றிருக்கிறார். இருமருங்கும் இருபெரும் தேவியர்களும் உள்ளனர். இம் முருகனுக்குப் பங்குனி உத்திரவிழா மிகச் சிறப்புடன் நடைபெறும். நாட் பூசைக்கும் இவ்விழாவுக்கும் வேண்டிய நிவந்தங்கள் திருவாவடுதுறை யாதீனத்தால் செய்யப்பெறுகின்றன. இக்கோயில் ஒரு தேர்போல வேலை செய்யப்பெற்று, கல் உருளைகள் மாட்டி யானைகளைப்பூட்டி இழுப்பது போல அமைந்துள்ளது. தூண்கள் யாவும் சிற்பவேலைப்பாடு செறிந்தவை.

மாறவர்மன் சுந்தரபாண்டியன் முதன்முதல் இக்கோயிலைத் திருப் பணி செய்வித்தான் என்று கல்வெட்டு கூறுகிறது. பின்னர், சிதம்பரம் திருவாவடுதுறை மடத்தில் மடபதியாய் இருந்த முனிபுங்கவர் ஒருவர் முருகன் அருளையே பொருளாகக்கொண்டு திருப்பணிசெய்தார் என்பது செவிவழிச்செய்தி.

**புள்ளிருக்குவேளூர் :**

வைத்தீசுவரன்கோயில் என இத்தலம் வழங்கப்படுகிறது. முருகன் சிறந்த தலங்களுள் இதுவும் ஒன்று. இங்குள்ள சுவாமி முத்துக்குமார சுவாமி, செல்வமுத்துக்குமாரர் என்ற திருநாமங்களால் வழங்கப்பெறு கிறார். வேளூர், கந்தபுரி என்பன முருகனைக்கொண்டு இந்தத் தலத்துக்கு வந்த பெயர்கள். முருகப்பெருமான் வீரமகேந்திரபுரியைநோக்கி எழுந் தருளியகாலத்து இந்தத்தலத்தில் எழுந்தருளியுள்ள பாலாம்பிகையாகிய தையல்நாயகியிடம் வேல் வாங்கியதாக வரலாறு. ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமிக்கு அன்றாடம் அர்த்தயாமத்தில் நேத்திரப்பிடிச் சந்தனம் என்ற ஒன்று சாத்துவது வழக்கம். அதனை அளவாகவும் நியமத்தோடும் உட் கொள்பவர்கட்குக் குன்மம் முதலிய கன்மநோய்கள் நீங்கும்.

மாதந்தோறும் வரும் கார்த்திகைத்திருநாளில் முருகனுக்குப் பெரு நீராட்டு (மகாபிடேகம்) நடைபெறும். இதைத் தரிசிக்கப் பல்லாயிரக் கணக்கான மக்கள் பல திசையினின்றும் வருவர். இத்தலத்தில் செல்வ முத்துக்குமாரர் முத்துலிங்கம் என்ற சிவலிங்கத்தைத் தாபித்து வழிபட்டார் என்பது வரலாறு. ஒவ்வொரு பெருவிழாவிலும் (பிரமோற்சவத்திலும்) ஸ்ரீ செல்வமுத்துக்குமாரர் வைத்தியநாதப்பெருமானைப் பூசித்து 'செண்டு' என்னும் போர்க்கருவியைப் பெற்ற வரலாறு நடைபெறும். தைமாதத்தில் முத்துக்குமாரசுவாமிக்குத் திருவிழா நடைபெறுகிறது. ஒவ்வொருநாளும் முருகனுக்கு வழிபாடு நடந்த பின்னரேதான் இறைவனுக்கு வழிபாடு நடைபெறுவது வழக்கம். அருணகிரிநாதர் இத்தலத்தைப்பற்றிப் பதினன்கு திருப்புகழ் பாடி இருக்கிறர். ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் இப்பெருமான்மீது பாடிய பிள்ளைத்தமிழ் மிகச் சிறப்புடையது.

## திரு ஆவிநன்குடி :

இது இக்காலத்துப் பழநி என வழங்குகிறது. முருகனுடைய படைவீடுகளில் மூன்ருவதாகும். இதன் உச்சியில் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் முருகன் தண்டபாணித் திருக்கோலத்தில் காட்சி வழங்குகிறர். மக்களுக்கு வேண்டிய வரங்களைக்கொடுத்துக் கண்கண்ட தெய்வமாக என்றும் வீற்றிருப்பதால், எல்லா நாட்டு மக்களும் இங்கு நாள்தோறும் வந்துபோகின்றுர்கள். சிறந்த யாத்திரைத்தலம். முருகனுக்கு எப்போதும் இடைவிடாது அபிடேகங்கள் நடந்துகொண்டேயிருக்கும். முருகன் திருமேனியில் தோய்ந்த பொருள்கள் அவ்வளவும் குன்மம் குட்டம் முதலிய தீராத நோய்களுக்கு மருந்தாக அமைகிறது. முருகன் பச்சிளங்குழந்தையாக - விளையாட்டுப் பிள்ளையாக - காளையாக - வீரனுக - முடிமன்னனுக - துறவியாக - கிழவனுக எல்லாக் காலங்களிலும் காட்சி வழங்குவர். விவரிக்கமுடியாத அளவுகடந்த காந்தசத்தி ஒன்று எல்லோரையும் இழுக்கிறது. காண வருகின்றவர்கள் அத்தனைபேரும் இரும்புத் துகள்களைப்போலச் சன்னிதியைவிட்டு எழுந்து வரமுடியாமல் அப்படியே ஒட்டிவிடுகிறுர்கள்.

பழநி பஞ்சாமிர்தமும், முருகன் திருமுடியில் அப்பிவைத்த இராக் காலச் சந்தனமும் அளவிடமுடியாத ஆற்றல் வாய்ந்தவை. மகிமை மிக்கவை.

இத்தலம் சங்கநூல்களில் பொதினி என வழங்குகிறது. "முழவுறழ் திணிதோள் நெடுவேளாவி பொன்னுடை நெடுநகர்ப் பொதினி" "முருகன் நற்போர் நெடுவேளாவி, அறுகோட்டியாங்கண் பொதினி யானை" என அகநானூற்றுள் பல இடங்களில் பேசப்படுகிறது. பொதினி என்பது பொதிந்தது எனப் பொருள்படும். மாதுளம்பழம், வித்துக்கள் பல பொதிந்த முடிச்சுப்போலாதலின் மாதுளம்பழம் காரணமாக இங்கு எழுந்தருளிய முருகனுடைய வரலாற்றைக் குறிப்பதாகும் என்பதும் இழுக்காகாது.

மேலும் இத்தலத்திற்குச் 'சித்தன்வாழ்வு' என்றும் ஒருபெயர் உண்டு என்பர். "சித்தன்வாழ்வு இல்லந்தொறும் மூன்று எரியுடைத்து" என்று பாராட்டுகிருர் ஔவைப்பிராட்டியார். இங்கு எழுந்தருளியுள்ள முருகன் மீது அருணகிரியார் தொண்ணூற்றைந்து திருப்புகழ் பாடியிருக்கிருர்.

கற்பக்கிருகத்தின் பின்னுல் முஸ்லீம்களும் வந்து வணங்குகிருர்கள் என்ருல் இந்து முஸ்லீம் ஒற்றுமைக்குச் செவ்வேள் தொன்றுதொட்டே வழிகாட்டுகிருர் என்பதைக் கருதலாமல்லவா ?

பழநிக்கு அடிவாரத்திலுள்ள தலம் திரு ஆவிநன்குடி என்பது. இது வேளாவிக்கோ பெரும்பேகனுடைய ஊர். இங்குள்ள முருகனும் அருணகிரியாரால் பாராட்டப்பெற்றவர்.

திருமுருகாற்றுப்படையில் இத்தலத்தைப்பற்றிக் குறிப்பிடுகின்ற பொழுது பலநாள் உணவு கழிந்த இன்பவடிவான முனிவர்கள் பலர் வாழ்ந்தார்கள் என்றும், மாசில்லாத மகளிர்கள் யாழ் வாசித்தனர் என்றும், பிரமன் முதலிய பெருந்தேவர்களும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் தம் குறைகளைத் தெரிவித்து விடுதிபெற இங்கே குழுமியுள்ளனர் என்றும் கூறப்பெறுகிறது.

ஆனுல், "தாவில் கொள்கை மடந்தையொடு சின்னுள், ஆவிநன்குடி அசைதலும் உரியன்" என்ற அடிகளின் உரையை ஊன்றிநோக்கின், இத்திருமுருகாற்றுப்படைப்பகுதி மலைமேல் மருந்தாக இன்று எழுந்தருளி யிருக்கின்ற தண்டபாணிக்கடவுளைக் குறியாது என்பதும், ஆவிநன்குடி யின் அடிவாரக்கோயிலில் முருகன் அம்மையோடு எழுந்தருளியிருக்கின்ற நிலையும் அதுவும் தெய்வயானை அம்மையாராகிய ஒரு அம்மையுடனேயே அன்று எழுந்தருளியிருந்தார் என்ற உண்மையும் தெள்ளிதின் விளங்கும்.

குமாரகோயில்



சீரகத்தோங்கும் சேரர்தம் நாட்டில்
ஏரகப் பதியின் எழிலுறு தோற்றம்.

திரு ஏரகம் :

திருமுருகாற்றுப்படையின்வண்ணம் இது நான்காவது படை வீடு. இத்தலம் சோழநாட்டில் திருக்குடமூக்குக்கு (கும்பகோணம்) அருகி லுள்ளது. சாமிமலை என்னும் வழக்காறு நெடுங்காலமாக நிலவிவருகிறது. சாமிமலை ஒரு கட்டுமலை. இதற்குப் பிரபவ முதலான அறுபது ஆண்டு களும் படியாக அமைந்துள்ளன என்பது வரலாறு. முருகன் நின்ற திருக் கோலத்தில் கம்பு ஊன்றி தண்டபாணி நிலையிலேயே எழுந்தருளியிருக் கின்றார். ஒரு முகமும் இரண்டு கரங்களும் உடைய பாலசுப்பிரமணியக் கடவுள்நிலை என்றும் சொல்வதுண்டு. தென்னாட்டிலுள்ள பல குடும்பங் களுக்குக் குலதெய்வமாக விளங்குபவரும் இவரே. தான் மணந்துகொள் ளாத நிலையிலிருந்தாலும் ஆண்டுக்கொன்று சராசரி ஐயாயிரம், ஆறாயிரம் கலியாணங்களாவது அவரருளால் அவர் சன்னிதியில் நடக்கும். மக்கள் என்றுமே திருவிழாக்காலம் போலத் திரள்திரளாகவந்து வணங்கிச் செல் கிறார்கள். செவ்வாய், வெள்ளி, விசாகம், கார்த்திகை, பூசம், சஷ்டி இந்த நாட்களில் விழாவும் பூசையும் சிறப்பாக நடைபெறுகின்றன.

திருமுருகாற்றுப்படைக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், 'ஏரகம் மலைநாட்டகத்தொரு திருப்பதி' என்று குறிப்பிடுகிறார். ஏரகத்தைப்பற்றிய திருமுருகாற்றுப்படை முப்புரிநூலையும், இருபிறப்பையும், முத்தீயான் உண்டாகிய செல்வத்தினையுமுடைய நாற்பத்தெட்டு யாண்டு தவறாது பிரமசரியம் ஒழுகிய அந்தணர்கள் ஈர ஆடையை உடுத்திக்கொண்டு சடாக் கரத்தை ஓதி அருச்சிக்கின்றனர் என்று கூறுகிறது. இத்தகைய இயல்புகள் மலையாள நாகரிகம் மிகுந்த, போற்றிகளுக்கே உரிய பூசைமுறையாம். இதனை இன்றும் மலைநாட்டு ஏரகத் திருப்பதியில் காணலாம்.

அன்றியும், சிலப்பதிகாரத்திலே,

"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்"

என்ற அடிகளுக்குக் குறிப்பெழுதிய அரும்பதவுரை ஆசிரியர் ஏரகம், சாமிமலையின் வேறானதாகவே கருதுவதாகத் தெரிகிறது. மலைநாட்டு ஏரகத்துள் வள்ளி தேவசேனையுடன் மலையின்மீது ஒருமுகமும் நான்கு திருக்கரமும் கொண்டவராக, பாலசுப்பிரமணியர்நிலையில் முருகன் காட்சி வழங்குகிறார். இத்தலம், தக்கலையிலிருந்து இரண்டுகல் தூரத்திலுள்ளது.

மலை சிறியதுதான்; அடிவாரத்தைச் சுற்றிலும் அழகான - ஆழமான அகழி ஒன்று உண்டு. இது மன அமைதியையும், தியானத்தையும் விரும்பு வார்க்கு ஏற்ற இடம்.

இங்கும் வெள்ளிக்கிழமை, கார்த்திகை, விசாகம், பூரம் இந்த நாட்களில் பெருந்திரளாக மக்கள் கூடுகிறார்கள். புரட்டாசி நவராத்திரி விழாக் காலங்களில், இத்தலத்து முருகன் திருவனந்தபுரம் அரண்மனைக்கு எழுந்தருளுவது வழக்கம்.

குன்றுதோறாடல் :

எங்கெல்லாம் மலையுண்டோ அங்கெல்லாம் முருகன். திருமலை, இலஞ்சி, சிவகிரி, மயிலம், திருத்தணிகை, வள்ளிமலை, திருவேங்கடம், விராலிமலை முதலியனவும் முருகன் எழுந்தருளியுள்ள சிறந்த மலைகள். இவற்றுள் திருத்தணிகை, வள்ளிநாயகியாரை மணந்த இறைவன் மணக் கோலத்தோடு வீற்றிருக்கும் இடம் என்பது வரலாறு. வள்ளிநாயகியார் அவதரித்த 'சிற்றூர்' இப்பொழுது சித்தூர் என்னும் மாவட்டத் தலைநகராக விளங்குகிறது. திருவேங்கடமும் முருகன் தலமாயிருந்தது என்று மொழிவர். சிலப்பதிகாரத்திற்கு முன்பே செவ்வேளின் தலம் கரியமால் தலமாயிற்று.

பழமுதிர்சோலை :

இது ஆறாவது படைவீடு. அழகர்மலை என வழங்குகிறது. சிலப் பதிகாரத்தில், மதுரைக்கு வழிக்கொள்ளும் கோவலன் கண்ணகி கவுந்தி முதலியோர்க்கு வழிகூறும் மாங்காட்டு மறையோன், அழகர்மலைப் பக்கத்தில் புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி என மூன்று பொய்கைகள் உள்ளதாகக் குறிப்பிடுகின்றான். சரவணம் என்பது முருக னுடைய தீர்த்தத்தின் பெயர் என்பதில் ஐயமில்லை. இந்தத்தலம் இன்று முருகன் தலமாக இல்லை. கள்ளழகர்கோயிலாக விளங்குகிறது, மதுரையி லிருந்து பன்னிரண்டுகல் தொலைவில் உள்ளது. காடும், காவும், அருவியும், குன்றும் இன்றும் காண்போர் மனத்துள் கந்தவேள் அருவநிலையை அறிவிப்பன.

திருமுருகாற்றுப்படை இம்மலையின் மாட்சியையும் காட்டின் கவினையும் கூறிக் கந்தவேளை நினைவூட்டுகிறது.



கந்தன் எழுந்தருள் கதிர்காமக்கோயில்

**கதிர்காமம் :**

செந்தமிழ்நாடும் தென்னிலங்கையும் தாயும் சேயும் போல்வன. திருநெல்வேலி, வைத்தீசுவரன்கோயில், வண்ணார்பண்ணை இங்கும் உண்டு; அங்கும் உண்டு. ஆகவே செந்தமிழ்ச்சேய், சேய்நாட்டிலும் சிறந்து விளங்குகின்றார். அங்கேயுள்ள முருகன் தலங்கள் கதிர்காமம், செல்லக் கதிர்காமம், நல்லூர்க் கந்தசுவாமிகோயில், மாவிட்டபுரம், கந்தவனம் முதலியன. ஈழநாட்டிற் பெரும்பாலும் முருகனுடைய ஞானசக்தியாகிய வேலாயுதத்தைவைத்தே வழிபடுவது வழக்கம்.

அச்சம் நிறைந்த இடத்தில் ஆன்மாக்களின் தன் முனைப்பு அடங்குகிறது. அப்போது ஆண்டவனுடைய அருளுரு நெஞ்சில் நிலைபெறுகிறது. அடர்ந்த காடும், ஆகாயம் அளாவிய மலையும், ஆயிரக்கணக்கான அடிகள் உயரத்திலிருந்து விழுகின்ற அருவியும், வனவிலங்கும், மலைப்பாம்பும், புதரும் பூண்டும் செறிந்த இடத்தில் அச்சம் விளைவது இயற்கை. அச்சத்திலிருந்து உய்தி பெற ஆண்டவன் அருளைத் துணைக்கொள்ளுவோம். அங்ஙனம் அச்சத்தால் ஆன்மாக்களை அடிமைப்படுத்தி, ஆனந்தவெள்ளத் தழுத்தும் அருமையான இடம் கதிர்காமம்.

கதிர்காமத்தில், முருகன்கோயில் செப்போடு வேய்ந்த சிறிய கொட்டகை வடிவாக அமைந்துள்ளது. கோயிலின் முன்வாயிலில், அடுக்கடுக்காகத் திரைகள் தொங்கவிடப்பட்டுள்ளன. அவை ஏழுதிரைகள் என்று சொல்லுகிறார்கள். நமது ஊனுடம்பாலயத்திலும், மூலாதாரம் முதலாக ஆக்ஞை ஈறாக ஆறு வாயில்களும் அதில் ஆறு திரைகளும் தொங்கிக் கொண்டிருக்கின்றன. ஏழாவது திரைதான் துவாதசாந்தமாகிய ஒளித் திரை; வெளித்திரை. இத்திரையைக் கடந்து ஆனந்த முருகனுடைய அக்கரவடிவாகிய அருளுருவத்தைக் காணலாம்.

கதிர்காமம் மிகப் புனிதமான இடம். பொல்லாத வினைகளில் புத்தி அழுந்தாமல் முருகன் நல்லருளையே நாடிசிற்றற்குரிய இடம். இத்தல அமைப்பே முக்கோண வடிவமானது. விந்துத்தானத்தில் முருகப் பெருமானும் கோணத்தின் நுனியில் வள்ளிநாயகியாரும் இடதுபக்கக் கோணத்தில் தெய்வயானையம்மையாரும் திருக்கோயில் கொண்டிருக்கின்றனர். பக்கத்தில் மாணிக்ககங்கை ஓடிக்கொண்டேயிருக்கிறது. இத்தலத்தில் ஆடிவேல்விழா மிகச் சிறப்புவாய்ந்தது. இவ்விழாவில் ஆண்டுக்கொருமுறை முருகனுடைய எந்திரவடிவம் அமைந்த பெட்டகத்தைக்

காட்டு ஆனையின் மேலேற்றிப் பவனிவரச் செய்வார்கள். அது ஓர் அருட் காட்சியாகும். சிங்களவர்களும் தமிழர்களும் கலந்து தன்வசமழிந்து வழிபடுமிடம். இத்தலத்தில் வழிபாடாற்றுபவர்கள் கப்பராளை என்ற சிங்கள வேடமரபினர். இவர்கள் வள்ளிநாயகியாருடைய மரபினர் என்று சொல்லிக்கொள்கிறார்கள். இவர்களிடம் அன்புநெறியொன்றுதான் சிறந் திருக்கிறது; ஆசாரம் அப்புறந்தான். தெய்வயானை அம்மையாரின் திருக் கோயிலைப் பூசிப்பவர்கள் வடதேசத்துப் பார்ப்பனர். மாணிக்ககங்கையின் ஓரமாகக் காட்டினுள் சிலகல் தொலைவு சென்றால் வள்ளியை யானை வெருட்டிய பாறை, அதற்கு மேற்கே செல்லக்கதிர்காமம், மாணிக்க விநாயகர்கோயில் இவற்றைக் காணலாம். அங்கும் வடநாட்டுப் பார்ப் பனரே பூசை செய்கின்றார்கள். 'அரோகரா' 'கதிர்காமத்தெய்யோ' என்ற ஒலிகள் செவிவழியாகச் சிந்தையிற்புகுந்து நம்மைத் தெய்வமய மாக்கும். மக்களாகப் பிறந்தவர்கள் தம் வாழ்நாளில் ஒருமுறையேனும் சென்று வழிபடவேண்டிய தலம் இது என்ற அளவில் அமைவோம். இத் தலத்தைப்பற்றிய செவிவழிச் செய்திகளாகவும் வரலாற்றுக் குறிப்புக்க ளாகவும் வழங்குவன கேட்பவர்க்கு மயிர்க்கூச்செறிப்பு உண்டாக்கும் மாண்பின.

**மாவிட்டபுரம் :**

ஒன்பதாவது நூற்றாண்டின் முதற்பகுதியில் வரகுணபாண்டியன் மதுரையிலிருந்து பாண்டிநாட்டை அரசுபுரிந்துவந்தான். அக்காலத்தில் அவன் ஒருமுறை இலங்கையைக் கைப்பற்றும் நோக்கமாக இலங்கையின் வடபாகத்தில் வந்திறங்கி, சிங்களத் தலைநகருக்குச் சென்று, கடும்போர் விளைத்து, சிங்கள அரசனைப் போரில்வென்று, அவனிடத்திருந்து திறை பெற்றுக்கொண்டு தென்னாடு திரும்பினான்.

இதற்குமுன் இலங்கையின் வடபாகமாகிய யாழ்ப்பாணம் முதலிய பகுதிகள் சிற்சில காலங்களைத்தவிரச் சிங்கள மன்னரின் ஆதிக்கத்தின்கீழ் இருந்தனபோலும்; ஆனால் வரகுணமன்னன் வட இலங்கையில் தனது படையோடு இறங்கியதும் அங்கு சிங்களச் சேனையோடு பொருது அதனை வென்றான்.

இந்நிகழ்ச்சி குறித்து அக்காலத்தில் அவனைப்பற்றிப் பாடிய செய்யுள் ஒன்று இறையனார் அகப்பொருளில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்படு கின்றது. "மன்னேரழிய மணற்றி வென்றான்" எனக் குறிப்பிடப்பட்டது

இந்நிகழ்ச்சியையேயாம். இதனின்று யாழ்ப்பாணத்துக்கு 'மணற்றி' என்ற பெயர் வழக்கிலிருந்துவந்ததெனத் தெரியவருகிறது. அன்றியும் "மணற்றிடர்" என்று ஒரு பெயர் இருந்ததென யாழ்ப்பாண வைபவமாலையிற் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இதனாலே யாழ்ப்பாணத்து ஒரு பகுதியை "வெலிகம" எனச் சிங்களர் அழைத்தனர்போலும். சிங்களத்தில் வெலி என்பதற்கு மணல் என்பது பொருள். கம என்றால் ஊர். இச்சிங்களச் சொல்லே பிற்காலத்தில் வலிகாமம் என மருவியது.

வரகுணபாண்டியன் காலத்திற்குப் பின் வட இலங்கைப் பகுதி சிறிது சிறிதாகச் சிங்களவர் கையினின்றும் அகன்று ஒரு தனி நாடாக விளங்குவதற்கு வேண்டிய நிலையை அடைந்துவந்தது. பத்தாவது நூற்றாண்டின் முற்பகுதியில் முதலாம் பராந்தகசோழன் இலங்கையின்மீது படை எடுத்துவந்து, தனது சேனையோடு ஊர்காவற்றுறையில் இறங்கினான். அப்பொழுது வட இலங்கையிலிருந்த சிங்களச் சேனைக்கும் பராந்தகன் சேனைக்குமிடையில் பெரும்போர் நிகழ்ந்தது. இப்போர் நிகழ்ந்த இடம் மாவிட்டபுரத்திலுள்ள வளவர்கோன் பள்ளம் என்பர் முதலியார் இராசநாயகம் அவர்கள். இப்போரிலே சோழ அரசனின் சேனைத்தலைவனாகிய சிறியவேலன் என்பவன் உயிர்நீத்தான். எனினும் சோழன் மனம் சலிக்கவில்லை. அவன் நேராகச் சிங்களத் தலைநகருக்குச்சென்று சிங்கள அரசனை வென்று திரும்பினன். இந்தக் காலத்தொடக்கத்தில் வட இலங்கையில் தமிழர் செல்வாக்கு ஒரே பெற்றித்தாய் நிலவியிருந்தது. அதனால் தமிழ்ப் பொது மக்களன்றி அரசகுடும்பத்தைச் சேர்ந்தவர்களும் வட இலங்கைப் பகுதிகளில் மாடிகள் அமைத்துக் குடியேறினர். மாவிட்டபுரப் பகுதியிலுள்ள வளவர்கோன் பகுதியிலும் இவர்கள் குடியேறினர்.

இஃது இவ்வாறிருக்க, சோழநாட்டிலே இருந்த தேசாதிபதி ஒருவனுக்கு மாருதப் பிரவாகவல்லி என்னும் குமாரத்தி ஒருத்தி இருந்தாள். அவளைக் குன்மநோய் என்னும் தீராத நோய் பிடித்திருந்தது. அங்குள்ள வைத்தியர் ஒருவராலும் அந்நோயை மாற்றிக்கொள்ள முடியவில்லை. அதனால் தீர்த்த யாத்திரைசெய்து அதனை மாற்றிக்கொள்ள உறுதிகொண்டாள். தன் ஊரினின்றும் புறப்பட்டு அங்குமிங்கும் சென்று தீர்த்தமாடித் திரிகையில் சாந்தலிங்கம் என்னும் சந்நியாசி அவளைக்கண்டனன். அவள் நிலையைக்கண்டதும் 'இவ்வியாதி பண்டிதர் ஒருவராலும் குணமாக்கத் தக்கதன்று; நீ இப்பொழுது எடுத்த முயற்சியே உனக்குச் சுகந்தரத்தக்கது;

இலங்கையில் வடமுனையிலே கீரிமலை என்று ஒரு மலை உண்டு; அங்கே உவர்ச்சலமத்தியில் சுத்ததீர்த்தமும் மலை அருவித்தீர்த்தமும் கலந்த உத்தம தீர்த்தமொன்றுண்டு; உலகத்திலுள்ள எல்லாத் தீர்த்தத்திலும் முக்கிய மானது; அதிலே போய் நீராடிச் சிலகாலம் தங்கி இருந்தால் சுகமடைவாய்' என்று சொன்னான். அதைக்கேட்டு மாருதப்பிரவாகவல்லி செவிலித்தாய், பணிப்பெண், போர்வீரர் முதலியோர் சூழப் புறப்பட்டுக் கீரிமலையில் வந்து இறங்கினாள். அங்கிருந்து வளவர்கோன்பள்ளி இருக்குமிடத்திற்கு அணித்தாய் ஓரிடத்தில் பாளயம் போட்டுக்கொண்டிருந்தாள். அவள் இருந்த இடத்தைப் பிற்காலத்தவர் குமாரத்தி பள்ளம் என அழைப்பர். நாள்தோறும் அவள் கீரிமலையில் தீர்த்தமாடி, அதன் பயனாகக் குன்மநோய் நீங்கப்பெற்றாள்.

இவ்வாறு தன்னை நெடுங்காலம் வருத்திய நோயினின்றும் நீங்கிய அவள், தான் பாளயம் போட்டிருந்த இடத்தில் சிலகாலம் தங்கிவிட்டாள். அவ்வாறு தங்கியிருக்கும்போது அவள் தனது இருப்பிடத்திற்கணித்தா யுள்ள இடங்கள்தோறும் சென்று அங்குள்ள காட்சிகளைப்பார்த்து உலாவி வருதல் வழக்கம். ஒருநாள் வழக்கம்போல் கோவிற்கடவை என்னும் பகுதிக்கு உலாவப்போனாள். இதுவே இப்போது மாவிட்டபுரம் என வழங்கப்பெறும். (மாவிட்டபுரத்திற்கு அருகாமையில் இன்றும் பட்டிக் கடவை என்னும் பெயர்கொண்ட ஊர் உண்டு.) அப்பகுதியில் செழிப் புற்று அடர்ந்து வளர்ந்தோங்கியிருக்கும் மா, பலா, வாழை, கமுகு முதலிய சோலைகளும் வெற்றிலை வள்ளிக்கொடி முதலிய கொடிகள் வரிசை வரிசை யாய் நின்று திகழும் காட்சியும், நெருங்கிக் குளிர்மையாய் வளர்ந்த கதிரின் பாரத்தால் சாய்ந்துநின்று அங்கு வீசும் தென்றலின் அசைவினால் ஒன்றோ டொன்று உராய்ந்து கலகலக்கும் தினையும் அவள் கவனத்தை ஈர்த்தன. இவ்வழகிய காட்சியைக் கண்ணுற்றுக்கொண்டு அவள் அடிமேல் அடி வைத்து உலாவி வருகையில் அங்கு ஓர் அரசமரத்தடிநிழலில் குறிஞ்சிக் கிழவோனாகிய முருகப்பெருமானுக்கு, பெரியவர் ஒருவர் விளக்குவைத்து வழிபாடாற்றிக்கொண்டிருந்தார். அதனைக்கண்டு அவளும் உடனே மெய் மயிர்சிலிர்ப்ப நாத்தழுதழுப்ப முருகன்மீது உள்ளன்புருகித் தன் இரு மலர்க்கரங்களையும் தலைமேற் குவித்து வணங்கினின்றாள். சில நேரத்தின் பின் அப்பெரியார், வழிபாட்டை முடித்துக்கொண்டார். உடனே அவள் அப்பெரியாரை அழைத்து 'பெரியீர்! தங்கள் பெயர் யாது? இக்கோயில் எழுந்த வரலாறு யாது? அவற்றைச் சிறிது எடுத்து எனக்கு விளம்புமின்'

என்று கேட்டனள். அதற்கு அப்பெரியார் அகமகிழ்ந்து புன்னகை பூத்து " அம்மையே! அடியேன் பெயர் சடையன். இங்கு வதியும் வேளாண் குடியிற் பிறந்தேன். முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இப்பகுதியைக் கோயிற்கடவை என்பர். தொன்றுதொட்டு இவ்விடத்தில் முருகனின் வெள்ளி வேலாயுதத்தை வைத்துப் பரம்பரை பரம்பரையாக வணங்கி வருகின்றோம். எமது தோட்டம் முதலியவற்றுள் நடும் பயிர்கள் செழிப்புற்றோங்கி நற்பயனைக் கொடுப்பதற்காகவும் எம்மைக் காத்து அருள் புரிவதற்காகவும் எமது காவற்கடவுளாகிய முருகனை வழிபட்டு வருகின்றோம் " என மொழிந்தார்.

அவர் சொல்லிமுடித்ததைக் கேட்டதும் மாருதப்பிரவாகவல்லி சிறிதுநேரம் ஏதோ தனக்குள் எண்ணிக்கொண்டு நின்றனள். அதன்பின் அவரை நோக்கி 'அருந்தவப்பெரியீர்! முருகனின் திருவருட் பொலிவோடு தங்கள் முகம் மிளிருவதைக் காண என் மனம் களிப்புறும். முருகன் மேலிருக்கும் அன்போ எனக்குச் சாலப்பெரிது. உமது வழிபாட்டையும் அரசமரத்தின்கீழ் இருக்கும் இவ்வெள்ளி வேலாயுதத்தையும் கண்டதும் முருகப்பெருமானுக்கு இங்கு அழகியதோர் கோயில் கல்லினுற் சமைக்க வேண்டும் என அவாக்கொண்டுள்ளேன். அவ்வாறு யான் செய்வதற்கு உமது திருவுள்ளக்கருத்து யாதோ?' எனக் கேட்டனள்.

அதற்கு அப்பெரியார் 'இறைவனுக்குத் தாங்கள் ஆற்ற இருக்கும் திருத்தொண்டிற்கு அட்டிசொல்ல அடியேன் யார்? தங்கள் திருவுள்ளக் கருத்து யாதோ, அப்படியே ஆற்றுக; முருகப்பெருமானின் திருவருள் நும்மீது பொழிந்தருளுக' என விடை கூறினர்.

இச்சொற்களைக் கேட்டதும் மாருதப்பிரவாகவல்லி களிப்புடன் தனது இருக்கை சென்றனள். மறுநாள் தனது தந்தையாருக்கு, முருகனுக்குக் கோயில்கட்டி எழுப்பத் தான் நினைத்திருப்பதாகவும், அதற்கு வேண்டியன யாவற்றையும் சோழநாட்டிலிருந்து அனுப்பிவைக்குமாறும் ஒரு ஓலை விடுத்தனள். அதற்கு அவள் தந்தையாரும் இசைந்து கோயிற் கட்டிட வேலைக்கு வேண்டிய பொருள்களையும், சிற்பிகள் முதலியோரையும், உருவச்சிலையையும், நித்திய நைமித்திய பூசைகளை நடத்துவதற்குப் பார்ப்பனரையும் சோழநாட்டிலிருந்து அனுப்பிவைத்தார். முருகப்பெருமானின் திருவுருவச்சிலை கப்பல்மூலம் கசாத்துறை (இதற்கு வேறொரு பெயர் குரக்கன்துறை. இதனைப் பருத்தித்துறை என்னும் பெயருடன்

ஒத்து நோக்குக) என்னுமிடத்தில் வந்திறங்கியது. அதனுல் இத்துறை காங்கேயன்துறை என இன்று வழங்குவதாயிற்று. மாருதப்பிரவாகவல்லி யும் தானுகவே நின்று, தன் கண்காணிப்பில் கோயிலைக்கட்டி, அங்கு வந்த பார்ப்பனத் தலைவனைக்கொண்டு ஆகம முறைப்படி தேவப்பிரதிட்டை செய்து, கும்பாபிடேகம் பண்ணிவைத்தனள். இதுகாறும் திராவிட முறைப்படி மரத்தின்கீழ் நடைபெற்று வந்த முருகன் வழிபாடு, ஆகம முறைப்படி எழுந்த வழிபாடாக மாறிற்று. அன்றியும் அக்கோயிலுக்கு வேண்டிய பூசைகள் காலந்தவருது நடந்துவரும்வண்ணம் அதன் செல விற்காக நன்செய் நிலத்தையும் புன்செய் நிலத்தையும் மானியமாக ஈழநாட் டிலும் சோழநாட்டிலும் வழங்கினள்.

சோழமன்னரின் ஆட்சி இலங்கையில் வலுவுற்றிருந்த காலத்தே சைவக்கோயில்கள் பல இலங்கையில் எழுந்தன என்பது நன்கறிந்த தொன் ருகும். பொலநறுவையில் இப்பொழுது காணப்படும் சிவன் கோயிலும், இன்றும் பழுதான நிலையில் கவனிப்பாரற்று இருக்கும் ஏனைய கோயில் களும், தெருவோரங்களில் தேடுவாரற்று இருக்கும் சிவலிங்கங்களும் இதற்குச் சான்று பகரும். இதுபோலவே அக்காலத்திலே மாவிட்டபுரம் கந்தசாமி கோயிலும் எழுந்தது. அன்றியும் அரசகுடும்பத்தைச் சேர்ந்த ஒருத்தி கட்டி எழுப்பினதாகையால் தஞ்சாவூரிலுள்ள இராசராசேசுவர முடையார் கோயில்போல இதுவும் அரசகுடும்பத்தின் கண்காணிப்பில் இருந்து வந்தது.

பதின்மூன்ரும் நூற்ருண்டுத் தொடக்கம். சோழரின் ஆட்சிக்காலம் இலங்கையில் ஒருவாறு முடிந்தது. அதன்பின் கர்நாடகதேசத் தொடர்பும் இருந்திருக்கவேண்டும். மாவிட்டபுரம் கந்தசாமி கோயிலுக்கு அணித் தாகக் 'கண்ணடியர் தெரு' என்னும் ஓர் இடமுண்டு. கர்நாடகதேசத் தவர் வந்து குடியேறியபடியால் எழுந்த பெயரே ஈற்றில் கண்ணடியர் தெரு என மருவி வழங்கலாயிற்று. யாழ்ப்பாணத்தில் ஆரியச்சக்கரவர்த்தி கள் பிறிதோர் இராச்சியத்தை ஆங்கு நிறுவினர். அவர்கள்காலத்தில் இக் கோயிலும் செவ்விதான நிலையில் இருந்துவந்தது. அதன் பின்னர் பதினுரும் நூற்ருண்டில் பறங்கியர் யாழ்ப்பாணம் அரசினைக் கைப்பற்றினர். கைப் பற்றியதும் தமது சமயத்தையும் பரப்பத்தொடங்கினர். அதற்காக யாழ்ப் பாணத்தில் அக்காலத்திலிருந்த கோயில்கள் யாவற்றையும் இடித்துத் தரைமட்டமாக்கினர். அன்றியும் மக்களுக்குத் தமது மதப் பெயரைக் கொடுத்தனர். அதுமட்டுமன்றிக் கோயிலை அடுத்துள்ள மக்களையும்

க்த்தோலிக்கராக்கினர். கந்தசாமி கோயிலை அடுத்துள்ள காணிகளின் பெயர் இன்றும் மத்தேசுபங்கு இயவாத்தை வளவு என வழங்குவதைக் காண்க.

இக்கோயிலை இடிக்கும்போது அதைக்கண்டு துன்புற்ற ஆதீனப் பார்ப்பனர் ஆதிமூல உருவச்சிலையைக் கயிற்றிற்கட்டி அங்குள்ள கிணற்றில் மெல்லென இறக்கித் தண்ணீருள் மறைத்து வைத்தனர். இதுவே அழகிய உருவச்சிலை. சோழநாட்டிலிருந்த கைதேர்ந்த சிற்பிகளால் செதுக்கப் பட்டது. இச்சிலையை இக்காலத்துச் சிலைகளுடன் ஒப்பிட்டுப்பார்த்தால் இதன் பண்டைப் பெருமை விளங்கும். இதனோடு அங்கிருந்த தங்க உருவச் சிலைகளும் மறைந்தன என்பர். அவை யாங்குச் சென்றதெனத் தெரிய வில்லை. இக்கோயில் கட்டி எழுப்பப்பட்டதும் சோழநாட்டுச் சிற்பிகள் செதுக்கிய அழகிய கற்களைக்கொண்டேயாம். அவை யாவும் பறங்கியரால் இடிக்கப்பட்டு அழிந்தொழிந்து போயின. இவை இக்காலத்திருந்தால் சோழநாட்டுச் சிற்பவேலைக்குச் சான்றாக விளங்கும். இக்கோயிலை இடித்து இதன் கற்களைக்கொண்டு கத்தோலிக்கக் கோயிலைக் கட்டி எழுப்பினர் என்பர். போர்த்துகேசியர் காலத்துக்குப்பின் ஒல்லாந்தர் காலத்திலும் இக்கோயில் அழிந்திருந்தது. இவ்விரு அரசினரும் சைவமதவழிபாட்டிற்கு முட்டுக்கட்டையாக இருந்தபடியால் அயலிலுள்ள மாந்தர் யாவரும் நள்ளிரவில் இக்கோயில் இருந்த இடத்திற்குச் சென்று மறைமுகமாக முருகனை வணங்கி வந்தனர்.

19-ம் நூற்றாண்டில், ஆங்கில அரசினர் யாழ்ப்பாணத்தைக் கைப் பற்றவே நிலைமை யாவும் மாறின. போலிக் கிறிஸ்தவராக இருந்தவர் யாவரும் வெளிவெளியாகத் தமது மூதாதையரின் சமயமாகிய சைவத்தைத் தழுவினர். அதனோடு சைவக் கோயில்களையும் புதுப்பித்தனர். அதனால் மாவிட்டபுரம் கந்தசாமி கோயிலும் அதனுடைய பழைய நிலைக்குக் கொண்டுவரப்பட்டது. விளாங்குளப் பகுதியிலிருந்து கருங்கல் எடுத்துப் புதியதோர் கோயிலைக் கட்டினர். சோழர்காலத்து நாற்புறமும் கோபுரம் இருந்ததென்பர். ஆனால் இக்காலத்தில் அவ்வாறில்லை. மேற்குவாசற்புறத்தில் இறங்கூன் பண்டாரம் என்னும் சைவப்பெரியார் கட்டி எழுப்பிய கோபுரம் இருக்கின்றது. சோழர்காலத்துச் செப்புப்பட்டயம் பல இக் கோயிலில் இருந்தன என்றும், இக்கோயில் மூலமூர்த்தியின் பீடத்தில் வைக்கப்பட்ட அரிய பெரிய இயந்திரம் ஒன்று உண்டென்பதும் கேள்வி.

அவை யாவும் எங்குற்றனவோ தெரியாது. சோழ அரசகுடும்பத்தாருக்குப் பதிலாக அவர் கொண்டுவந்த பார்ப்பனக் குடும்பங்களின் வழித்தோன்றல்கள் இக்கோயில்களைத் தமக்கு உரிமையாக்கிக் கொண்டனர்.

இக்கோயில் பழைமையும் தொன்மையும் வாய்ந்ததாகையால் இங்கு சில சாசனச் சான்றுகள் அகப்படுதல் கூடும். புதைபொருள் ஆராய்ச்சியாளர் இவற்றைக் கண்டுபிடித்தல் வேண்டும். சாசனச்சான்றுகள் கிடைக்குமாயின் அவை இக்கோயிலின் வரலாற்றுக்கும் தென் இந்தியா, யாழ்ப்பாணம் ஆகியவற்றின் வரலாற்றிற்கும் இன்றியமையாதனவாக இருக்கும்.

**நல்லூர்க் கந்தசாமிகோயில் :**

யாழ்ப்பாணத்து மக்களின் பேரன்பிற்கு இலக்கானது இது. யாழ்ப்பாணத்தை கி. பி. 14-ஆம் நூற்றுண்டு முதல் ஆரியச்சக்கரவர்த்திகள் ஆண்டுவந்தனர். அவர்கள் நல்லூரைத் தம் தலைநகராக்கிக்கொண்டனர். அப்போது கோட்டையரசனுயிருந்து ஆருவது பராக்கிரமபாகுவால் அனுப்பப்பெற்ற செண்பகப்பெருமாள் என்பவன் யாழ்ப்பாணத்தின்மீது படையெடுத்து வந்து, ஆரியச்சக்கரவர்த்தியை வென்று கி. பி. 1450-ல் 'ஸ்ரீசங்கபோதி புவனேகவாகு' என்னும் சிங்களப்பெயருடன் பதினேழு ஆண்டுகள் அரசாண்டான். இவனே, நல்லூர்க் கந்தசாமிகோயிலை முதன் முதலாகக் கட்டியவன் என்பது வரலாற்றறிஞர் துணிபு.

இவன் இப்பெரும்பணியைச் செய்தமையால் 'சூர்யகுல வம்சோத்பவ ஸ்ரீசங்கபோதிபுவனேகவாகு' என வாழ்த்தப்படுகிறுன். இவன் இக்கோயிலை மிகப் பெரிதாகக் கட்டியிருந்தான் என எண்ண இடமிருக்கிறது. கி. பி. 1478-ல் அரசபீடத்தைக் கைப்பற்றிய சிங்கைப்பரராசசேகரன் இக்கோயிலுக்கு அருகில், ஓர் ஏரியைத் தோண்டி அதில் முதன்முதலாக இங்கிருந்து யமுனுநதியின் தீர்த்தத்தைக் காவடிகளில் கொண்டுபோய்ப் பெய்து 'யமுனு ஏரி' என்று பெயரிட்டு அழைத்தான். அது இப்போது 'யமுனுரி' என மருவி வழங்குகிறது. இவ்வேரி பகரவடிவாக இன்றும் காட்சியளிக்கிறது. இவன், இக்கோயிலை அடுத்துக் கிழக்குத்திசையில், வெயிலுகந்த பிள்ளையார் ஆலயத்தையும், மேற்குத்திசையில் வீரமாகாளியம்மன் கோயிலையும், வடக்கில் சட்டைநாதர் கோயிலையும், தெற்கில் கயிலைநாதர் கோயிலையும் கட்டுவித்துத் தன் தலைநகரை அணிசெய்தான் என்று முதலியார் இராசநாயகம் அவர்கள் தமது நூலில் கூறுகின்றுர்.

17-ஆம் நூற்ருண்டு முற்பகுதியில் போர்த்துகேசியர் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றினர். அவர்களால் இக்கோயில் அடியோடு அழிக்கப்பட்டது. அதன் பின்னர் ஒல்லாந்தர் ஆட்சிக்குவந்தனர். அவர்கள் காலத்திலும் சமய சுதந்திரம் இல்லை. அவர்கள் ஆட்சியின் இறுதிக்காலத்திலே அதாவது கி. பி. 18-ஆம் நூற்ருண்டின் நடுப்பகுதியில் இரகுநாதமாப்பாண முதலியார் என்பவர் அரசியலார் அனுமதிபெற்றுக் கோயிலிருந்த இடத்திலே ஒரு மடாலயத்தைக் கட்டுவித்தார். அதில் வேலைத் தாபித்து வழிபட ஏற்பாடு செய்தார். அதுவே இன்றுள்ள நல்லூர்க் கந்தசாமி கோயில். இங்கேயே திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவசிரோமணியாகிய யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களும், நொத்தார் சு. பொன்னம்பலப்பிள்ளை ஐயா அவர்களும் சிவபுராணங்கட்குப் பயன் சொல்லிச் சைவப்பயிரை வளர்த்து வந்தனர்.

ஆண்டுதோறும் ஆடிமாதத்தில் இருபத்தைந்து நாட்கள் விழா நடைபெறும். முதல் நாள் கொடியேற்றம். பத்தாம் நாள் மஞ்சட் திருவிழா. பத்தொன்பதாம்நாள் முருகன் கயிலாயவாகனத்தில் காட்சிவழங்குவார். இருபத்திரண்டாம் நாள் தண்டபாணி உற்சவம், இருபத்துமூன்ரும் நாள் நல்லைக்கந்தர் சப்ரமஞ்சத்தில் திருவுலாக் கொண்டருளுவர். இருபத்து நான்காம்நாள் தேர்த்திருவிழா. இருபத்தைந்தாம்நாள் தீர்த்தவாரி. அன்று தான் வெற்றிவேல் வீதிவலம் வரும்.

நல்லூர்ப்பெருமானைப் பாடிய அருட்கவிஞர் அநேகர். இருபாலைச் சேனுதிராய முதலியார் என்பவர் நல்லைவெண்பா, திரிபந்தாதி, குறவஞ்சி, கலிவெண்பா, ஊஞ்சற்பதிகம் ஆகிய நூல்களை இயற்றியிருக்கின்ருர். முருகன்மீது பல தனிச் செய்யுட்களும் இவரால் பாடப்பெற்றன.

வல்லுவட்டியில் வாழ்ந்த குமாரசாமி முதலியார் என்பவர், நல்லைக் கலித்துறை என்ற பெயருடன் எட்டுச் செய்யுட்கள் இயற்றியுள்ளார். அவற்றுள் ஒன்றைச் சுவைத்துப்பாருங்கள்.

"கல்லைக் கடையர்கள் கைவிட் டெறியக் கனன்றெழுந்து
பல்லைத் திறந்துறு மிக்கவி தெங்கின் பழமுதிர்க்கும்
மல்லற் பழனங்கள் சூழ்நல்லை நாதனை வந்தடைந்தோர்க்(கு)
இல்லை பிரமக் குயவன் வனைவதற் கேதுக்களே."

# முருகன் ஆயுதங்கள்

சிற்பங்களில் செறிந்துள்ள ஆயுதங்களைப்பற்றிய வரலாற்று நுணுக்கங்கள் 'கணபதி' என்ற நூலில் விரித்துரைக்கப்பெற்றன. முருகனுடைய திருக்கரங்களில் தண்டம், சக்தி, வச்சிரம், அட்சமாலை, கட்கம், கேடகம், பாணம், சக்கரம், கதை, பாசம், வில், அங்குசம், சூலம், கலப்பை, வேல், மணி, குக்குடம், கமண்டலம், தோமரம், சங்கம், வல்லி, மலரம்பு, கரும்பு வில், தீயகல், சுருவம், சுவஸ்திகம், பரசு, தீக்கடைகோல், கோழிக் கொடி முதலிய நாற்பத்தைந்திற்கு மேற்பட்ட ஆயுதங்கள் விளங்கு கின்றன. மணி, அட்சமாலை, கமண்டலம் போன்றவைகள் ஆயுதம் அல்ல வாயினும், ஆயுதமாக உபசரிக்கப்படுகின்றன. ஆதலால் அவைகளையும், கணபதி என்ற நூலில் விரிக்கப்பெற்றவைகளையும் விலக்கி ஏனையவற்றைப் பற்றிய குறிப்புக்களே ஈண்டுக் கொடுக்கப்படுகின்றன.

வச்சிரம் :- இது ஆயிரம் நுனிகளை உடையது. குலிசம் என்றும் அழைக்கப்பெறுவதுண்டு. திண்ணியபொருள் எதுவாயினும் உடைக்கும் வல்லமை உடையது.

கலப்பை :- இது உழுபடை. பகைவர்கள் மேனியை வயலாகக் கொண்டு உழுவதற்குதவுவது. பலராமன் இதனையே ஆயுதமாகக்கொண்டு பகைவர்களை வென்றான் என்று பாரதம் கூறுகிறது.

வேல் :- இது முருகனுக்கே உரிய சிறந்த ஆயுதம். இதற்கு ஆறு நுனிகள் உண்டு. இக்காலத்துச் சிலர், காம்பு நீளமான அம்பையே வேல் எனக் கருதுகின்றனர். "வேலன்று வென்றிதருவது" என்று மன்னனுக்கு அறிவுரை வழங்கவந்த வள்ளுவர் குறிப்பிடுகிறார். இதனால் வென்றிதரும் சிறந்த கருவி வேல் என்பது அறியப்படும். வேலும் வென்றியும் வெல் என்னும் வேர்ச்சொல்லிலிருந்து விளைந்தனவே. அதனாலேயே வேல் தலையாய கருவியாயிற்று. இதனை 'எஃகு' 'சுடரிலைவேல்' என அழைக் கிறது திருமுருகாற்றுப்படை.

நக்கீரதேவர்,

"ஐயிரு வட்டமொடு எஃகு வலந்திரிப்ப, ஒருகை"

என்று திருமுருகாற்றுப்படையில் கூறுகிறார். முருகன் தனது ஒரு திருக் கையினால் வேலை வலமாகச்சுழற்றி வீரந்தோன்ற விளங்குகிறார் என்பது இதன் கருத்து.

மணி :- இது ஒரு படைக்கலமல்லவாயினும் பரநாதத்தை எழுப்பு வதால் ஆணவ இருள் அகன்று ஆன்மாக்கள் உய்திபெறுகின்றன. ஆதலால் இது ஒரு ஞானப்படையாயிற்று.

"பாடின் படுமணி இரட்ட ஒருகை"

என்கிறார் நக்கீரதேவர்.

குக்குடம் :- கோழி. இது அக்கினிதேவன் அம்சம். சூரபன்மனோடு பொருவதற்குமுன் முருகனுடைய கொடியிலிருந்து கூவிற்று; அதனால் ஆயிரம் அசுரவெள்ளங்கள் இறந்தன என்று கந்தபுராணம் தெரிவிக்கிறது. அதனால் இது சிறந்த படைக்கலமே.

தோமரம் :- உலக்கை. பகைவர்களைச் சாடப்பயன்படுவது.

சுருவம் :- இது, யாகத்தீயில் நெய்யிடுவதற்குப் பயன்படுவது. அந்தணர் வேள்வி ஓர்க்கும் முகத்திற்கு ஏற்பத் துணைபுரிவது.

சுவஸ்திகம் :- இது, பகைவர்மேல் சுழற்றி எறியப்படும் ஒரு ஆயுதம். மங்கலப் பொருள்களுள் ஒன்றாகவும் வைத்தெண்ணப்படுவது.

தீக்கடைகோல் :- இது, அரணிக்கட்டை என வழங்கும். வேடர் கையில் விளங்குவது. வேடர்குலத் தலைவராகிய செவ்வேள் திருக்கரத்தும் அமைந்திருப்பது வியப்பன்று.

# கௌமாரமதம்

முருகனை வழிபடுகின்றவர்கள் சம்புபக்கமாகவும் அணுபக்கமாகவும் வைத்து வழிபடுவதுண்டு. அவற்றுள் சம்புபக்கமாவது, சிவபரம்பொருள் ஐந்து முகத்தோடு அதோமுகமும் தாங்கி இருந்த நிலையை நினைத்து இறைவனே முருகன் என்ற உண்மையில் நின்று வழிபடுவது.

அணுபக்கமாவது முருகனை, பக்குவ ஆன்மாக்களில் ஒருவராக - பதமுத்தி பெற்றவராக எண்ணி வழிபடுவது. கௌமாரமதத்தினர் முருகனையே முழுமுதற் கடவுளாகக்கொண்டு அவனுடன் இரண்டறக் கலத்தலே முத்தி என மொழிபவர். இம்மதத்தினர் பெரும்பாலும் தென் தமிழ் நாட்டிலேயே உள்ளனர். வடநாட்டவர்கள் கார்த்திகேயர் என்ற மூர்த்தியை அறிவார்கள். காசியில், தண்டபாணித் திருக்கோயிலுண்டு. ஆனால் அது முருகனுடைய மூர்த்திபேதங்களுள் ஒன்ரு என்பது ஆராயத் தக்கது. ஆதலால் கௌமாரமதம் தமிழ்நாட்டிலேயே பரவியிருந்தமை தெளிவு.

போக்கும் வரவும் இரவும்
　　பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவும் முடிவுமில்
　　லாதொன்று வந்துவந்து
தாக்கும் மனேலயந் தானே
　　தரும்எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுக வாசொல்
　　லொணுதிந்த ஆனந்தமே.

—கந்தரலங்காரம்.

# பரிவாரங்கள்

அரசன் என்றால் அவனுக்குப் பரிவாரங்கள் தேவை. அதுபோல முருகனை முதன்மையாகக்கொண்ட கோயில்களுக்கும், பலவகையாகப் பரிவாரங்களும் அவற்றின் ஆலய அமைப்பும் ஆகமங்களில் அறிவிக்கப் படுகின்றன. பரிவாரங்களின் கோயிலை, மூலத்தானத்தின் விமான அளவில் பாதியாகவாவது, அதற்குக் குறைவாகவாவது இடத்திற்கும் காலத்திற்கும் பொருளுக்கும் ஏற்றபடி அமைத்துக்கொள்ளலாம்.

வெள்ளையானை, மயில் இவற்றை முருகனுக்கெதிரில் எதிர்முகமாக அமைக்கவேண்டும். இவற்றின் விரிவைக் குமாரதந்திரம் பரிவார விதிப் படலத்தால் நன்கு அறியலாம். ஐந்து சுற்றுலைகளை உடைய முருகன் கோயிலில் நான்கு வாயிலிலும், வாயிலுக்கிருவராக எண்மர் துவாரபாலகர் கள் நியமிக்கப்பெறுவர். அவர்களனைவரும் அழகிய வடிவோடும் அன்பு கனிந்த முகத்தோடும், இரண்டல்லது நான்கு திருக்கரங்களுடன் கத்தி, கேடகம், வச்சிரம், கதை இவற்றைத்தாங்கி விளங்குவர். முருகனுடைய திருவணுக்கந்திருவாயிலில் சயன், விசயன் இருவரும் காவல் புரிவர். அடுத்துள்ள நான்கு சுற்றுலைகளிலும் முறையே வாயிலுக்கு இருவராக வீரபாகு, வீரசேனன், வீரன், வீரகஞ்சுகன், வீரகேது, மகாவீரன், வீரமௌலி, வீரியவான் என்பவர்களும், அடுத்துள்ள வாயில்களில் பத்மன், மகாபத்மன், சுபத்மன், பத்மலோசனன், பத்மகன், பத்மகேது, பத்மாபன், பத்மவர்மன் இவர்களும், அடுத்த சுற்றுலை நான்கு வாயில்களிலும் நிகும்பன், கும்ப கர்ணன், கும்பன், கும்போதரன், கும்பநாசன், கும்பப்பிரட்டன், கும்பா சியன், கும்பகண்டகன் இவர்களும், அடுத்து மகாமண்டபத்தை ஒட்டி யுள்ள சுற்றுலையில் வக்கிரதந்தன், வக்கிரதிருட்டி, வக்கிராங்கன், வக்கிர வர்ணகன், வக்கிரநாசன், வக்கிரகர்ணன், வக்கிராசியன், வக்கிரசிர்ஷன் இவர்களும் காத்து நிற்பர். முருகன் திருமுன் மகாமண்டபத்தை ஒட்டி வலதுகைப்பக்கத்தில் வீரவாகு முதலிய நவவீரர்களும் காட்சி வழங்குவர். இத்தகைய ஆலயமே முருகப்பெருமானுக்குகந்த முழு ஆலயமாம் என்று குமாரதந்திரம் கூறுகிறது.

முருகப்பெருமானுக்குத் திருக்கோயில் அமைக்கும்போது எட்டு, பன்னிரண்டு, பதினாறு அல்லது முப்பத்திரண்டு பரிவாரங்களைச் சூழ அமைக்கலாம் என்கிறது ஆகமம்.

## 8 பரிவாரங்கள் அமைந்த முருகன் கோயில்

### கிழக்குப்பார்த்த சந்நிதி

| | | |
|---|---|---|
| சப்தமாதர் | ஜேஷ்டாதேவி | துர்க்கை |
| பிரமன் | முருகன் (மூலஸ்தானம்) | சந்திரன் |
| சாஸ்தா | வெள்ளையானை | சூரியன் (சுமித்ரசண்டர்) |

## 12 பரிவாரங்கள் அமைந்த முருகன் கோயில்

| | | | | |
|---|---|---|---|---|
| சப்தமாதர் | வருணன் | அகஸ்தியர் | லட்சுமி | துர்க்கை |
| | | | | |
| பிரமன் | முருகன் (மூலஸ்தானம்) | | | நாரதர் |
| யமன் | | | | சுமித்ரர் |
| சாஸ்தா | சூரியன் | யானை | | |

## 16 பரிவாரங்கள் அமைந்த முருகன் கோயில்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சப்தமாதர் | சுக்கிரன் | அகஸ்தியர் | வியாழன் | | துர்க்கை |
| | | | | | திதி |
| சரஸ்வதி | | | | | |
| பிரமன் | முருகன் (மூலஸ்தானம்) | | | | நாரதர் |
| லட்சுமி | | | | | அதிதி |
| சாஸ்தா | சூரியன் | யானை | | சந்திரன் | சுமித்ரர் |

## 32 பரிவாரங்கள் அமைந்த முருகன் கோயில்

நாற்பத்தொன்பது பதங்கள் (கட்டங்கள்) கீறி, இடையிலுள்ள ஒன்பது கட்டங்களை மூலஸ்தானமாகப் பகிர்ந்து அதனைச்சூழ திருமகள், பூமி, ஜேஷ்டாதேவி, பாரதி, ஆர்யா, வாஸ்துவதிபதி, சுமித்ரர், யானை, பிரமா, அகஸ்தியர், நாரதர், ஈசன், பர்ஜன்யர், மகேந்திரன், பாஸ்கரன், பூஷ்ணி, யமன், கந்தருவன், சந்திரன், பிதிரு, புஷ்பதந்தன், சுரர், நாகம், பல்லாடகம், சோமன், திதி, அதிதி முதலானவர்களை உரிய இடங்களில் அமைத்து வழி படவேண்டும் என்கிறது ஆகமம்.

# வழிபாட்டுமுறை

**நாள்வழிபாடு :**

சிவபூசைக்குப் போல, சூரியபூசை முதல் துவாரபாலகர் பூசைவரை விதிப்படி முடித்துக்கொண்டு, பூசைக்குரிய இடம் சாதனம் பொருள்கள் எல்லாவற்றையும் நன்ருக ஆராய்ந்து, திருவுருவைத் தூய்மைப்படுத்த வேண்டும். திருமுன் சென்று வணங்கிச் 'சித்தர்களாலும், இருடிகளாலும், தேவர்களாலும், மக்களாலும் நன்ருகப் பூசிக்கப்பட்ட தேவரீரை அடியேன் இயன்றவரை பூசிக்கின்றேன்; கருணைசெய்க' என்று வேண்டிக்கொண்டு, அறுகு, அட்சதை, சந்தனம் முதலியவற்ருல் விசேஷார்க்கியத்தை அமைத்து, மந்திரங்களைச் சொல்லி, முருகனுக்குரிய காயத்திரி மந்திரத்தால் வழிபடுதல் வேண்டும். பின்னர், சந்தனம் அட்சதை இவற்றெடுகூடிய பாத்தியம் ஆசமனங்களை அமைக்க. இருதய மந்திரத்தால் திரையை விலக்கி நிர்மாலியத்தைக் களைந்து சுமித்ரசண்டர் பொருட்டாக ஈசானியத்தில் வைக்க. திருவுருவை அஸ்த்ர மந்திரத்தால் தூய்மைப்படுத்தி ஸ்கந்தகாயத்திரி மந்திரத்தால் நீராட்டுக. திருவுருவம் உலோகத்தினுல் இயன்றதாயின் பருவகாலங்களிலும் ஓவிய முதலியவற்ருல் இயன்றதாயின் கூர்ச்சத்தாலும் தூய்மைப்படுத்துக. பின்னர், மந்திரசுத்திசெய்து ஸ்கந்த சூக்தம் மூலமந்திரம் பிரம்மமந்திரம் ஷடங்கமந்திரம் மாலாமந்திரங்களால் முருகனைப் பூசிக்க.

ஆகமங்கள் விதித்தபடி முருகனுடைய பீடத்திற்கடியில் பிரணவத்தைப் பூசிக்க. அதன்மேல் ஆதாரசக்தியையும் அதன்மேல் அனந்தாசனத்தையும் அமைக்க. வெண்ணிறமான தர்மத்தையும், பத்மராகநிறமுடைய ஞானத்தையும், பொன்னிறமான வைராக்கியத்தையும், கருநிறமான ஐசுவரியத்தையும் ஆசனத்தின் அக்கினிதிசை முதற்கொண்டமைத்து வழிபடுக. அதர்மம் அஞ்ஞானம் அவைராக்யம் அனைசுவரியம் இவற்றைக் கிழக்கு முதலிய திசைகளில் அமைக்க. செந்நிறமான மாயையாகிற அடித்தளத்தை இறுதியில் பூசிக்க. வெண்ணிறமுள்ள ஞானமாகிற மேற்றளத்தை ஈசானியத்தில் வழிபடுக. இவ்வாறு அமைந்த சிம்மாசனத்தில்

கிழங்கு, வித்து, முளை, தண்டு, கண்டகம், மொட்டு, இதழ், கேசரங்கள், பொகுட்டு இவற்றேடுகூடிய பத்மாசனத்தை அமைக்க. சகுநீ, ரேவதி, பூதநா, மகாபூதநா, நிசிதிநீ, மாலிநீ, சீதளா, சுத்தா முதலிய சக்திகளை கிழக்கு முதலிய திசைகளில் முறையே அமைக்க. நடுவில் விஸ்வதோமுக்யை நம : என்று பூசிக்க. விமலாசனத்தையும் தத்துவாசனத்தையும் பூசித்து, அதன் மேல் முருகனை ஆசனமூர்த்தி மந்திரங்களால் வழிபடுக. இருகை நிறையப் பூவெடுத்து புருவமத்திவரை கொண்டுபோய் அந்தந்த மூர்த்திக்குரிய மூல மந்திரத்தோடு ஆவாகனம்செய்க. ஈசானமந்திரத்தால் ஸ்தாபனமும், தத் புருஷமந்திரத்தால் சந்நிதானமும், அகோரமந்திரத்தால் சந்நிரோதனமும், வாமதேவமந்திரத்தால் வரவேற்பும், அஸ்த்ரமந்திரத்தால் திக்பந்தனமும், கவசமந்திரத்தால் அவகுண்டனமும், சத்யோஜாதமந்திரத்தால் அமிர்தமாகப் பாவித்தலும் செய்து இறைவனைப் 'பூசை முடியும்வரையில் இவ்வுருவில் எழுந்தருளுக' என வேண்டிக்கொள்க.

பத்மமுத்திரை, மகாமுத்திரை, சண்முகமுத்திரை காட்டுக. இருதய மந்திரத்தால் பாத்தியமும், தத்புருஷ மந்திரத்தால் ஆசமனமும், சண்முகாய வௌஷட் என்று அர்க்கியமும் அளித்து, ஆபோகிஷ்ட என்ற மந்திரத்தால் பஞ்சகவ்வியமும் அளிக்க. பின்னர், தண்ணீர் மாப்பொடி மஞ்சட்பொடி நெல்லிப்பொடி இவற்ருலும் வில்வ நீராலும் அபிஷேகம் செய்க. நீராட்டும் பொழுது ஸ்ரீருத்ரம் சமகம் புருஷசூக்தம் இவற்றைக் கூறுக. சிறப்பாக ஸ்கந்த காயத்திரியாலும் மாலாமந்திரங்களாலும் மூலபிரம்ம ஷடங்கமந்திரங் களாலும் நீராட்டி இருதய மந்திரத்தால் ஆடை அணிவிக்க. ஆசமனம் அளிக்க. தத்புருஷமந்திரத்தால் சந்தனமும், இருதயமந்திரத்தால் பூணூல் முதலிய ஆபரணங்களும், ஈசானமந்திரத்தால் பூவும், அகோரமந்திரத்தால் தூபதீபங்களும் கொடுத்து மனோரதமுத்திரை செய்க. தலை, முகம், இதயம், வயிறு, குய்யம், திருவடி இவைகளில் பஞ்சப்பிரம்ம மந்திரங்களாலும் சர்வதோபத்திரம், சகத்புவாதி மந்திரங்களாலும் அருச்சிக்க. முன்சொன்ன ஆறு மந்திரங்களாலும், கிழக்கு முதலிய திசைகளை நோக்கியுள்ள ஆறு திருமுகங்களிலும் பூசிக்க. முருகனுடைய இதயம் நேத்திரம் சிகை சிரசு அஸ்த்ரம் இவற்றை அந்தந்த மந்திரங்களாலும் எல்லா அவயவங்களையும் கவசமந்திரத்தாலும் அருச்சிக்க. பின்னர் ஆவரண பூசை செய்க.

**முதல் ஆவரணம்:** ஈசானதளத்தில் ஈசானய சகத்புவே நம: என்றும் கிழக்குத்தளத்தில் தத்புருஷாய என்றும் செபித்து, வசத்புவே நம: என்று

அருச்சிக்க. தென்தளத்தில் அகோராய விஸ்வபுவே நம: என்றும், வடக்குத் தளத்தில் வாமதேவாய ருத்ரபுவே நம: என்றும், மேற்குத்தளத்தில் சத்யோ ஜாதாய பிரம்மபுவே நம: என்றும், நிருதிதளத்தில் சத்யோஜாத வக்த்ராய புவத்புவே நம: என்றும், ஈசானபாகத்தில் நேத்ரேப்பியோங் நம: என்றும், அக்கினிமூலையில் ஹ்ருதயாய நம: என்றும், ஈசானபாகத்தில் சிரஸே நம: என்றும், நிருதியில் சிகாயை நம: என்றும், வாயுமூலையில் கவசாய நம: என்றும், நான்கு திக்கிலும் அஸ்த்ராய நம: என்றும் அருச்சிக்க.

**இரண்டாவது ஆவரணம் :** ஜயந்தாய நம; அக்னிசிகாய நம: கிருத்திகா புத்ராய நம: பூதபதயே நம; சேனுன்யை நம: குகாய நம: ஹேமசூலாய நம: விசாலாட்சாய நம: எனக் கிழக்குமுதல் ஈசானம் வரை பூசிக்க.

**மூன்றுவது ஆவரணம்:** முருகனுடைய வலதுபக்கத்தில் வள்ளி, இடதுபக்கத்தில் தெய்வயானை, கிழக்கில் யானை, மேற்கில் மயில், அக்கினி மூலையில் சுதேகர், நிருதியில் சுமுகர், வாயுமூலையில் தேவசேனுபதி, ஈசானத்தில் சுமித்ரர் இப்படிப் பூசித்து வழிபடுக.

**நான்காவது ஆவரணம்:** இந்திரன் முதலிய திக்குப்பாலகர்களை அவரவர்கள் தங்கிய திசைகளில் வழிபடுக.

**ஐந்தாவது ஆவரணம்:** இந்த ஆவரணத்தில் வச்சிரம் முதலிய ஆயுதங்களைப் பூசித்து வழிபடுக.

பின் தேனுமுத்திரை, பத்மமுத்திரை, திரிசூலமுத்திரை, மகரமுத்திரை, சிருக்முத்திரை, நமஸ்காரமுத்திரை இவைகளை ஷடங்க, நியாச மந்திரங் களால் செய்க. பின்னர் ஆசமனம் அர்க்கியம் அளிக்க. பின்னர், ஏகத் திரும்சத்கலா நியாசமும் செய்க. தேங்காய் பழம் பாக்கு வெற்றிலை பணியாரங்கள் முதலிய நைவேத்தியம் அமைத்து அவற்றை அர்க்கிய ஜலத் தால் புரோட்சித்து நிவேதிக்க. பச்சைக்கற்பூரங்கூட்டிய பானியம் அளிக்க. பின் கையைத் துடைத்துவிட்டு ஆசமனம் தருக. தாம்பூலம் ஊட்டுக. சோடசோபசாரமும் செய்க. நாள்விழாச்செய்க. நிருத்தகீத வாத்யங்களை நிகழ்த்துக. மூலமந்திரத்தை 108 உருவாவது செபிக்க. பிறகு திருமுறை திருப்புகழ் பிள்ளைத்தமிழ் இவற்றல் தோத்திரிக்க. பிரதட்சிண நமஸ்காரங் கள் செய்து முருகனுக்குக் களிப்பூட்டுக. 'முருகா! அடியேன் செய்த


ஹௌம்
க்ரோம்
ஓம்
ஸூம்
ஹம்வைவை
உச்சிஷ்டாயஸ்வாஹா
க்லீம்
ஹ்ரீம்
ஶரவணஹவ
ஹ
ஹ்ரௌம்
ஸ்ரீம்
ஸ்ரீம்
ஸௌம்
ரீம்
க்லீம்

பூசையில் அன்பு மந்திரம் கிரியை இவற்றால் குறையிருந்தாலும் நிறைவாக ஏற்று அருள்கூர்க' எனப் பிரார்த்திக்க. மீண்டும் மீண்டும் வணங்குக. 'நான் செய்த பூசை நல்லதாக இருந்தாலும் அல்லதாக இருந்தாலும் அவற்றையெல்லாம் ஏற்றருள்புரிக; தேவரீரே கொடுப்பவர்; தேவரீரே நுகர்பவர்; எனக்கென்று ஒன்றும் இல்லை; ஆதலால் இந்தப் பூசையின் பயனையும் ஏற்றருளவேண்டுகிறேன்' என்று பிரார்த்திக்க.

இவ்வண்ணம் மூன்று காலமாவது பூசிக்க. ஒன்பதுகாலம் பூசித்தல் நலம். அர்த்தயாமத்தில் சிறப்பான பூசைசெய்க. பின் க்ஷேத்திரபாலரையும் சுமித்ர சண்டரையும் பூசிக்க. தாண்டவம்வரை பூசிப்பது சம்பூர்ணம். பலிவரையிற் பூசிப்பது சாந்திகம். அவிஸ்வரையில் பூசிக்க இயலாதவர்கள் தீபம் வரையிலாவது பூசிக்கவேண்டும். இவ்வாறு பூசிப்பவர்கள் எல்லா நன்மைகளையும் எய்துவர். இதுவரை கூறியது நாள்வழிபாட்டுமுறை.

**திருவிழாக்கள் :**

விழாக்கள் அனைத்தும் மக்களுக்கு இருமையின்பத்தையும் அளிப்பன. எல்லா உலகங்களுக்கும் நன்மை அளிப்பன. புண்ணியமாயின. எப்போதும் வெற்றி கொடுப்பன. எல்லாச் சித்திகளையும் கொடுப்பன. அமைதியை அளிப்பன. பகைவர்களை அழிப்பன. வேண்டிய எல்லாவற்றையும் விளைப்பன. இவ்வண்ணம் மக்களைப் பாதுகாக்கும் விழாக்களுக்கு உத்ஸவங்கள் எனப்பெயர். உத்ஸவம் என்பது உத், ஸ, வம் என்று மூன்றெழுத்தாலானது. உத் - சிருட்டி, ஸ - திதி, வம் - சங்காரம் ஆகவே உத்ஸவம் சிருட்டியாதி முத்தொழிலைக்குறிப்பிடுவது என்பது பொருளாம்.

இவ்விழாக்கள் மாதவிழா, பெருவிழா, அன்பர்விழா என மூவகைப் படும். வடமொழியில் மாசோத்ஸவம், மகோத்ஸவம், பக்தோத்ஸவம் என அழைக்கப்பெறும். இவற்றுள் மாசோத்ஸவம், மாதப்பிறப்பில் செய்யத்தக்கது. மகோத்ஸவம் ஒருநாள், மூன்றுநாள், ஐந்துநாள், ஏழு நாள், ஒன்பதுநாள், பன்னிரண்டுநாள் கொண்டாடப்பெறுவதால் ஆறு வகைப்படும். இவை முறையே சிவம், சாத்துவிகம், பௌதிகம், ஸ்ரீகரம், சௌக்யம், பைதிருகம் எனப் பெயர்பெறும். இவற்றுள் முதல் மூன்றும் கொடியேற்றாமல் இயற்றவேண்டியது. இறுதிமூன்றும் கொடியேற்றிக் கொண்டாடத்தக்கவை. எல்லா மாதங்களிலுமே கார்த்திகை விசாகம்

இந்நட்சத்திரங்கள் தீர்த்தவிழாவுக்குச் சிறந்தன. கிருஷ்ணபட்ச சஷ்டிதிதி எல்லாமாதங்களிலும் முருகனுக்கு விழாக் கொண்டாடத்தக்க நாட்கள்.

அரசன் பிறந்தநாள், முடிசூட்டுநாள், கிராமம் நிருமிக்கப்பட்டநாள், அரசன் இறந்தநாள், போரின் துவக்கநாள், வென்றநாள், மார்கழித் திருவாதிரை, தைப்பூசம், மாசிமகம், பங்குனி உத்திரம், சித்திரைமாத சித்திரை, வைகாசி விசாகம், ஆனி மூலம், ஆடிப் பூரம், ஆவணித் திருவோணம், புரட்டாசி பூராடம், ஐப்பசி அசுவதி, கார்த்திகைமாத கார்த்திகை இவைகளில் விழா அமைக்க. ஒரேமாதத்தில் இரண்டு நட்சத்திரங்கள் வந்துவிடுமாஞல் பின்னதே விழாவிற்கு ஏற்றது. முன் நட்சத்திரத்தில் விழா நிகழ்த்தப்பெறின் கர்த்தா அழிவன். குறித்த நட்சத்திரம் ஏதாவது குற்றங்களோடு கண்டிக்கப்பட்டதாயிருப்பின் வேருென்றிற் கொண்டாடலாம். சமுத்திரக்கரை ஓரமாயுள்ள தலங்களில் திதிகளே சிறந்தன. ஏனையவிடங்களில் நட்சத்திரம் சிறந்தது.

மகோத்ஸவங்கள் நடந்துகொண்டிருக்கிறபோது வேறு உத்ஸவம் வந்துவிடுமாஞல் கொடியேற்றமின்றி நிகழ்த்தவும் செய்யலாம். விழாத் தொடக்கத்தில் அங்குரார்ப்பணம், அடுத்து மயூரயாகம், அடுத்துப் பேரிதாடனம், அடுத்துத் துவாஜாரோகணம், பின் யாகம், அஸ்திரயாகம், பலிதானம், அஷ்டவாகனம், பரிவேஷணம். நீராஞ்சனம், கௌதுகம், தீர்த்த சங்கிரகணம் (நீர் கொணர்தல்), சூர்ணகாரம் (பொடியிடித்தல்), தீர்த்தம், துவஜாவரோகணம், (கொடியிறக்கல்), ஸ்நபனம் என்ற பதிருறு வகைக் காரியங்களால் உத்ஸவம் விதிக்கப்பட்டுள்ளது. மந்திர வேறுபாட்டைத் தவிர செய்முறைகள் வேறுபாடின்மையால் சிவபெருமானுக்குரிய இவற்றையும் கொண்டாடலாம். எந்த விழாவாயிருப்பினும் அங்குரார்ப்பணம் இல்லாமல் செய்தல் ஆகாது; செய்தாற் பயனுமில்லை.

முருகனுக்கு ஏற்றுங்கொடியில் வேலும் மயிலும் கோழியும் எழுதப்படலாம். அவற்றுள் வேலுக்கே முதன்மை அளிக்கப்படவேண்டும். இவற்றினடியில் அட்டமங்கலப் பொருள்களும் எழுதப்படலாம்.

விழாவினிறுதியில் மௌன உத்ஸவத்தின் பிறகு சுமித்ரசண்டருக்கு விழாக்கொண்டாடுக. விதிப்படி அபிடேக ஆராதனைசெய்து மூர்த்தியை ஆஸ்தானமண்டபத்தில் எழுந்தருளுவித்து, பிராயச்சித்தத்தின் பொருட்டு அபிடேகமும் யாகமும் செய்து விழாவை நிறைவேற்றுக.

மாதவிழாக்களில், சித்திரைவிழாவில் தமனகம் - ?, வைகாசியில் சந்தனத்தாலும், ஆனியில் பழங்களாலும், ஆடியில் பாலாலும், ஆவணியில் சருக்கரையாலும், புரட்டாசியில் பணியாரங்களாலும், ஐப்பசியில் அன்னத்தாலும், கார்த்திகையில் விளக்கேற்றுதலாலும், மார்கழியில் நெய்யாலும், தையில் விபூதியாலும் - ?, மாசியில் நெய் கம்பளி இவற்றாலும், பங்குனியில் தயிராலும் முருகனைப் பூசிக்க. மாதபூசையில்லாமல் வேறு பூசையாற் பயனில்லை. எப்பொழுதும் நித்தியபூசையை முடித்துக்கொண்டே நைமித்திய பூசை இயற்றுதல்வேண்டும்.

இவ்வண்ணம் ஆகமங்களின் விதியையொட்டி விழாக்களை நிகழ்த்தின் எல்லா நன்மைகளும் நாட்டுக்கே உண்டாம்.

நாள்என் செயும்வினை தான்என்
செயும்எனை நாடிவந்த
கோள்என் செயும்கொடுங் கூற்றென்
செயும்கும ரேசர்இரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் சண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

# அருள்பெற்ேறார்

முருகன் அருள் பெற்றவர்களே முருகனை நமக்குக் கண்டு காட்டு கிறவர்கள். இலக்கியங்களாலும், இனிய உபதேசங்களாலும் நம்மை முருகன் திருவடிக்கு ஆளாக்குவதால் அவர்களே நமக்கு நல்லாசிரியர்கள். அவர்களில் அகத்தியர் முதன்மையானவர்.

அகத்தியர் செந்தமிழ் முனிவர். கந்தமூர்த்தி செந்தமிழ்நாட்டை அகத்தியருக்குக்கொடுக்க, அகத்தியர் பாண்டியனுக்குக் கொடுத்தார் என்று திருநெல்வேலித் தலபுராணம் கூறுகிறது. ஒருகாலத்து நைமிசாரணிய முனிவர்கட்கும் அகத்தியருக்கும் கருத்து மாறுபாடு விளைந்தது. அதனால், நைமிசாரணிய வனத்தைவிட்டு அகத்தியர் பொதியமலையை அடைந்தார். அங்கு ஒரு ஆசிரமம் அமைத்துக்கொண்டு கந்தமூர்த்தியை வழிபட்டு வந்தார். ஒருநாள் மாலைக்காலத்தில் தெய்வமணம் வீசியது. அது எதன் மணம் என்று அறியாத அகத்தியர் அறுமுகப்பண்ணவனைப் பிரார்த்தித்தார். அவனருளால் அது தெய்வத்தமிழ்மணம் என்று சிந்தைதெளிந்து அறுமுகப் பெருமானையே ஆசானாகக்கொண்டு ஓதியுணர்ந்து இலக்கணமும் தந்து எழில்பெறத் தமிழை வளர்த்தார்.

சிவபெருமான் திருக்கல்யாணத்தின்போது தென்றமிழ்நாடு நோக்கி வந்த அகத்தியர் கிரவுஞ்சமலையின் மாயையில் சிக்குண்டு தவித்தார். பிறகு சிவபெருமான் திருவருளால் தெளிந்து 'ஏ கிரவுஞ்சமே! அரன் அடிமை யாகிய என்னை மயக்கியமையால் நீ குமாரக்கடவுளின் வேலாயுதத்தால் பிளப்புண்ணுக' என்று சாபங்கொடுத்தார். அங்ஙனமே குமாரக்கடவுள் கிரவுஞ்சமலையைப் பிளந்தார் என்பது காசிகாண்ட வரலாறு.

கொல்லாபுரத்தில் அகத்தியர், திருமகளை 'எல்லாச் செல்வமும் தந்தருளுக' என வேண்டிப் பூசித்தார். திருமகள் அவர்முன் எழுந்தருளி உனக்கு வேண்டிய எல்லாவற்றையும் குமரவேளே கொடுப்பார் எனக் கூறி மறைந்தனள். அகத்தியர் அங்ஙனமே குமரவேளை வழிபட்டு எல்லாச் செல்வமும் எய்தினர்.

நக்கீரர். கடைச்சங்கப் புலவராய் வீற்றிருந்து இறையனாரகப்பொருளுரை முதலியன கண்டு தமிழுக்குப் பெரும்பணி புரிந்தவர். சிவபூசை செய்யும்போது சிந்தை சிறிது புறம்போக அதனால் சிறைப்பட்டு, திருமுருகாற்றுப்படை பாடி, முருகன் அருளால் விடுதலை பெற்றார். இதுவே சிறைவீடுசெய்த பாட்டாக இம்மை மறுமை இன்பங்களைப் பயக்கும் எளிய சாதனமாக இயங்குவதை இன்றைய உலகம் அறிந்து பயன்படுத்தி வருகிறது. இவர் வரலாற்றின் விரிவைத் திருவிளையாடற்புராணத்தில் கீரனைக்கரையேற்றிய படலத்தும், சீகாளத்திப் புராணத்தும் நன்கு அறியலாம்.

பாரதம் பாடிய பெருந்தேவனார் குறுந்தொகையில் கடவுள் வாழ்த்தாக முருகனைப் புகழ்ந்துபாடி இருமையின்பமும் எய்தினர்.

ஔவையார் முருகனால் சுட்டப்பழம் வேண்டுமா சுடாதபழம் வேண்டுமா என்று நகையாடி வினவப்பெற்று நல்ல பயனைப்பெற்றார்.

பொய்யாமொழிப்புலவர் முருகனாகிய முட்டையைப் பாடி அவர் பேரருளில் திளைத்தமையைத் தொண்டைமண்டலசதகம் விளக்கும்.

அருணகிரியார் திருவண்ணாமலையில் வடக்குக் கோபுரத்துக்கு அருகில் உள்ள முருகன் கோயிலில் பன்னெடுநாட்கள் பாடு கிடந்து, முருகன் எழுந்தருளியுள்ள தலங்கள் அவ்வளவுக்கும் சந்தப்பாமாலை சாத்தி நாட்டை உய்வித்தார்.

திருச்செந்தூர் வென்றிமாலைக் கவிராயர் என்பவர் திருச்செந்தூர் முக்காணியர் பரம்பரையிற்றோன்றி, முருகன் அருளால் 'வென்றிமாலைக் கவிராயர்' என்ற பட்டமும்தாங்கி, திருச்செந்தூர்ப் புராணமும் இயற்றிய வன்மையைச் செந்தமிழ்நாடு தெள்ளிதின் அறியும்.

கச்சியப்பசிவாசாரியர் காஞ்சி குமரகோட்ட காளத்தியப்ப சிவாசாரியருடைய குமாரர். ஆதிசைவ மரபினர். முருகனால் கந்த புராணம் பாடுக என ஆணையிடப்பட்டவர். இவருடைய புராணத்துக்கு முருகனே 'திகடசக்கர' என அடியெடுத்துக் கொடுத்தார். கந்தபுராணத்தை அரங்கேற்றும் பொழுது திகழ் தசக்கரம் எனப் பிரித்து உரை விளக்கினர்,

அவையில் இருந்த புலவர்கள் 'இதற்குப் புணர்ச்சிவிதி யாது?' என வினவ, முருகனே புலவராக எழுந்தருளி வீரசோழிய விதியைக்கொண்டு அமைதி வகுத்தனர் என்ப.

குமரகுருபரர் சீவைகுண்டத்தில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கு அருமை மகவாகத் தோன்றியவர். ஐந்தாண்டுவரையில் ஊமையாக இருந்து முருகனதருளால் ஊமை நீங்கப்பெற்று, கந்தர்கலிவெண்பா என்னும் சாத்திர தோத்திர நூலை இயற்றியவர். பல செந்தமிழ்ச் சிறுநூல்களை ஆக்கித் தந்தவர். இடமிடங்கள்தோறும் கந்தக்கடவுள் கருணையை விளக்கும் கவிதைநலம் சிறக்கப்பெற்றவர். ஸ்ரீ காசிமடத்து முதல்வர்.

தேவராயசுவாமிகள் கந்தர்சஷ்டிகவசம் என்ற பாராயண நூலைப் பகர்ந்தவர். மக்களுக்கு இன்றியமையாத நலங்கள் பலவற்றையும் முருகன் நல்லருள் கொடுக்குமென்று இந்நூல் கூறுகிறது. முருகனுடைய ஆறெழுத் தருமறை இந்நூலுள் பலவிடங்களிலும் பலமுறைகளில் மாற்றி அமைக்கப் பெற்றுள்ளது.

இராமலிங்கசுவாமிகளைத் திருவருட்பா வாயிலாகச் செந்தமிழ்நாடு நன்கு அறியும். எங்கெல்லாம் அன்புவெள்ளமும் அருள்வெள்ளமும் பெருக்கெடுத்து ஓடுகின்றதோ அங்கெல்லாம் இராமலிங்கசுவாமிகளுடைய அருட்பா முழங்கிக்கொண்டிருக்கும். இவர்கள் பிள்ளைமைப் பருவத்து, நிலைக்கண்ணுடியிலே முருகன் உருவம் முழுவதையும் தரிசித்தார்கள் என்பது வரலாறு. இவர்களுடைய கந்தகோட்டப்பதிகம் முருகன் அருள் பெறுவார்க்குச் சிறந்த துணை.

பாம்பன்சுவாமிகள் யாழ்ப்பாணத்திலே பரம்பரைச் சைவமரபிலே தோன்றியவர். பாம்பனிலே வசித்தமையால் பாம்பன்சுவாமிகள் என்று அழைக்கப்பெற்ருர். இவருடைய இயற்பெயர் குமரகுருதாசசுவாமிகள் என்பது. சிறந்த முருகனடியவர், இவர் செய்த அற்புதங்கள் மிகப்பல. முருகனைப்பற்றி ஆயிரக்கணக்கான பாடல்கள் அருளிச்செய்துள்ளார். சண்முககவசம் சிறந்த பாராயண நூல். மயூரபந்தம் இவர்கள் எடுத்துக் கொடுத்த புதுமையான சித்திரக்கவி. இவருடையமொழிகள் ஒவ்வொன் றிலும் முருகப்பெருமானுடைய திருவருட்பொலிவு இன்றும் இருப்பதைக் காணலாம்.

தண்டபாணிசுவாமிகள் திருவாமாத்தூரில் சைவவேளாளர்மரபிலே அவதரித்து முருகனருளால் பல்லாயிரக்கணக்கான பாடல்களைச் செய்தவர். புலவர் புராணம், திருவலங்கல்திரட்டு முதலிய சிறந்த நூல்கள் இவரால் செய்யப்பெற்றவை.

இவ்வண்ணம் இஞ்ஞான்றும் முருகக்கடவுளை வழிபட்டு இருமை யின்பங்களையும் எய்தினோர் பலராவர். செவ்வாய்க் கிரகத்தின் ஆட்சித்தான மாகிய செந்தமிழ்நாட்டில் செவ்வேள் என்றும் கண்கண்ட தெய்வமாக விளங்குவதைக் கண்டு காட்டுபவர்கள் இவர்களே.

மாலோன் மருகனை மன்றுடி
மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான
தெய்வத்தை மேதினியில்
சேலார் வயல்பொழில் செங்கோ
டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரம்கண் படைத்தில
னே அந்த நான்முகனே.

—கந்தரலங்காரம்.

# உபாசனை

உபாசனை உறுதி பயப்பது. தளர்ந்த மனத்திற்குத் தக்க துணை. அச்சம்போக்கும் அரியமருந்து. ஆக்கம் அளிக்கும் குளிகை. நம் முன்னோர்கள் உபாசனையாலேயே உயர்ந்திருக்கின்றனர். தமது உள்ளக்கிழியில் உருவெழுதி மந்திரங்களை எண்ணி எண்ணியே இன்பநிலைகளை எய்தியிருக்கின்றனர்; நமக்கும் அந்த வழிவகைகளை அருளிச்செய்திருக்கின்றனர். நாமும் மந்திரங்களை உணர்ந்து உய்தலே சிறந்த வழி.

முருகனைப்பற்றிய மந்திரங்கள் பல, குமாரதந்திரம் மந்திரோத்தாரப் படலத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளன. அவையன்றிச் சில அனுபூதிமான்களும் மக்கள் நல்வாழ்விற்கு வேண்டிய ஆறு கன்மாக்களை இயற்றக்கூடிய அருமையான மந்திரங்களையும், அனுட்டான முறைகளையும் அறிவித்திருக்கின்றனர். அவற்றைப்பற்றிய குறிப்புக்களும், யந்திரங்களும் படங்களாக வரையப்பெற்று அங்கங்கே இடம்பெற்றுள்ளன. அனுட்டிக்கவேண்டிய முறைகளைமட்டும் ஆசாரியன் மூலமாக அறிதலே நல்லது ஆதலின் அது விடுக்கப்பெற்றது.

உபாசனைக்கு நித்தியபூசையும், விசேஷபூசையும், விழாக்களும் மிக இன்றியமையாதன. அவைகளை இயற்றும் முறைகளும் கீழே விவரிக்கப் பெற்றுள்ளன. முறையே காண்க.

**சுப்ரமண்ய மந்திரங்கள் :**

மனத்திற்கு உகந்த தூய இடத்தில் இருந்து சக்கரம் எழுதி, அதில் அட்சரங்களை அமைத்து, செஞ்சந்தனம் சிவப்புப் பூக்கள் இவற்றால் விதிப்படி அருச்சித்து வழிபடுதல்வேண்டும். அதற்குரிய மூலமந்திரங்களாவன ;-

| | | |
|---|---|---|
| ஸ்கந்தர் மூலமந்திரம் :- | | ஓம் ஸ்ரூம் ஸ்கந்தாய நம : |
| சுப்ரமண்யர் | ,, | ஓம் ஸௌம் ஸுப்ரமண்யாய நம : |
| குமாரர் | ,, | ஓம் க்ரூம் குமாராய நம : |

ஆகர்ஷணயந்திரம்.




ஆகர்ஷணம் (வேறு)




மோஹன யந்திரம்




மோகனம் (வேறு)



வஶ்யம்




வஶ்யம் (வேறு)




ஸ்தம்பந யந்திரம்




உச்சாடநம்



| | |
|---|---|
| குஹர் மூலமந்திரம் :- | ஓம் ஸௌம் ஸ்வாமிந் குஹாய நம: |
| சரவணபவர் ,, | ஓம் ஸ்ரீம் சம் சரவணபவாய நம: |
| ஷண்முகர் ,, | ஓம் ஹ்ரீம் ஷம் ஷண்முகாய நம: |

**பஞ்சப்பிரம மந்திரங்கள் :**

ஓம் ஸம் சத்யோஜாதாய நம:
ஓம் ஸிம் வாமதேவாய நம:
ஓம் ஸௌம் அகோராய நம:
ஓம் ஸெம் தத்புருஷாய நம:
ஓம் ஸொம் ஈசாநாய நம:

**ஷடங்க மந்திரங்கள் :**

ஓம் ஸாம் ஹ்ருதயாய நம:
ஓம் ஸீம் சிர்ஸே நம:
ஓம் ஸூம் சிகாயை நம:
ஓம் ஸைம் கவசாய நம:
ஓம் ஸௌம் நேத்ரேப்யோ நம:
ஓம் ஸ: அஸ்த்ராய பட்

ஸாம் ஸீம் ஸூம் ஸைம் ஸௌம் ஸ: என்ற பீஜங்களை ஷடங்க மந்திரங்களின் முதலிலும் ஈற்றிலும் சேர்த்தும், வித்யாத் என்பதைச் சேர்த்தும், நமோ நம: என்பதைச் சேர்த்தும் யாகம் செய்க.

**வல்லிதேவி பீஜம் :**

ஓம் வ்ரீம் மகாவல்லயை நம:

**தேவஸேனா பீஜம் :**

ஓம் ஹ்ரீம் தேவஸேனாயை நம:

**ஆறுமூர்த்திகளும் அவற்றின் மந்திரங்களும்:**

ஓம் ஸூம் ஸுப்ரமண்யாய நம: — ஓம் ஜகத்புவே நம:
ஓம் கும் குமாராய நம: — ஓம் ஸ்வயம்புவே நம:
ஓம் ஹம் ஹரஸூநவே நம: — ஓம் விஸ்வபுவே நம:
ஓம் ஸூம் ஸுராக்ரஜாய நம: — ஓம் ருத்ரபுவே நம:
ஓம் ஸெம் ஸேனுபதயே நம: — ஓம் பிரமபுவே நம:
ஓம் ஸூம் ஸுரேச்வராய நம: — ஓம் புவனபுவே நம:

**எண்பரிவாரங்களின் மந்திரங்கள்:**

ஓம் கம் கஜேந்த்ராய நம:
ஓம் அம் அக்னயே நம:
ஓம் யம் யமாய நம:
ஓம் நம் நிருதயே நம:
ஓம் வம் வருணுய நம:
ஓம் யம் வாயவே நம:
ஓம் ஸம் ஸோமாய நம:
ஓம் ஸூம் ஸுமித்ராய நம:

**மயில் மந்திரம்:**

ஓம் ம்ரீம் மாயூராய நம:

**சக்தி பீஜங்கள்:**

ஓம் ஶ்ரீம் சக்தயே நம:
ஓம் ஸ: சகுன்யை நம:
ஓம் ரம் ரேவத்யை நம:
ஓம் பம் பூதநாயை நம:
ஓம் மம் மகாபூதநாயை நம:
ஓம் நம் நிசிதின்யை நம:

ஓம் மம் மாலின்யை நம :

ஓம் ஸம் ச்யாமளாயை நம :

ஓம் பம் புத்தாயை நம :

ஓம் நம் நவம்யை நம :

ஓம் வம் விஸ்வதோமுக்யை நம :

**பஞ்சாயுத பீஜங்கள் :**

வேல், வில், அம்பு, அட்சமாலை, கமண்டலம் இவற்றோடு முறையே முதலில் பிரணவத்தையும், ஈற்றில் நம: என்பதையும் சேர்த்து வழங்கில் பஞ்சாயுத பீஜங்களாம்.

**எண்மூர்த்திகள் :**

கார்த்திகேயர், விசாகர், குஹர், அசுராந்தகர், ஸேநாநி, ஷண்முகர், மயூரவாஹனர், சக்திபாணி என்பவர் எட்டு மூர்த்திகள். முறையே அவர்களுடைய மந்திரம், யந்திரம், நியாஸம், தியானம், காயத்திரி முதலியன காண்க.

**ஸ்கந்தஸ்வாமி :**

ஸ்கந்த ஷடாக்ஷரமந்திரத்திற்குச் சக்தியே ரிஷி, தேவி காயத்ரி சந்த:. ஸ்ரீ ஷண்முகர் தேவதை, வம் பீஜம், பம் சக்தி:. மம் கீலகம், எனது விருப்பம் ஈடேறச் செய்யப்பெறும் ஜபத்தின் பின் விநியோகம் என்று சங்கற்பிக்க.

**நியாசம் :**

ஓம் வம் ஹ்ருதயாய நம :

ஓம் சம் சிரஸே ஸ்வாஹா

ஓம் பும் சிகாயை வஷட்

ஓம் வேம் கவசாய ஹூம்

ஓம் நம் நேத்ரேப்யோ வௌஷட்

ஓம் மம் அஸ்த்ராய பட்

**தியானம் :**

சூரியன்போன்ற காந்தியுடையவர், ஷடாக்ஷரமந்திரம் வசத்புவே நம:. இது வேண்டுவனதரும் மந்திரம், ஓம் வம் வரதசேனுன்யை பாகுலேய வசத்புவே ஸ்கந்த ஸ்கந்த சுப்ரமண்யாய நம: ஸ்வாமிந் குஹாய ஹும்பட்.

**ஸ்கந்த காயத்ரி :**

ஓம் கார்த்திகேயாய வித்மஹே
சக்திஹஸ்தாய தீமஹி
தந்நஸ்கந்த: பிரசோதயாத்.

**ஸுப்ரமண்யஸ்வாமி :**

ஓம் ஸுப்ரமண்ய மந்திரஸ்ய த்ரிபுராந்தக ரிஷி. அனுட்டுப் சந்த:. ஸுப்ரமண்யோ தேவதா. போக மோக்ஷார்த்தே ஜபே விநியோக:.

**நியாசம் :**

ஓம் ஹ்ரீம் ஹ்ருதயாய நம:
ஓம் ஸ்ரீம் சிரஸே ஸ்வாஹா
ஓம் க்லீம் சிகாயை வஷட்
ஓம் ஸும் கவசாய ஹும்
ஓம் வம் நேத்ரேப்யோ வௌஷட்
ஓம் யம் அஸ்த்ராய பட்

**மந்திரம் :**

ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்லீம் ஸும் வம் யம் ஸர்வலோகம் மே வசமானய ஷண்முகாய மயூரவாஹநாய ஸர்வ ராஜபயவிநாசநாய ஸர்வதேவசேனு பதயே ஸர்வசத்ரும்நாசய நாசய ஸுப்ரமண்யாய ஸ்வாஹா. ஓம் ஸம் கம் விம் யம் க்ஷௌம் ஸ்கந்தேஸ்வராய நம:

ஷடாக்ஷரம் ; ஓம் சரவணபவ ஹ்ரீம்.

**கார்த்திகேய ஸ்வாமி :**

நியாசம் ; முன் ஸ்கந்தமூர்த்திக்குக் கூறிய மந்திரங்களாலேயே.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீம் | ஹ்ரம் | ஹ | ஜா | ஸை | ஈஉ: |
| ஹ்ரம் | ஹ | ஜா | ஸை | ஈஉ: | ஸ்ரீம் |
| ஹ | ஜா | ஸை | ஈஉ: | ஸ்ரீம் | ஹ்ரம் |
| ஜா | ஸை | ஈஉ: | ஸ்ரீம் | ஹ்ரம் | ஹ |
| ஸை | ஈஉ: | ஸ்ரீம் | ஹ்ரம் | ஹ | ஜா |
| ஈஉ: | ஸ்ரீம் | ஹ்ரம் | ஹ | ஜா | ஸை |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸ்ரீம் | வம் | வ | ஹௌ | ந | உ: |
| வம் | வ | ஹௌ | ந | உ: | ஸ்ரீம் |
| வ | ஹௌ | ந | உ: | ஸ்ரீம் | வம் |
| ஹௌ | ந | உ: | ஸ்ரீம் | வம் | வ |
| ந | உ: | ஸ்ரீம் | வம் | வ | ஹௌ |
| உ: | ஸ்ரீம் | வம் | வ | ஹௌ | ந |



| | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| श | र | व | ण | भ | व | र | व | ण | भ | व | श | व | ण | भ | व | श | र |
| र | व | ण | भ | व | श | व | ण | भ | व | श | र | ण | भ | व | श | र | व |
| व | ण | भ | व | श | र | ण | भ | व | श | र | व | भ | व | श | र | व | ण |
| ण | भ | व | श | र | व | भ | व | श | र | व | ण | व | श | र | व | ण | भ |
| भ | व | श | र | व | ण | व | श | र | व | ण | भ | श | र | व | ण | भ | व |
| व | श | र | व | ण | भ | श | र | व | ण | भ | व | र | व | ण | भ | व | श |
| श्रीं | गं | ग | जा | यै | नमः | | | | | | | ईं | वं | व | ह्लैं | न | मः |
| गं | ग | जा | यै | नमः | श्रीं | | | | | | | वं | व | ह्लैं | न | मः | ईं |
| ग | जा | यै | नयः | श्रीं | गं | | | | | | | व | ह्लैं | न | मः | ईं | वं |
| जा | यै | नमः | श्रीं | गं | ग | | | | | | | ह्लैं | न | मः | ईं | वं | व |
| यै | नमः | श्रीं | गं | ग | जा | | | | | | | न | मः | ईं | वं | व | ह्लैं |
| नमः | श्रीं | गं | ग | जा | यै | | | | | | | मः | ईं | व | न | ह्लैं | न |
| ण | व | र | श | व | भ | व | र | श | व | भ | ण | र | श | व | भ | ण | व |
| व | र | श | व | भ | ण | र | श | व | भ | ण | व | श | व | भ | ण | व | र |
| र | श | व | भ | ण | व | श | व | भ | ण | व | र | व | भ | ण | व | र | श |
| श | व | भ | ण | व | र | व | भ | ण | व | र | श | भ | ण | व | र | श | व |
| व | भ | ण | व | र | श | भ | ण | व | र | श | व | ण | व | र | श | व | भ |
| भ | ण | व | र | श | व | ण | व | र | श | व | भ | व | र | श | व | भ | ण |

**மந்திரம் :**

ஓம் ஸூம் ஸுப்ரமண்யாய ஸ்வாஹா. ஓம் கார்த்திகேயாய பார்வதி நந்தந ஸ்கந்த வரத வரத சர்வஜனம் மே வசமாநய ஸ்வாஹா. ஓம் ஸௌம் ஸூம் ஸுப்ரமண்யாய சக்திஹஸ்தாய ருக் யஜுஸாம அதர்வணாய அசுர குலமர்த்தநாய யோகாய யோகாதிபதயே சாந்தாய, சாந்தரூபிணே சிவாய, சிவநந்தநாய, சஷ்டிப்ரியாய ஸர்வஞானஹ்ருதயாய, ஷண்முகாய, ஸ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் க்ஷம் குஹ ரவிகம் காலாய க்ாலரூபிணே ஸுரராஜாய ஸுப்ர மண்யாய நம: ஓம் நமோ பகவதே மகாபுருஷாய மயூரவாஹநாய, கௌரீ புத்ராய ஈசாத்மஜாய, ஸ்கந்தஸ்வாமிநே குமாராய தாரகாரயே ஷண்முகாய, துவாதசநேத்ராய, துவாதசபுஜாய, துவாதசாத்மகாய, சக்திஹஸ்தாய, ஸுப்ரமண்யாய ஓம் நம : ஸ்வாஹா.

**தியானம் :**

சிந்தூரப்பொடிபோற் சிவந்த நிறமும், தண்மதிபோன்ற முகமும், கேயூரம் மாலைமுதலிய ஆபரணங்களாலாகிய அலங்காரமும் உடையவரும், சுவர்க்க முதலான இன்பங்களை நல்குபவரும், தாமரை, அபயம், சக்தி, கோழி இவற்றை ஏந்தியவரும், செந்நிறமான ஆடையையும் சந்தனத்தை யும் அணிந்தவரும், பணிபவர்கள் பயத்தைப் போக்குபவரும் ஆகிய சுப்பிரமணியரை உபாசிக்கிறேன்.

வழிபாட்டுமுறை என்ற பகுதியில் குறிப்பிடப்பெற்ற நித்திய பூசையில் இம்மந்திரங்களை ஏற்ற ஏற்ற இடங்களில் அமைத்து வழிபடுக.

ஆலுக் கணிகலம் வெண்டலை
மாலை அகிலம்உண்ட
மாலுக் கணிகலம் தண்ணந்
துழாய்மயில் ஏறும்ஐயன்
காலுக் கணிகலம் வானோர்
முடியும் கடம்பும்கையில்
வேலுக் கணிகலம் வேலையும்
சூரனும் மேருவுமே.

—கந்தரலங்காரம்.

# தொகுப்புரை

முருகன் செந்தமிழ் நாட்டின் சொந்தக் கடவுள்; தமிழ் நாகரிகம் மலையுச்சியிலிருந்து தொடங்கிய காலத்திலிருந்தே மலையில் பிறந்து ஒவ்வொரு தமிழனுடைய உள்ளத்திலும் உறைவிடத்தும் புகுந்து வளர்ந்து தமிழனை வளர்த்து வருகிறார்; முருகனை மறந்த மனிதன் தமிழனாக இருக்க முடியாது; தமிழன் முருகனை மறக்க முடியாது; முருகன் கண்கண்ட கலி யுகத்தெய்வம் என்ற குறிப்புக்கள் இந்நூலின் முதற்பகுதியில் விளக்கம் பெற்றுள்ளன.

இரண்டாம் பகுதியில் முருகனுடைய தொன்மையும் இறைமையும் தோன்ற வேதாகம புராண இதிகாசங்களிலிருந்தும், தொல்காப்பியம் சங்க நூல்கள் திருமுறைகள் இவைகளிலிருந்தும் மேற்கோள்காட்டி வரலாற்று உண்மைகளும் நிறுவப்பெற்றுள்ளன.

இதனை அடுத்த பகுதி, முருகனுக்கு உரிய திருப்பெயர்களெல்லாம் ஒவ்வொரு காரணம்பற்றியே அமைந்திருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டி, சிவத்தினின்றும் முருகன் வேறன்று என்று முடிக்கிறது.

பின்னர், முருகன் திருவுருவம் எப்படி அமைந்து விளங்குகின்றது. திருவுருவ வேறுபாடுகளை நூல்கள் எப்படிக் காட்டுகின்றன என்பன சிந்திக்கப்பெறுகின்றன.

அடுத்த பகுதியில் முருகனைப்பற்றிய புராண வரலாறுகள் கந்த புராணத்திலிருந்தும், பல தலபுராணங்களிலிருந்தும் விரிக்கப்பெற்றுள்ளன. அவ்வரலாறுகளில் அமைந்து கிடக்கின்ற தத்துவ உண்மைகளும் சுருக்க மாகவும் விளக்கமாகவும் தெரிவிக்கப்பெற்றுள்ளன.

அடுத்த பகுதி முருகன் கல்விக்காகவும், வெற்றிக்காகவும், செல்வத் திற்காகவும், ஞானத்திற்காகவும், பரமுத்திக்காகவும் செந்தமிழ் மக்களால் போற்றப்படுகிறார் என்பதை விளக்குகிறது.






பிற்பகுதி முருகன் ஆலயம் தனியாகவாவது, சிவாலயத்துள் கலந்தாவது இருக்கவேண்டும் என்பதை விளக்குகிறது.

அடுத்த பகுதிகள் முருகன் ஆலய அமைப்புக்களையும், மூர்த்திபேதங்களையும், மந்திர யந்திரங்கள் வழிபாட்டுமுறைகள் உபாசனை ஆகியவைகளையும் தெரிவிக்கின்றன.

இவ்வண்ணம் வரலாற்றாராய்ச்சி முதல் உபாசனையீறாக உள்ள எல்லாப் பகுதிகளும் முருகனை ஒரளவு எண்ணி உருவேற்றி உலகம் உய்ய உபகாரப்படுவன ஆதலின், செந்தமிழ்நாடு செவ்வேட்பெருமானை முறை தெரிந்து சிந்தித்து என்றும் இன்பம் பெருக இருக்க.

துய்யதோர் மறைக ளாலும்
துதித்திடற் கரிய செவ்வேள்
செய்யபே ரடிகள் வாழ்க
சேவலும் மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட
வேற்படை வாழ்க அன்னான்
பொய்யில்சீர் அடியார் வாழ்க
வாழ்கஇப் புவன மெல்லாம்.

—கந்தபுராணம்.

*திருச்சிற்றம்பலம்.*



